## அத்தியாயம் - 1

பூவுலகில் இறைவன் படைத்துள்ள மனிதர் உட்பட சகல ஜீவராசிகளும் அற்புதமானவையே, அவை ஒவ்வொன்றும் ஏதாவதொரு அதீத சக்தியை கொண்டுள்ளவையே.

தலைகீழாக கூட்டைக் கட்டித் தொங்கியபடியே தனது இனத்தைப் பெருக்கிக் காக்கும் தூக்கணாங்குருவி அதிசயம்.

கா..கா.. எனும் கரையும் காக்கா தன்னினத்தைக் காப்பதில் காட்டும் ஒரு கரிசனை அதிசயம்.

பூக்களின் மகரந்தங்களில் தேன் பொட்டுத்துளியாய் சேகரித்து லீட்டர் அளவுகளில் தேனைத் தரும் தேனீக்கள் அதிசயம்.

இவ்வாறு ஏழு அதிசயங்களை விட பட்டியல் இட முடியாத இறைவனின் படைப்புக்களில் எண்ணற்ற அதிசயங்கள்....

மனித விஞ்ஞானத்துக்கே சவாலாக உள்ளவை ஏராளம் ஏராளம்.

### *1*

*காற்றோடு மல்லுக் கட்டுபவன் போல் இருசக்கரவண்டியை மிதி மிதி என்று மிதித்துக் கொண்டு மன்னார் பாலத்தில் இருந்து தள்ளாடி வரை உள்ள 2.2கிலோ மீட்டரைக் கடக்க ஆடிக் காற்றோடு போராட வேண்டியிருந்தது, சோதிக்கு.*
*அவனுக்குள் பல எண்ணப் போராட்டங்கள் குறுக்கிட்டாலும் அவற்றைத் தற்காலிகமாக*

ஒதுக்கிவிட்டு ஒரே குறிக்கோளாய் கேதீச்சரத்துக்கு 12.00 மணிக்கு முதல் போயே தீரணும் என்று மனதில் கணக்கிட்டவாறு, சைக்கிளை அந்த ஆடிக்காற்றை எதிர்த்து மிதித்துக் கொண்டிருந்தான்.

இடையில் அவன் வயசுப் பொடியன்கள் கூட இந்தக் காற்றை எதிர்த்து மிதிக்க முடியாமலே சைக்கிள்களைத் தள்ளியவாறு இவன் பின்னே நடந்து வந்தனர். கடல் அலை கரையைத்தொட்டு விட, இடையில் எதிர்ப்படும் மோட்டார் படகுகளை விலத்திக் கொண்டு போவது போல், அவர்களை எல்லாம் விலத்திக் கொண்டு சோதியும் போய்க் கொண்டிருந்தான்

தனது இலக்கை அடைய வேண்டும் என்ற நோக்கம் இருந்தமையால், 36வது நிமிடத்தில் தள்ளாடிச் சந்திக்கு வந்து விட்டான்.

அவனுக்கு சிரிப்பு வந்தது, அனுமனை நினைக்கும் போது. அந்த சிரஞ்சீவி மலையைக் கொண்டுவந்த அவரே இந்தத் தள்ளாடியில்தான் களைச்சுப் போய் விட்டார் என்று கதை சொல்வர். நானும் ஒருமாதிரி ஆடிக்காற்றை வென்று இங்கே வந்து விட்டேன். அப்படி நினைத்துக் கொண்டே அடுத்த இலக்கை நோக்கி சைக்கிளை மிதிக்கவும் தெம்பு வந்து விட்டது. 'சோதியா கொக்கா..' தனக்குத் தானே சொல்லி தன் தேகத்துக்கும் மனசுக்கும் சக்தியை மீள் நிரப்பினான்.

தள்ளாடி ராணுவமுகாம் தாண்டி ஒரு கிலோ மீட்டர் கடந்திருப்பான். இரண்டு பெண்கள் ஸ்கூட்டி ஒன்றை தள்ளிக் கொண்டு வந்தார்கள்.

அவர்களில்— ஸ்கூட்டியைத் தள்ளிக் கொண்டு வருபவளைத் தெரியும், பரந்தாமன் அங்கிள் மகள் ராதா. மற்றவளை — ஸ்கூட்டி ஹேண்டிலை பிடித்துக்கொண்டு வருபவளை— அவளுடன் அடிக்கடி கோவிலில் பார்த்த ஞாபகம்

அவர்கள் அருகில் சைக்கிளை நிறுத்தினான்...

"சோதி... நீங்களா... நல்லவேளை கடவுள்தான் உங்களை அனுப்பியிருக்கார்."

"ஏன் என்ன நடந்தது....?"

"நாகத்தாழ்வு சந்தி வரும் போது ஸ்கூட்டி ஓடமாட்டேங்குது. பெற்றோல் நிறையவே இருக்கு. ஆனால் ஸ்டார்ட் ஆக மாட்டேங்குது."

அவன் சைக்கிளை ஓரமாய் நிறுத்தி விட்டு ஸ்கூட்டியில் திறப்பைப் போட்டு உதைத்துப் பார்த்தான். பின் அதை ஸ்டாண்டில் நிறுத்திவிட்டு ப்ளக் வயரை சோதித்தான் அவன் யூகித்தது சரி. பிளக் ஒயர் சரியான டச்சில் இல்லை. நிமிஷத்தில் அதை சரி பண்ணிவிட்டு, திறப்பைப் போட்டு திருப்பி ஸ்டார்ட் பட்டனை அமுக்க அது உயிர்த்துக் கொண்டது.

"சோதி கை வைச்ச உடனே சரி வந்துட்டுதே?"

"சரி..இதை சேர்விஸ் பண்ணி எத்தனை மாதம்?.."

"வாங்கினதுக்கே சேர்விஸ் பண்ணவில்லையே..." சொன்னவள்— கூட வந்தவள்.

"அதுதான்.. ப்ளக் ஒயர் சரியா டச் ஆகாமல் ஸ்டார்ட் ஆகவில்லை.சரி இனி நீங்க பயமில்லாம போங்க நிற்காது."

"ரொம்ப நன்றி" என்று அந்தப் பெண் சொன்னாள்

"சரி பரவாயில்லை உங்க ஸ்கூட்டிதானே?"

"ஓம்..."

"உங்க பெயர் தெரியாதே எனக்கு...?"

"சுவாதி...".

"சுவாதி... ஆங்..சுவாதி . ராதாவுக்கு நம்ம கராஜ் தெரியும் ஒரு நாள் காலையிலே விட்டுட்டு பகல் 3.00 மணிக்கு எடுத்துட்டுப் போங்க. ஃபுல் சேர்விஸ் பண்ணி வைக்கிறேன். போய்ட்டு வாங்க சரி நான் வாரன்" என்று சொல்லி விட்டு சைக்கிளில் ஏறினான்.

அடுத்த 20வது நிமிடத்தில் நாவற்குளம் சந்தி வந்து விட்டது.

'ஆஹா இனி சொர்க்கம் தான்' இதோ காற்றில் மிதந்து செம்மண் பாதையில் சர்ரென்று பாலாவி அணைக்கட்டு தாண்டலாம்.அப்புறம் என்ன சின்னதாய் ஒரு மிதி ..' விதானை வீடுதாண்டி வெள்ளையன் தோட்ட மேட்டுக்கு நாலு மிதி எழும்பி எழும்பி மிதித்து இடது பக்கம் திருப்பினால் கோவில் வரை மீண்டும் காற்றில் மிதந்து சென்றுவிடலாம்.

மனசில் கணக்கிட்டு அடுத்த 7வது நிமிடம் கோவில் வாசல் வந்தடைந்தான்.

சக்தி இழப்பின் அடையாளமாய் மேனியெங்கும் வியர்வை மீண்டும் வழிந்தோட ஆரம்பித்தது.

'அப்பாடா' என்று... கொன்றை மர நிழலில் சைக்கிளை நிறுத்தி விட்டு மேற்சட்டையை கழற்றிக் கொண்டான். வேகமாக வெப்பக் காற்று வீசினாலும் அந்த வியர்வைக்கு ரொம்ப இதமாக இருந்தது.

அப்போ மதிய பூசைக்கு ஆயத்த மணி அடித்தார்கள் .

தொட்டியடியில் சென்று கை கால், முகம் அலம்பிக் கொண்டு சைக்கிள் கரியரில் இருந்த துண்டால் துடைத்து விட்டு, அதையே இடுப்பில் சுற்றிக் கொண்டு ஆலய அலுவலகத்துக்கு வந்தான். அவனுக்கு முன் சில பக்தர்கள், ஆளுக்கொரு, தீபம் வாங்கினர். அதைப் பார்த்த இவனும் ஒரு நெய்தீபம் வாங்கிக் கொண்டான். கோபுர வாசிலில் விநாயகரைப் பார்த்து வணங்கிவிட்டு பெரிய நந்தியிடம் மானசீகமாக அனுமதி பெற்று உள்ளே நுழைந்த போது மூலஸ்தானத்தில் அடுக்குத்தீபம் காட்டப் பட்டது. ஒவ்வொரு பூசையையும் பார்த்துவிட்டு கடைசியில் கோவில் உள்வீதியை சுற்றி வந்தான் அவன் கையில் தீபம் இருந்தது.
அவன் வைரவர் வாசலுக்கு வந்த போது பூசை முடிந்து கோவில் கொடிமரத்து மண்டபத்தில் பிரசாதம் வழங்குவதைப் பார்த்தான். இவன் கையிலிருந்த தீபத்தை வைரவருக்கு முன்னால் ஏற்றி வைத்து விட்டு, அவசரம் அவசரமாக நவக்கிரகத்தையும் ஓர் எட்டு கும்பிட்டு விட்டு ஓடிப் போய் பிரசாதம் பெற்றுக் கொண்ட போது அவன் மனதில்,
பெரும் நிம்மதி.... திருப்தியை... உணர்ந்தான். கீழே விழுந்து வணங்கிவிட்டு வெளி வாசலுக்கு வந்து துவார முருகனையும் கும்பிட்டு விட்டு அலுவலகத்துக்கு முன் இருந்த சிமிந்து மேட்டில் இறங்கினான். அப்போது அருகில் வந்த ஒரு பக்தர் இன்னொரு பக்தரிடம்,

“அடடா.... என்ன வெயில்.... அஷ்டமி நாள் இன்று. இந்த ஆடிக் காற்றுக்குக் கூட பின்னேரம் ஒரு மழை அடிக்கும். பெய்தால் கொஞ்சம் வெக்கையும் குறையும்”– என்று சொல்லிவிட்டு, கால்களில் அந்தச்

சிமிந்து மேட்டின் சூடு தாங்காமல் விறு விறு வென அவர்கள் இறங்கினார்கள்.
அவர்களுடன் போன இவனோ சூடு உணராமலே இறங்கிப் போனான்.
மீண்டும் கொன்றை மர நிழலுக்கு வந்தவனை சில பக்தர்கள்,
"தம்பி அன்னதானம் இருக்கு சாப்பிட்டுப் போ" என்றனர்.
அன்னதானத்தில் நல்லாச் சாப்பிட்டு வந்தவன், நண்பன் கிருஷ்ணா வருமட்டும் கோவில் கட்டுமான வேலைக்காக அடுக்கப் பட்டிருந்த கருங்கல்லுகள் தென்னை மரங்களின் நிழலில் மேடைகள் போல் இருப்பதைக் கண்டு, ஒரு மேடையில் உட்கார்ந்து இளைப்பாறினான். தன்னைமறந்து உட்கார்ந்தவன் தூங்கியும் போனான்

கண்விழித்தவன் நேரத்தைப் பார்த்து விட்டு சட்டையை மாட்டிக்கொண்டு, சைக்கிளில் கிளம்பி கிருஷ்ணாவின் வீட்டுக்கு வந்தான் அவன் இன்னும் வரவில்லை. கிளம்பி மாந்தையால் சங்குப்பிட்டிப் பாதைக்குத் திரும்பினான். பாப்பாமோட்டையில் அவன் ஒருவரைப் பார்க்க வேண்டியிருந்தது.

அப்போது 'யமஹா 50' மோட்டார் சைக்கிள் ஒன்று, அவனைக் கடந்து சென்றது. அதனையே ஆடிக்காற்று தன் வசப்படுத்த முற்பட்டாலும் அதில் பயணித்த நபர் நல்ல தேகக் கட்டாய் இருந்ததால் மோட்டார் சைக்கிளை தனது கட்டுப்பாட்டுக்குள் வென்றவர் போன்று வேகம் எடுத்துப் பயணித்தார். அந்நபரின் முதுகில்–

ரைபிள் துப்பாக்கி!

சோதி அந்நபர் கடந்து செல்லும் போது கவனித்தான்.

அந்த ஆள்– பாசிமுத்து. மாடு பிடிகாரன். மாடுகளைக் களவாடி விற்கிறவன்.

சோதியின் மனதில்.. தோன்றியது

அவன் ஏதோ திட்டத்தில் ரைபிளோடு போகிறான். இயலுமானால் கவனிப்போம். என்று நினைத்தவாறு, சைக்கிளை மிதித்துக் கொண்டிருந்தான். அடுத்த வளைவு நல்ல தண்ணிப்பிட்டி மயான வளைவு அது.

அந்த வளைவு மேட்டுடன் கூடிய ஒரு வளைவு. அந்த மேட்டின் ஓரத்தில் வியாய மரம் ஒன்று, சடைத்து வளர்ந்து நிழல் தந்து கொண்டிருக்கும், அதன் கீழ் பாசி முத்துவின் மோட்டர் பைக் நின்றது. ஆனால் பாசி முத்து அவ்விடத்தில் காணவில்லை.

சோதி அந்த இடத்தில் சைக்கிளில் இருந்து இறங்கி நிழலில் இளைப்பாறுவது போல் நின்றவாறு சுற்றும் முற்றும் கவனித்தான்.

மேட்டின் கீழ்... பாசி முத்து ஒரு எருக்கலம் செடி பின்னால் மறைந்து நின்றவாறே ரைபிளை எதற்கோ குறி பார்த்து நீட்டிய படி சுடுவதற்கு தயாராய் இருந்தான்.

சோதி அவனின் இலக்கு எதுவாக இருக்கும் என்று யோசித்தவாறு தூரப் பார்த்தான் சற்று தூரத்தில் ஒரு பசுமாடு மேய்ந்துகொண்டு இருந்தது. நல்ல வாட்ட சாட்டமான பசு. தள்ளி இன்னும் இரண்டு மாடுகளும் கன்றுக் குட்டியொன்றும் மேய்ந்தவண்ணம் இருந்தன.

சோதி ஏங்கிப் போனான். இதைத் தடுக்க வேண்டும். இவன் அந்த மாடுகளில் ஏதோ ஒன்றின் காலில் சுட்டு விட்டால் அதனை இலகுவாக லொறியில் ஏற்றிக் கொண்டு போவான். இடையில் போலிஸ் பிடித்தால் அதனை மிருக வைத்தியரிடம் கொண்டு போவதாகச் சொல்லி ஏமாற்றி விடுவான் அல்லது காசு கொடுத்து போலிஸை சமாளித்து விடுவான்

'கடவுளே நீதான் காப்பாற்ற வேண்டும். இவனெல்லாம் பாம்பு கொத்திதான் சாகனும். கடவுளே கடவுளே நீதான் இந்த பசுக்களைக் காக்கனும்.'

—என்றவாறு கண்ணை மூடிப் பிரார்த்தித்தான்.

அப்போது –

'ஐயோ' என்று யாரோ அலறுவதுடன் துப்பாக்கி சூட்டுச் சத்தமும் கேட்டது.

திடுக்கிட்டு கண்ணைத் திறந்து கீழே பார்த்தான். பாசிமுத்து துப்பாக்கியை கீழே போட்டுவிட்டு, கணுக்காலைப் பிடித்துக் கொண்டு, "ஐயோ பாம்பு கடித்துவிட்டதே" என்று கதறினான், அருகில் 5 அடி நீளமான கரு நாகம் நகர்ந்து கொண்டு இருந்தது.

அவன் கத்தியதினாலும் துப்பாக்கி வெடித்த ஓசையினாலும் மாடுகள் அரண்டுபோய் தூரத்தில் மிரண்டவாறு ஓடிக் கொண்டு இருந்தன.

நல்லவேளை மாடுகள் எதுவும் சாகவில்லை.

கடவுளுக்கு நன்றி சொல்லி விட்டு, பாசிமுத்துவைப் பற்றி எதுவும் கவலைப் படாது அவன் பாட்டுக்குப் போக—எண்ணினான். ஆனால் அவ்வாறு அவன் செய்யவில்லை.

அதே வேளை அவனுக்கு உதவி செய்வதற்கு மனம் விரும்பினாலும் கடவுள் கொடுத்த தண்டனைக்கு மேல் தான் உதவி செய்து காப்பாற்ற முயற்சிப்பது சரியா என்று குழம்பினான்.

அப்போது தபால்காரர் செல்லத்துரையாரும், சோமு விதானையும், மாட்டு வண்டிலில் வந்து கொண்டிருந்தனர்.

சோதி அவர்களை இடை நிறுத்தி பாசிமுத்துவை பாம்பு கடித்ததைப் பற்றி சொன்னான்.

செல்லத்துரையார் ஒரு பரம்பரை பரியாரியும் கூட.

அவர் கீழிறங்கி உடனே அருகில் நின்ற பூவரசம் இலையையும் வியாய மர இலையையும் பிடுங்கிக் கொண்டு ஏதோ முதலுதவிகள் செய்தார். கூட சோமு விதானையும் உதவினார். பச்சிலை கட்டிவிட்டு அவனை இருவரும் கைத்தாங்கலாய்த் தாங்கிய வண்ணம் மாட்டு வண்டிலில் ஏற்றித்தன் வீட்டுக்கு – ( பாப்பாமோட்டைதான் அவர் ஊர்) புறப்பட்டார்.

செல்லத்துரையர் பாசிமுத்துவிடம் பேச்சுக்கொடுத்து கொண்டு வந்தார். அவன் மயங்கித் தூங்காமல் இருக்க பிரயத்தனமாக பேச்சுக் கொடுத்துக் கொண்டிருந்தார்.

“அடே பாசி முத்து நீ இறைச்சிக்கு மாடுகளை சுட்டு பிடிச்சு விற்கிறவன் தானே, இன்றைக்குப் பார் கடவுளாய் பார்த்து உன்னைப் பாம்பு கடிக்க வைத்து மாடே தனது வண்டிலில் உன்னைக் காப்பாற்ற ஏற்றிக் கொண்டு போகுது. இனியாகிலும் மாடுகளை சுடுவதையும் பிடிப்பதையும் இறைச்சிக்கு விற்பதையும் நிறுத்து.”

*வண்டிலுக்குப் பக்கத்தால் சைக்கிளில் போய்க் கொண்டிருந்த சோதி, 'அவர் சொன்னது சரியே' என்று ஆமோதித்தான் (மனதில் தான்)*
*கடவுள் கருணை மிகுந்தவர்.*

*சோதிக்குப் பகல் வைரவருக்கு நெய்தீபம் ஏற்றி ஒரு கும்பிடு போட்டதும், அன்று தேய்பிறை அஷ்டமி என்று ஒரு பக்தர் சொன்னதும் ஏனோ சட்டென்று மனசில் ஓடியது.*

## *2*

மனிதன் தன்னுள் இருக்கும் அதிசய சக்தியை எப்பொழுது உணருகின்றானோ அவன் சித்தனாகிவிடுவது திண்ணம்.

அந்த அதிசய சக்தியின் அடிப்படையே தனது மனம் என்பதனை ஏனோ அவன் முற்றும் உணரத் தலைப்படுவது இல்லை.

எட்டாம் சக்தியாக எப்போது அவன் அந்த உணர்வைப் பெறுகின்றானோ அப்போது அவன் மனித சக்தியின் உண்மை வடிவமான ஆன்ம பலத்தைப் பெற்று விடுகின்றான்.

அந்த எட்டாம் சக்தியை அடைய அவனுக்கு இறைவன் ஆறு திறவுகோள்களாக ஆறு சக்திகளை அளித்துள்ளான்.

நூதனமாய்த் தயாரிக்கப் பட்ட ஒரு பெட்டகத்தின் பூட்டைத் திறக்க ஒன்றுக்கு மேற்பட்ட சூத்திரங்களுடன் அது தயாரிக்கப் பட்டிருக்கும். முதலில் திறந்த சூத்திரம் மூடப் படும் அதே வேளை இன்னொரு சூத்திரம் திறக்கும் அதேவேளை இந்த சூத்திரம் மூடும் கடைசியில் பூட்டு திறப்பது போன்று மனிதனுள்ளும் பல சூத்திரங்கள் அடங்கியுள்ளன. இவற்றைத் தெரிந்து கொள்ள தியானம் யோக சூத்திரம்

போன்ற நிலைகளை வென்று வரவென ஆரம்ப சூத்திரங்களை இலகுவாக ரிஷி மகான்களும், சித்தர்களும் சொல்லித் தந்துள்ளனர். தன்னை அறிந்தவன் தன்னிகரற்ற சக்திமான் ஆகி விடுவான்

*சோதி—இப்போ ஒரு சாதாரண டிராக்டர் மெக்கானிக். இரண்டு வருடங்கள் முன்பு வரை அவன் பெற்றோருடன் – அவன், அப்பா ராஜ நாயகம், அம்மா கற்பகாம்மா மூவர் மட்டுமே – கேதீச்சரத்தில் சம்பந்தர் மடத்துக்கும் அம்மா மண்டபத்துக்கும் இடையில் இருக்கும் – செட்டியார் மடத்தில்தான் இருந்தார்கள் . அவன் பிறப்பும் அடம்பன் ஆசுபத்திரிதான். படித்தது – 5ம் வகுப்பு வரை கௌரிஅம்பாள் வித்தியாலயத்திலும், 6 — 10ம் வகுப்புவரை அடம்பன் மகா வித்தியாலயத்திலும் தான். அவனது நல்ல நண்பனாக 'கிருஷ்ணன்' மட்டுமே இருக்கிறான். ஜீ.சீ.ஈ ஓ/எல் பரீட்சை 7 பாடம் பாஸ் பண்ணினாலும், மேலே படிக்கவில்லை.*

*கிருஷ்ணா கொஞ்சம் மேலே படித்து பாங்கிங் என்று எதோதோ சோதனைகளைச் செய்து விட்டு வேலைக்கு விண்ணப்பித்த வண்ணம் இருந்தான். அவர்களது சொந்த சாப்பாட்டுக் கடையில் சித்தப்பாவுடன் சேர்ந்து கடையைப் பார்த்துக் கொண்டிருக்கிறான்.*

*அப்பாவுக்கு உடல் நலம் சீர்கெட அப்பா வேலை பார்த்த அடம்பன் கராஜ்லேயே அப்பா பார்த்த மெக்கானிக் வேலையை செய்ய ஆரம்பித்து விட்டான். முதலில் பிடிக்கா விட்டாலும் வருமானத்துக்காக செய்யத் தொடங்கினான்.*

விரைவிலேயே முதலாளியை விஞ்சும் அளவு கெட்டிக்கார மெக்கானிக்காக மாறி விட்டான். முதலாளியைக் கேட்டு வருபவர்களை விட, 'சோதி இருக்கானா?' என்று கேட்டு வருபவர்களே அதிகரித்தனர்.

அதனால் முதலாளிக்கும் இவனுக்கும் இடையில் மனதளவில் முரண்பாடுகள் அதிகரிக்க அவன் அப்பாவின் சேமிப்பில் இருந்த பணத்தில் மன்னாரில் ஒரு லேத் பட்டறை விற்கவர அதை வாங்கி லேத் பட்டறையுடன் கராஜையும் வாங்கி, பெற்றோருடன் அங்கேயே குடியேறி விட்டான்.

அவனுக்கு கேதீச்சரத்தை விட்டு போக மனசு இல்லையானாலும் தொழிலுக்கு ஏற்ற மாதிரி கராஜ்ஜூம் அமைந்து விட்டதால் கராஜ்ஜில் மேல் உள்ள மாடியில் பெற்றோருடன் குடியேறி விட்டான். வருமானமும் பெருக ஆரம்பித்தது.

**– தியானமும் புட்டுப் பூசையும் –**

**கேதீச்சரத்தில் இருந்த நாட்களில்** தினமும் மாலையில் 6.00 மணிக்கு பெரிய பூசை முடிந்து இரவு8.00 மணிக்கு அர்த்த சாமம் பூசை நடைபெறும். தினமும் கிருஷ்ணனுடன் சோதி மாலைப் பூசைக்கு வருவான். அநேகமாக வரும் நேரம் அம்மனுக்கு நடைபெறும், கடைசி சந்நிதி பூசையாகத்தான் இருக்கும்.

பூசை முடிந்த பின் வழமை போல் பெரிய மகாலிங்கத்துக்கு முன்னால் உள்ள தூணருகில் இருவரும் அமர்ந்து தியானத்தில் அமருவதை வழக்கமாக்கிக் கொண்டனர்.

*தியானம் என்றால் கண்ணை மூடிக்கொண்டு ‘ஓம்’ என்று மட்டுமே சொல்லிக் கொண்டு தியானத்தில் இருக்கப் பழகி விட்டனர். சில வேளைகளில் இருவரும் சீக்கிரத்திலேயெ தூங்கி விடுவர். 7.50க்கு ‘டிங்க் டிங்க்’ என்று அர்த்த சாமத்துக்கு ஆயத்த மணிச் சத்தம் கேட்டுத் திடுக்கிட்டு எழுந்து கொண்டு ஒருவரை ஒருவர் பார்த்து அசடு வழிந்து எழுந்து வருவர்.*

*சில நாட்களில் சந்நிதி கதவுகளைச் சார்த்த வரும் உதவிகுருக்கள் இவர்கள் மண்டையில் குட்டிவிட்டு அப்பால் மறைவில் சென்று விடுவார். பெரும்பாலும் ‘ஓம் நான் தூங்குகிறேன்’ என்னும் தியானம் தான், இவர்கள் பண்ணுவது.*

*அர்த்த சாமம் பூசையின் இறுதியில் வைரவருக்கு பூசை ஆகி புட்டுப்பிரசாதம் கொடுக்கும் போது அதைச் சாப்பிட்டு கிடைக்கும் திருப்திக்காகவே கோவிலுக்கு வரும் வழக்கம் பெரும்பாலான பக்தர்களுக்கு உண்டு. இவர்களும் கூடத்தான்..*

***அன்று வெள்ளிக்கிழமை.***

*‘புட்டுப் பூசை’ முடிந்து கிருஷ்ணனுடன் கடைக்கு வந்த சோதி, இரவுச் சாப்பாட்டை கிருஷ்ணன் கடையில் முடித்துக் கொண்டான். கிருஷ்ணன் 9.00மணிக்கே கடையை மூடினான். வழமை போல் வெள்ளாங்குளத்தில் இருந்து 10.30க்கு வரும் பஸ்ஸுக்காக காத்து நின்றான்.*

*10.30 மணி பஸ் எப்போதும் ஒழுங்கான நேரத்தில் வருவதில்லை. கிருஷ்ணனும் அவனும் பழைய கதை ,*

பழைய படக்கதைகள், சரோஜா தேவி சாவித்திரி என்று கதைகள் சுற்றிச் சுற்றி சரோ டீச்சர்,பெஞ்சமின் டீச்சர் என்றெல்லாம் சுற்றி, கடைசியில், அன்றைய நடப்பு விவகாரங்களை அலச ஆரம்பித்தனர்.

“கிருஷ்ணா நீ இந்த வைரவர் பூசையைப் பற்றி என்ன நினைக்கிறாய்?”

“ஏன் சோதி. நாம் இன்று நல்லாயிருப்பதற்குக் காரணமே வைரவர்தான்.”

“ஓம் கிருஷ்ணா அதை நான் உணர்ந்தாலும் உன் மனசுக்கு எப்படி அப்படிச் சொல்ல வைத்தது?”

“சோதி. நாங்க கோவிலுக்குப் போறோம், தியானம் பண்ணுறோமோ இல்லையோ பெருமான் சந்நிதியில் நல்லா தூங்கி எழும்பி அப்புறம் வைரவர் புட்டுப் பிரசாதத்தை ஆசையா சாப்பிட்டு வருகிறோம் இல்லையா. அந்த பிரசாத பலன் பெரும் சக்தி மிக்கது என்று நேற்று ரேடியோவில் ஒரு பிரசங்கம் கேட்கும் போது காதில் விழுந்தது.”

“உண்மைதான் கிருஷ்ணா.. போன கிழமை மாடு பிடிகாரன் பாசிமுத்துவை பாம்பு கடித்தது பற்றிச் சொன்னேன் அல்லவா. பாம்பு அவனைக் கடிப்பதற்கு முன்னால் நான் பாம்பைப் பார்க்கவே இல்லை. ஆனால் அவன் பாம்பு கடிச்சுச் சாகனும் என்று பிரார்த்தித்தேன். அதுமாதிரியே நடந்தது.”

“ஓமோம் நீர் சொன்னீர் சோதி”

“சொன்னேன் .. கிருஷ்ணா உனக்குத் தெரியுமா? அதற்குக் காரணம். அன்று அஷ்டமி!”

“அஷ்டமிக்கும் பாம்பு கடித்ததுக்கும் என்ன சம்பந்தம் சோதி.”

“இருக்கு கிருஷ்ணா. நான் நெய்தீபம் வாங்கி ஏற்றி வைக்கும் பழக்கம் இல்லை என்று தெரியும்தானே...?”

“ஓமோம் ஓமோம் .... சோதி... எனக்கும் நெய் தீபம் ஏற்றும் வழக்கம் இல்லை.”

“அன்றைக்கு எனக்கு முன்னால் சில அடியார்கள் நெய்தீபம் வாங்கிக் கொண்டிருப்பதைப் பார்த்து நானும் வாங்கிப் போனேன். மத்தியானப் பூசை முடிந்து பிரசாதம் வாங்கும் ஆர்வத்தில் அவசரமாக அந்த தீபத்தை வைரவர் சந்நிதியிலேயே ஏற்றிவிட்டு வெளியே வரும்போது, யாரோ ‘அன்று தேய் பிறை அஷ்டமி’ என்று சொன்னார்கள் . ‘தேய்பிறை அஷ்டமியில் வைரவருக்கு தீபம் ஏற்றி வழிபடுவது நல்லது’ என்று அம்மாவும் அடிக்கடி சொல்வார்கள்.

நான் எதேச்சையாக ‘கடவுளே அந்த பாசிமுத்துவைப் பாம்பு கடித்து சாகக் கூடாதா’ என்று. பிரார்த்தித்த வேளை அதுமாதிரி கடவுள் தண்டனை கொடுத்து விட்டார்.

“நீ சொல்றது ஆச்சரியமாய் இருக்கு சோதி. கடைசியில் அந்த பாசிமுத்துவின் கதி என்னாச்சு?”

“நேற்று செல்லத்துரையாரை மன்னாரில் பார்த்த போது சொன்னார், ‘மாசிமுத்து பிழைத்து விட்டாலும் அவன் கைகால் நடுங்கிக் கொண்டு கூன் விழுந்த கிழவன் மாதிரி’ நடக்கிறானாம்”

“அவன் செய்த கர்மாவை அப்படித்தான் அனுபவிக்கனும் என்று கடவுள் அவனை உயிரோடு விட்டிருக்கார் போல”

*“கிருஷ்ணா நீயும் நானும் எமது 6– 7 வயசிலேருந்து கோவிலுக்குப் போகிறோம் தானே.”*

*“ஓமோம் அதுக்கென்ன இப்போ..?”*

*“கிருஷ்ணா உனக்கு ஒரு சம்பவம் முன்பு சொன்னேனோ? ஞாபகம் இல்லை. அதுக்கும் வைரவருக்கும் ஏதோ சம்பந்தம் இருக்கு என்றே இப்போ நினைக்கத் தோன்றுது.”*

*“என்ன சம்பந்தம்? சம்பவம் ஏதும் நீ வித்தியாசமாய்ச் சொன்னதாய் ஞாபகம் இல்லையே.”*

*“அது .... கிருஷ்ணா நான் 9ம் வகுப்பு படிக்கும் போது கணக்கிலே மக்கு. அதனால் நான் பூபால மாஸ்டரிட்ட கணக்கு படிக்கப் போய்ட்டு வருவது வழக்கம். நீ யாழ்ப்பாணத்திற்கு உன் அக்காவைப் பார்க்கப் போய் ஒருமாசம் நின்ற நேரம்...*

*3*

**வைரவர் வழிபாடு!**

வைரவர் வழிபாடுகளை பற்றி -

சிவபெருமானின் அறுபத்து நான்கு திருமேனிகளுள் வைரவரும் ஒருவராவார். இவர் வைரவர் என்றும் அறியப்படுகிறார். வைரவரின் வாகனமாக நாய் குறிப்பிடப்படுகிறது. இதனால் தமிழ்நாட்டில் நாய்களுக்கு வைரவர் என்ற பொதுப் பெயரும் வழக்கத்தில் இருக்கிறது. வைரவரை

சொர்ணாகர்ஷண வைரவர், காலவைரவர், சண்ட வைரவர், உன்மத்த வைரவர், அசிதாங்க வைரவர், ருரு வைரவர், குரோதண வைரவர், சம்கார வைரவர் மற்றும் பீஷண வைரவர் என்று நவ வைரவர்களாக வழிபடுகின்றார்கள். (வைரவர்களில் 64 வகை உண்டு.

பூபாலன் ஓய்வு பெற்ற மலேசியத் தமிழர்.. மலேசியா மடம் அவர் பொறுப்பில் இருந்தது. அவர் மாணவர்களுக்கு திறமையான விதத்தில் ஆங்கிலமும் கணக்கும் டியூஷன் சொல்லிக் கொடுப்பதால் பல கிராமங்களில் இருந்து நிறைய மாணவர்கள் மாலை 8.00மணி வரை வந்து கற்றுச் செல்வர் பூபாலன்மாஸ்டர் சோதிக்கு மட்டும் இரவு 8.30ல் இருந்து 9.30 வரை சொல்லிக் கொடுப்பார்.

அதுவும் ஒரு வார இறுதி நாள் வெள்ளிக்கிழமை திங்கள் கிழமை ஜீ சீ ஈ சோதனை தொடக்கம், பூபாலன் கடந்த வருடங்களில் நடைபெற்ற கணித பரீட்சைகளின் வினாத்தாள்களை செய்து பார்க்க கொடுத்து இருந்தார். சோதி ஆர்வமாய் செய்ய ஆரம்பித்தான்.

செய்யத் தொடங்கு முன் மாஸ்டர் சொன்னார்.

" சோதி இது மூன்று மணித்தியால பேப்பர். 8.45 இப்ப. நீ இப்பத் தொடங்கினா எப்படியும் முடிய 11.45 ஆகிவிடும் . நான் தூங்கப் போகிறேன் நீ செய்திட்டு மேசையிலே வைச்சுட்டு போ. நான் காலையில் சரி பார்க்கிறேன். நீ நாளை மத்தியானம் வந்து நீ எப்படி செய்துள்ளாய் என்று பார்"

"சரி மாஸ்டர் "

கேதீச்சரத்தில் மின்சார ஜெனரேட்டரை 9.00 மணிக்கு நிற்பாட்டிவிடுவார்கள்.

சோதி எப்பவும் லாம்பு வெளிச்சத்தில்தான் படிப்பது வழக்கம் அது அவனுக்கு விருப்பமான ஒன்று. லாம்பு

*வெளிச்சத்தில் மனசு நன்கு லயித்துப் படிப்பது எல்லாம் நல்லா மண்டையில் ஏறும்.*

*சரியா 11.45க்கு பேப்பரை செய்து விட்டு விடைத்தாளை மேசையில் வைத்து விட்டு லாம்பு வெளிச்சத்தை குறைத்து விட்டு வீட்டுக்கு புறப்பட்டான். படலையை மூடி விட்டு சற்று நிதானித்தான். புளிய மரங்களுக்கு இடையால் போனால் குறுக்கு வழி*
*ஆனால் அப்பா எப்பவும் சொல்வார் எப்பவும் இரவு வேளைகளில் புளிய மரங்களுக்கிடையில் வருவதை தவிர்க்கனும் என்று .*

*அவனுக்கு தெரியும். இரவில் புளிய மரங்கள் நைதரசனை நன்கு வெளியிடும்.அதனால் அது ரொம்ப நேரம் அம்மரங்களின் கீழே நின்றால் தான் உடலுக்கு கெட்டுதி என்று. ஆனாலும் அப்பா சொல்வதை தட்ட விரும்பவில்லை.*

*சரி அம்மா மடத்து பக்கத்தால் போகலாமென்று தீர்மானித்தான்.*

*அப்போ ஒரு கறுப்பு வெள்ளை நாய் ஒன்று அருகில் செல்லமாய் முனங்கிக் கொண்டு வந்தது. அதனைப் பார்க்க ஏனோ அவனுக்குப் பயம் வரவில்லை. இவன் அதைத் தடவிக் கொடுத்து விட்டு நடக்க ஆரம்பிக்க, அந்த நாய் இவனுக்கு முன்பாக வாலை ஆட்டி ஆட்டிக் கொண்டு இவனைத் திரும்பிப் பார்த்து பார்த்து நடந்தது. சோதிக்கு அந்த நாய் என்னவோ வழித்துணை பாதுகாப்பாக உணர்ந்து அந்த அரை நிலவு இருட்டில் பயமின்றி நடந்தான்,*

வானத்தில் நிலாவின் அளவைப் பார்த்தவன் இன்று அநேகமாக தேய்பிறையின் ஏழாவதோ எட்டாவதோ நாளாக இருக்க வேணும் என்று நினத்தான்.
அம்மா மடத்து முடக்கில் நின்ற ஆலமரத்தை நெருங்கும் போது எப்போதும் இல்லாத பயம் ஒன்று குப்பென வந்தது.
மாடுகள் கன்று ஈன்ற பிறகு விழும் இளங்கொடி போன்ற ஒரு குவியலை ஓலைக் குடலையில் சேகரித்து முட்டையாய் கட்டி அதனை அந்த ஆலமரத்துக் கிளைகளில் கட்டி விடுகிறார்கள்.
அந்த ஆலமரத்தில் இரவு வேளையில் அவற்றை சாப்பிட பேய் வருவதுண்டு என்று ஊர் வாய்கள் சொல்லிக் கேட்டு இருக்கிறான். 'அட, நானோ இந்த 12.00 மணியாகும் வேளையில் இந்த மரத்துக்கு கிட்ட வந்து விட்டேனே. பேசாமல் புளிய மரத்து வழியால் போயிருக்கலாமோ' என்று நினைத்தவன், 'அந்த நாய்தான் நமக்குத் துணையாய் முன்னுக்குப் போகுதே நாய்களுக்குத்தான் பேய்களை கண்ணுக்குள் தெரியுமாம். நல்ல வேளை நாய் நமக்குத்துணையாக வருதே' அப்போ முன்னுக்குப் போகும் நாயைப் பார்க்க நினைத்த போது அவனுக்குப் பகீர் என்றது.
அட நாயைக் காணோமே? 'ஜ்...ஜ்...ஜ்ஜ்'... என்று கூப்பிட்டுப் பார்த்தான். அவனுக்கு குப்பென உடம்பெல்லாம் வியர்த்துக் கொட்டியது. அப்போ அவன் அந்த அலமரத்து அடியில் கிளைகளின் இருட்டினால் நாய் கண்ணுக்குத் தெரியாமல் போய் இருக்கும் என்று மனசில் பயத்தை துடைக்க நினத்தான் ஆலமரத்துக்கு இடையில் பார்த்தபோது அப்போ ஒரு

'பெரிய மின்மினி' மாதிரி வெளிச்சத்துணுக்கை பார்த்தான்

அந்த மின்மினி வெளிச்சம் திடீரென தீக்கங்கு ஒளி போன்று வளரத்தொடங்கியது. அவனின் கால்கள் ஏனோ நகர மறுத்து, அதனைப் பார்க்கத் தூண்டியது. அது— ஓமகுண்ட நெருப்புப் பந்துபோல் பெரிதாகி.. பெரிதாகி வளரத்தொடங்கியது. திடீரென அந்தப் பிரதேசமே வெளிச்ச வெள்ளத்தில் மூழ்கியது போன்று— அந்த ஆலமரமே நெருப்பில் எரிவது போன்ற— பெரிய வெளிச்சம் உண்டாகியது. இவன் கத்த நினைத்தும் தொண்டையில் இருந்து சத்தம் வராமல் ஓட ஆரம்பித்தான். பிடரியில் கால் பட, ஓடி வந்தான்.

அம்மா மடத்து பின் வாசலுக்கு வந்த போது வெளிச்சம் எதுவும் அந்தப் பகுதிக்கு வராமல் இருட்டாக இருப்பதனால் இலேசாகத் திரும்பிப் பார்த்தான். அங்கு இருட்டு கும் மென்று தெரிந்தது. அப்போ ஆலமரம் எரிந்து, அணைந்து விட்டதா….?

வீட்டுக்கு வந்த போது வாசலில் அம்மாவும் அப்பாவும் இவன் வருகையை எதிர் பார்த்துக் கொண்டு இருந்தார்கள்.

சோதிக்கு உடல் நடுக்கம் நிற்காமலிருந்தது.

"என்னடா சோதி? இவ்வளவு நேரம்? சோதனைக்கு நீ படித்துக் கொண்டு இருப்பாயோ என்று அப்பா உன்னைத்தேடி வர இருந்தார். நல்ல வேளை வந்து விட்டாய்."

சோதி , அப்பாவிடம் நடுங்கிய படியே நடந்ததைச் சொல்லி முடித்தான்.

அப்பா அதற்கு ஒன்றும் சொல்லாமல்,

*“வா முதல்ல கை கால் முகம் கழுவு, விபூதி பூசிட்டுப் படு.பயப்படாதே. ஒன்றும் இல்லை”.. சமதானஞ் சொல்லி படுக்க விட்டார்.*

*காலையில் எழுந்து தேனீர் குடிக்கும் வேளையில் அப்பா கூப்பிட்டார்*

*“சோதி .. உனக்கு வைரவர் காட்சி கொடுத்து இருக்கார். அந்த நாய் வைரவர் வாகனம். உனக்குத் துணையாக வந்திருக்கு. நீ பயப்படாமல் இருக்க உன்னைக் கூட்டிக் கொண்டு வந்திருக்கு நேற்று தேய் பிறை அஷ்டமி. நீ குளிச்சிட்டுப் போய் வைரவர் சாமியைக் கும்பிடு. ஒண்ணும் பிரச்சினை இல்லை.”*

*குளிச்சிட்டு கோவிலுக்கு போயிட்டு ஆலமரத்து பக்கமாகத்தான் வந்தான்.*

*அந்த ஆலமரம் எப்பவும் போல் அமைதியாக கிளைகளை சிலிர்த்துக் கொண்டு இருந்தது.... அதன் கீழ்.. .. „ செடிகள் சடையாய் வளர்ந்து பாதி மறைக்கும் படி ஒரு திரிசூலம்! வைரவ சூலம்!*

4

கால வைரவர், சிவ பெருமானின் ருத்திர ரூபமாக சொல்லப்படுபவர். சிவன் கோவிலின் வட கிழக்குப் பகுதியில் நின்ற கோலத்தில் காட்சி தருபவர். ஆடைகள் எதுவுமில்லாமல் பன்னிரு கைகளுடன் நாகத்தை பூணூலாகவும், சந்திரனைத் தலையில் வைத்தும், சூலாயுதம், பாசக் கயிறு, அங்குசம் ஆகிய ஆயுதங்களைத் தாங்கியும் நிர்வாண ரூபமாய்க் காட்சி தருபவர். கால வைரவர் சனியின் குருவாகவும், பன்னிரண்டு ராசிகள், எட்டு திசைகள், பஞ்ச பூதங்கள், நவகிரகங்களையும், காலத்தையும் கட்டுப்படுத்துபவராகவும் கூறப்படுகிறார்.

பஞ்சகுண சிவமூர்த்திகளில் வைரவர் வக்ர மூர்த்தி என்று அறியப்பெறுகிறார்.

*கிருஷ்ணன் சோதி சொன்ன கதையைக் கேட்டு முடித்தும்,*
*தன்னிலைக்கு கிருஷ்ணன் வரவில்லை.*
*"கிருஷ்ணா !.." என்று கூப்பிட்டு அவன் தோள்மேல் கை வைத்ததும் அவன் திடுக்கிட்டு சோதியைப் பார்த்தான்.*
*"என்ன சோதி.. நீ வைரவரைப் பார்த்தாயா?... என்னால் நம்ப முடியாவிட்டாலும் நீ எப்படியும் அவரின் அருள் பெற்றவன் என்று நான் நிச்சயமாக இப்போ நம்புகிறேன் சோதி..."*
*மேலும் தொடர்ந்தான் கிருஷ்ணன்...*
*"சோதி.. உன்னால் நிறைய நல்லது நடக்கப் போகிறது சர்வ நிச்சயம் என்று எனக்குத் தோன்றுகிறது.இதற்கெல்லாம் காரணம் நீ செய்யும் எதோ கொஞ்ச நஞ்ச தியான பலனும் வைரவர் புட்டுப் பிரசதமும் தான் காரணம் என்று தோன்றுகிறது."*
*"கிருஷ்ணா எனக்கு மனசில் ஒரு விருப்பம் உள்ளது.என்னென்றால் அந்த ஆலமரத்து திரிசூலத்துக்கு சின்னதாக ஒரு மேடை கட்டி அதைப் பராமரிக்கவேண்டும் என்று விருப்பம். அதுக்கு கோவில் மனேஜரை ஏதும் கேட்கணுமா தெரியவில்லை. நீ எனது விருப்பத்தை அவரிடம் சொல்லி என்ன சொல்லுறார்னு கேட்டுச் சொல்லு நாளைக்கு."*

*“சரியாச்சொன்னாய். நாளைக்கே அவரைக் கேட்போம்.”*

*“ஆனால் கிருஷ்ணா கராஜில் நிறைய வேலை. திங்கள் முதல் வியாழன் வரை நான் இரவு 9.00 மணிவரை வேலை செய்வேன் .வெள்ளிக் கிழமை மட்டும் தான் வரமுடியும், எப்படி எனக்கு நேரம் கிடைக்கும் என்று தெரியவில்லை. எதற்கும் நீ அவரைச் சந்தித்து கதைச்சுட்டு சொல்லு சரியா..?”*

*அதேவேளை வழமைபோல் வெள்ளாங்குளம் பஸ் லேட்டாகவே வந்தது.*

*“சரி கிருஷ்ணா நான் போய்ட்டு வாறேன் முடிந்தால் நாளை வந்து பார்க்கிறேன்.வரேன் கிருஷ்ணா.”*

***மன்னாரில். பரஞ்சோதி கராஜ்….***

*காலை 9.00 மணி. கராஜைத் திறந்தான் சோதி. அவனுக்காக காலையிலேயே வந்து காத்துக் கொண்டிருந்தார், ஜெயதாசன். ஆண்டாங்குளத்து மில் முதலாளி,*

*“சோதி. வணக்கம் என்னை ஞாபகம் இருக்கா?”*

*“வணக்கம் வணக்கம் ஞாபகம் இருக்கு அங்கிள். ஜெயா மில் ஓனர்தானே?”*

*“சரியாச் சொன்னாய். அவசர வேலை ஒன்று. – உன்னால் தான் முடியும் மில் ஜெனரேட்டர் திடீர்னு ஸ்டார்ட் ஆகாமல் நின்று போய் வேலையெல்லாம் இரண்டு நாளா நின்று விட்டது. கொஞ்சம் என்னன்று பார்க்க முடியுமா?”*

*“முடியும் அங்கிள். ஆனா ரெண்டு மணிக்கு மேல் தான் என்னாலே வரக்கூடியதாய் இருக்கும் அங்கிள், பரவயில்லையா?”*

“அதுக்கென்ன சோதி நான் ரெண்டு மணிக்கு வந்து கூட்டிப் போகிறேனே.”
என்று விட்டுப் போகத் திரும்பியவர்,
“அப்பா இருக்காரா?.. சோதி.”
“இருக்கார் அங்கிள் அவர் மருந்தெல்லாம் சாப்பிட்டு 11.00 மணிக்கு மேல்தான் வருவார்”
“சுகமாய் இருக்காங்கதானே அப்பாவும் அம்மாவும்?”
“ஓம் அங்கிள்”
“சரி நான் 2.00 மணிக்கு வாறன்.”
“ஓகே அங்கிள்...”
அவர் போன பிறகு, தற்செயலாக அவன் திரும்பிப் பார்த்தபோது அவர் பின்னால் ஒரு கறுப்பு நாய் தொடர்ந்து கொண்டிருந்தது. அது செய்த செயல் அவனுக்கு விசித்திரமாக இருந்தது.
அந்த கருப்பு நாய் அடிக்கடி கழுத்தைத் திருப்பி இவனைப் பார்த்துக் கொண்டு அவர் பின்னால் போய்க் கொண்டிருந்தது.
தனது பிரமையாய் இருக்குமோ என்று மீண்டும் அதைப் பார்க்க நினைத்த போது அவரையும் காணோம் அந்த நாயையும் காணோம்.
அங்கிருந்து ஒரு கார் (ஜெயதாசன் வந்ததாய் இருக்கும்) புறப்பட்டுப் போனது. ஓஹோ அவருடைய நாய்தானா அது? அதான் அதுவும் கார்லே ஏறிப் போய் இருக்கும்.
11.00 மணி போல் அவன் அப்பா கைத்தடியை ஊன்றியவாறு மெதுவாக வந்து அங்குள்ள அலுவலகம் போன்ற அறைக்குள் வந்து அமர்ந்தார்.
சோதி பேப்பரை எடுத்துக் கொண்டு போய் அப்பாவிடம் கொடுத்து விட்டு,

“அப்பா.. உங்களுக்கு ஆண்டாங்குளம் மில் ஓனர் ஜெயதாசனை ஞாபகம் உண்டா”.
“நல்லாவே ஞாபகம் இருக்கு. மனுஷன் நல்லமாதிரி, ஏன் கேட்கிறாய்?”
“அவர் வந்தார் அப்பா அவருடைய மில் ஜெனரேட்டர் ரெண்டு நாளா வேலை செய்யாமல் மில் வேலை எல்லாம் நின்று போச்சாம்.வந்து பார்க்க முடியுமான்னு கேட்டார். . நான் சரி 2.00 மணிக்கு வரேன் என்று சொல்லியிருக்கேன்.”
சோதி அப்பா மனசுக்குள் புன்னகைத்தார்.
“ அந்த மனுஷனுக்குத் தெரியாத மெக்கானிக்குகளா? ஏன் இவனைத் தேடி வருகிறான் என்று எனக்குப் புரிஞ்சு போச்சு” மனசுக்குள் ஏதோ ஒருகணக்குப் போட்டு விட்டு புன்னகைத்துக் கொண்டார்.
சோதி அவர் புன்னகைப்பதை கவனித்தான்.
“என்னப்பா ஏதோ யோசிக்கிறீங்க எதோ சிரிக்கறீங்க உங்களுக்குள்?”
“ஆமாண்டா .... ஜெயதாசன் கொஞ்சம் கறார் பேர்வழிதான். அவருக்குத் தெரியாத பெரிய மெக்கானிக்குகள் இல்லை ஆனாலும் உன்னைத் தேடி வந்துள்ளார் போய்ப் பார்.”
“சரி அப்பா ...ஆ... அப்பா!”
“என்னடா?”
“அவர் நாய் ஏதும் வளர்க்கிறாரா?”
“தெரியவில்லையே சோதி இப்ப வளர்க்கிறாரோ என்னமோ”.

“சரி அப்பா நான் அவசரமாக கேதீச்சரம் போய்ட்டு இப்போ வந்து விடுவேன். நீங்க அவர் வந்தால் இருக்கச் சொல்லுங்க.”

சோதி பஸ் ஏறி கேதீச்சரம் வரும் போது 12.00மணி. கிருஷ்ணாவையும் அழைத்துக் கொண்டு கோவில் மனேஜரைப் பார்க்கப் போனான்.

“வணக்கம் ஐயா. அம்மா மடத்து ஆலமரத்தில் இருக்கும் வைரவ சூலத்துக்கு சின்னதாக ஒரு வழிபாட்டு மேடைகட்ட விரும்புகிறேன் அனுமதி கிடைக்குமா?”

“அதற்கென்ன செலவு உங்களோடதாய் இருந்தால் சரி.வாங்க போய் பார்ப்போம்.”

ஆலமரத்தடிக்கு மூவரும் வந்து பார்த்த போது, அங்கு சூலம் இருந்த இடத்தில்..

இப்போ அதைக் காணோம்.

என்ன காணவில்லையே?.. யாராவது பிடுங்கிக் கொண்டு போய் இருப்பாங்களோ?

“ஒரு வேளை சோதி போன கிழமை ஒரு டிராக்டரில் வந்து கோவிலில் இருந்த பழைய இரும்புகள் இருக்கா என்று கேட்டு வந்தாங்க. அவுங்க போகிற வழியில் இதைப் பார்த்து தூக்கிட்டுப் போனாங்களோ என்னவோ”

ஏமாற்றத்துடன் இருவரும் திரும்பினர். சோதி மன்னாருக்குத் திரும்பிக் கிளம்பிவிட்டான்.

**மன்னார்..**

2.00மணிக்கு டான் என்று வந்து விட்டார் ஜெயதாசன்

போகலாமா என்று கேட்டபடியே உள்ளே வந்தவர், அலுவலக அறையில் சோதி அப்பாவைப் பார்த்ததும் அவரிடம் பேசுவதற்குச் சென்றுவிட்டார்.

சோதி டூல்ஸ் பெட்டியை எடுத்துக் கொண்டான். அங்கு வேலை செய்து கொண்டிருந்த பொடியன்களிடம் கராஜைப் பார்த்துக் கொள்ளச் சொல்லி விட்டு அப்பாவிடம் சொல்லிக் கொள்ள வந்தான்.

ஜெயதாசனும் அவன் அப்பாவிடம் விடை பெற்றுக் கொள்ள இருவரும் புறப் பட்டனர்.

அவரின் காரில் ஏறிக் கொண்ட சோதி ஏதோ ஞாபகம் வந்தவனாய் காருக்குள்ளும் காரின் பின்னாலும் எட்டிப் பார்த்தான்

"என்ன சோதி என்ன பார்க்கிறீங்க ஏதும் மறந்து விட்டு வாறியா?"

"இல்லை இல்லை....(உங்களுடன் வந்த நாய்.. என்று கேட்க வந்தவன் ) ஒன்னுமில்லை போகலாம்."

**ஆண்டாங்குளம்** – ஜெயா மில் என்று பெயர்ப் பலகை தாங்கிய மில்லுக்குள் கார் நுழைந்தது,

மில் வாசலில் வேப்ப மர நிழலில் காரை நிறுத்த, இருவரும் இறங்கினர். அப்போது வாலை ஆட்டிக் கொண்டே பெரிய கறுப்பு நாய் ஒன்று. இவர்கள் அருகில் ஓடிவந்தது.

"பைரவா.. ஏய்.. நம்மாள் தான் போய் உட்காரு." – ஜெயதாசன் சொல்லவே அந்த நாய் திரும்பிப் போய் அந்த மாமரத்துக்கு கீழே உட்கார்ந்து கொண்டது.

*“வைரவர்.. நாய்க்கு நல்ல பெயர் வைச்சிருகீங்க அங்கிள்...” என்றபடி அந்த நாயைத் திரும்ப உற்று நோக்கினான்.*

*‘இது மாதிரிதானே அங்கு பார்த்தேன்.. ஆச்சரியமாய் இருக்கு...’என்று எண்ணியவாறு மில்லுக்குள் நுழைந்தான்.*

*உள்ளே வந்த ஜெயதாசன் அங்கிருந்த இண்டர் கோம் மாதிரி ஒரு போனை எடுத்து,*

*“மகள்! ஒரு சொம்பு தண்ணியும் கிளாஸ் ரெண்டும் கொண்டுவாம்மா..”*

*என்று கூப்பிட்டுச் சொல்லி விட்டு சோதியை அமரச் சொன்னார்.*

*“நான் முதலில் மெஷினைப்பார்க்கிறேன் அப்புறம் வந்து உட்காருகிறேனே அங்கிள் ...”*

*“பொறு சோதி. வீடு மில்லுக்குப் பின்னால்தான்.. இதோ தண்ணீர் வரட்டும் குடிச்சுட்டு வேலையை ஆரம்பிக்கலாம்.”*

*அப்போ தாவணி அணிந்த அழகான பெண்ணொருத்தி பளிச் சென்று மின்னும் பித்தளைச் சொம்பு நிறைய தண்ணீரும் ரெண்டு கிளாஸ்களும் கொண்டு வந்தாள். சோதியைப் பார்த்ததும் வெட்கத்தில் தலையைக் குனிந்து கொண்டாள்.*

*“என் மகள் சுவாதி.இவள்தான் மில் ஓனர் இப்போ.” என்று அவளை பெருமையாக அவனிடம் அறிமுகப் படுத்தினார்.*

*“அப்பா, நான் அன்றைக்கு சொன்னேனே ராதாவும் நானும் மன்னார் போகும் போது வழியில் நின்று போன என்னுடைய ஸ்கூட்டியை நிமிஷத்திலே சரி*

பண்ணிக் கொடுத்தார் ஒருவர் என்று, இவர்தான் அப்பா."

"கேதீசரத்தில் ராஜநாயகம் என்று என் நண்பர் ஒருவரை பற்றி உனக்கு அடிக்கடி சொல்லியிருக்கேன். அவருடைய மகன் தான் இவர். அப்பாவை மாதிரி இவரும் நல்ல கெட்டிக்காரர்"

இருவரும் பரஸ்பரம் வணக்கம் பரிமாறிக் கொண்டனர்.

"சோதி நல்ல கெட்டிக்கார மெக்கானிக் மன்னாரில் பெரிய கராஜ் வைத்திருக்கார்"

அவள் புன் சிரிப்பொன்றை உதிர்த்த வண்ணம் சொம்பிலிருந்து கிளாஸில் தண்ணீர் வார்த்துக் கொடுத்தாள்.

"நன்றி" என்றபடி வாங்கிக் கொண்டான்.

"மகள்! அம்மாவும் ஞானமும் வந்து கொண்டு இருக்காங்க. போன் வந்தவுடன் சந்திக்குப் போய் கூட்டி வா."

"சரி அப்பா."

சோதி கேட்டான்,

"அம்மா எங்கே மன்னாருக்குப் போய் உள்ளார்களா?"

"இல்லை சோதி அவர்கள் வவுனியாவுக்கு நேற்றுப் போனவர்கள் இன்று 1.30 பஸ்ஸில் வந்து கொண்டு இருக்காங்க. 3.00க்கு மன்னார் வந்து ஆண்டாங்குளத்து பஸ்ஸில் வந்து விடுவார்கள் சந்திக்கிட்ட வரும் போது போன் பண்ணுவார்கள்"

"அப்படி என்றால் நாம் கொஞ்சம் சுணங்கியே அவர்களையும் அழைத்து வந்திருக்கலாமே"

"வந்திருக்கலாம் தான் தற்செயலாக பஸ் லேட் என்றால் உங்களுக்கு லேட்டாகிவிடும் அவுங்க பஸ்ஸில் வந்து விடுவார்கள்"

"சரி அங்கிள்.. நான் ஜெனரேட்டரைப் பார்க்கலாமா என்று கேட்டபடியே சுவாதியை பார்த்துக் கொண்டே எழுந்து கொண்டான்.

அடுத்த ஒரு மணி நேரத்துக்குள் மில் உயிர்த்துக் கொண்டது ஜெனரேட்டர் வேலை செய்ததில் ஜெயாவுக்கு மிகுந்த மகிழ்ச்சி.

"ரெண்டுநாளா மூன்று மெக்கானிக்குகள் வந்து பார்த்து விட்டு இயலாமல் ஒவ்வொரு சாட்டு சொல்லிவிட்டுப் போய்ட்டாங்க. எனக்கு திடிர் என்று உங்க ஞாபகம் வந்தது. உங்களால் தான் இது சரி வரும் என்று நம்பித்தான் உங்களிடம் வந்தேன்"

சோதியை வா போ என்று ஆரம்பத்தில் ஒருமையில் பேசிக் கொண்டிருந்த ஜெயா இப்போ பன்மையில் மரியாதையை வரவழைத்துக் கொண்டது அவனுக்கு ஆச்சரியமாய் இருந்தது.

இருந்தாலும் அவன் எதுவும் அது குறித்து அவரிடம் ஒன்றும் மறுப்பு சொல்லவில்லை.

மில் மீண்டும் பரபரப்பானது. வேலையாட்கள் ஒவ்வொருவராக மில்லுக்குள் வர ஆரம்பித்தனர்.

ஜெயா சோதியை வீட்டுக்கு வரும்படி அழைத்தார், அவர் அழைப்பைத் தட்ட முடியவில்லை. வாசலுக்கு வந்தபோது அவரின் கார் அவர் மனைவி மகனுடன் வந்து நின்றது. சுவாதி ட்ரைவிங் சீட்டில் இருந்து இறங்க பின்னால் அவள் சகோதரனும் அம்மாவும் இறங்கினர்.

“கீதா. இது ராசநாயகத்தோட மகன் சோதி மன்னார் பரஞ்சோதி கராஜ் ஓனர். இவரால் தான் இப்போ மெஷின் வேலை செய்யுது.”
“வணக்கம் தம்பி..”
“வணக்கம் அம்மா..”
“அப்பா வீட்டுக்கு வர்றீங்கதானே…?” கேட்டது, சுவாதி ஜாடையாக சோதியைப் பார்த்துக் கொண்டே ..
“பின்னே.. வீட்டுக்குத்தான் வாறோம் நீ போய் தேத்தண்ணி ரெடி பண்ணு” மகளை அவசரப் படுத்தினார்,
“என்ன அங்கிள் நான் புறப்படுகிறேனே இப்பொதானே வந்து சேர்ந்தார்கள். நான் இன்னொரு நாள் வருகிறேனே”
“தம்பி என்ன ஓடுறீங்க.. வாங்க வீட்டுக்கு வந்துட்டுப் போங்க..”, அம்மாவும் சேர்ந்து கொண்டாள். முன்னுக்குப் போன சுவாதி சோதியைப் பார்த்தாள். அந்தப் பார்வையில் ‘வாங்க’ என்ற ஜாடை மொழியைப் படித்தான்
அந்த அழைப்பை அவனால் நிராகரிக்க முடியவில்லை. ஜெயதாசன் வீடு. அவர் அந்தஸ்தை பெருமிதமாய்க் காட்டியது. மாமரம் வேம்பு என்று சோலைகளின் நடுவே அழகிய பங்களா.
மிக்ஸர் தேனீர் என்று அமர்க்களப் படுத்திவிட்டனர்.
கீதா— ஜெயதாசனின் மனைவி – ஆச்சரியமாய் கேட்டாள்.
“ஆமாம் மெக்கானீக்கு என்றால் ஒயில் கருப்பு டீசல் மணம் என்பதெல்லாம் அடையாளங்கள்.அப்படி ஒரு அடையாளமே காணோமே நீங்க என்ன மாயம்

செய்தீர்கள். இப்போ மெஷின் ஓடுதே” என்று அம்மா கேட்டாள்
‘மெஷின் மட்டுமா.. என் மனமும் தான்.. கண்ணாலே பார்த்து என்ன மந்திரம் செய்தானோ….’ சுவாதி மனசுக்குள்
நினைத்துக் கொண்டே திடீரென வெட்கத்தால் முகம் கவிழ்ந்தாள்.
சோதி அதைக் கவனிக்கத் தவறவில்லை.
“அங்கிள் அன்ரீ ” நான் புறப்படுகிறேன்.
“சரி தம்பி. நாங்க எல்லோருமாய் ஒருநாள் உங்கள் வீட்டுக்கு வாறம் உங்க அப்பா அம்மாவைப் பார்த்து ரொம்ப வருஷங்கள் ஆச்சு.”
“கட்டாயம் வாங்க அன்றீ அங்கிள் எல்லாருமாய் வாங்கோ.”
என்று விட்டு சுவாதி வையும் பார்த்தான் .
அவள் கண்ணை அகல விரித்து விட்டு புன்னகத்தாள்
ஜெயா மகன் ஞானத்திடம் சொன்னார் ,
“ஞானம்! சோதி அண்ணனை மன்னாரில் விட்டு விட்டு அப்படியே ஷெட்டுக்குப் போய் டீசல் உடனே அனுப்ப ஏற்பாடு பண்ணிட்டு வா. இந்த செக்கைக் கொடு.”
காரில் ஏறிய சோதியின் கையில் ஒரு என்வலப்பைத் திணித்தார் ஜெயா.
“என்ன அங்கிள் இது?”
“நான் தந்தேன் என்று அப்பாவிடம் கொடுத்து விடுங்கள்.”
“சரி அங்கிள் நான் போய்ட்டு வாரேன் எதுவென்றாலும் போன் பண்ணுங்க ..ஓ ஓ. மறந்து

போனேன் .. இந்தாங்க என் விசிட்டிங் கார்ட்."– ஒன்றை பேர்ஸ்லேர்ந்து எடுத்துக் கொடுத்தான். (கடைக் கண்ணால் சுவாதியையும் பார்த்துக் கொண்டே.)

"நன்றி தம்பி சந்திப்போம். ஞானம்! பார்த்து ஓட்டு..."

"சரி அப்பா.."

***மன்னார்***

அப்பாவின் கையில் என்வலப்பைத் தந்தான்

அப்பா பிரித்துப் பார்த்து,

"சோதி ..மெக்கானிக் சார்ஜ் 20,000.00ருபா கொடுத்து இருக்கான் ஜெயா."

"இந்தா அம்மாவிடம் கொடுத்து விடு."

"இது அதிகம் கொடுத்திருக்கார் அப்பா கையிலே கொடு என்று சொல்லிக் கொண்டே காரில் ஏறிய பின் என் கையில் திணித்தார் அந்த அங்கிள்."

"சரி பரவாயில்லை ..சோதி நீ அன்றீ மகன் மகள் எல்லோரையும் பார்த்தாயா?"

"ஓம் அப்பா. வீட்டுக்கு கூட்டிப்போய் நல்லா உபசரித்தார்கள். ரொம்ப நல்ல மாதிரி."

"அவர் குழந்தைகளை சின்ன வயதில் பார்த்தது. அவர்கள் குடும்பத்தோடு கேதீச்சரம் வந்தால் பாலாவியில் குளித்து கோவிலுக்குப் போய்ட்டு நம்ம வீட்டில் சாப்பிட்டுத்தான் போவார்கள். கோவிலுக்கு அரிசி மூடைகள் கொண்டு வரும் போது நம்ம வீட்டிலும் ஒரு மூடையை இறக்கி விட்டுத்தான் போவான் ஜெயா. நான் வலுக் கட்டாயப்படுத்தி காசு கொடுத்து விடுவேன்."

“சரி சோதி  நீ வேலையை கவனி”
மாலை 6.00 மணி இருக்கும் .
வாசலில் ஒரு ஜீப் வந்து நின்றது.
அதிலிருந்து எஸ்.பி இறங்கினார்.
எஸ்.பி சரத் . அவரை அவனுக்கு நன்கு தெரியும்.
நல்லாத் தமிழ் பேசுவார்.
“சோதி.. எப்படி இருக்கு எல்லாம் நல்லமா ?”
ஒரு கதிரை கொண்டுவந்து போட்டான் பொடியன்.
“சொல்லுங்க சேர் .. மணி சேர்க்கு ஒரு டீ கொண்டு வா.”
“எப்பா எப்பா சோதி. நான் இப்பதான் குடிச்சு வந்தது.”
“சோதி எனக்கு ஒரு உதவி செய்யனும்.”
“சொல்லுங்க சேர் நான் என்ன செய்யனும்..?”
“நாளைக்கு என்னோடு முருங்கனுக்கு வருவியா. பின்னேரமாப் போவம்”
“அதுக்கென்ன சேர்  போவோம். ஏன் சேர்?”
“எனக்கு ஒரு புல்டோசர் அங்க நிக்குது. குருநாகலில் இருந்து கொண்டு வந்தது. குளத்துக்கு பண்டு கட்டுறது உனக்கு தெரியுமா?”
“தெரியும் சேர் பேப்பரில் பார்த்தேன்”
“அதுக்கு நான் கொடுத்த புல்டோசர்தான். ஒரு கிழமை போய்ட்டு ஒரு வேலையும் செய்யாம சும்மா நிக்குது. என்ன பிரச்சினை எண்டு பார்க்கனும். கொஞ்சம் அவசரம்”
“அப்படி என்றால் இப்ப போவமா சேர்?”
“போகலாம். முடியுமா?”

“ஓம் சேர் போய்ட்டு என்ன பிரச்சினை என்று பார்த்தால் நாளைக்கு ஏதும் பெரிய வேலை என்றால் பகலில் செய்யப் பார்க்கலாம்”
எஸ்.பிக்கு நல்ல குஷி.
“அத்துதாங்.. சோதி வேணும் எண்டு சொல்லுறது”
“இருங்க சேர் அப்பாவிடம் ஒரு வார்த்தை சொல்லிட்டு வாறேன்”

**கட்டுக்கரைக் குளத்தடி**
நேரம் 7.00 மணி.
வாட்டர் வேர்க்ஸ் சர்க்கியூட் பங்களா வளவில் அந்த புல்டோசர்
அருகில் ஜீப் நின்றது.
மெர்குரி பல்பு பெரிய மின் கம்பத்தில் இருந்து ஒளிவெள்ளத்தை பாய்ச்சியபடி இருந்தது.
புல் டோசர் அருகில் வந்தான் அப்போது புல்டோசருக்குக் கீழ் இருந்து ஒரு கறுப்பு நாய் வெளியே வந்தது. இவனைப் பார்த்து ஒருக்கால் குரைத்து விட்டு மீண்டும் புல் டோசருக்குக் கீழ் போய் படுத்துக் கொண்டது.
எஸ்.பிருக்கு அது எதேச்சையாக தோன்றினாலும் சோதிக்கு அது பைரவர் ஏதோ சமிக்ஞை காட்டுவதாக அவன் மனசில் தோன்றியது. சரி என்னதான் என்று பார்ப்போம்.
“சேர் டோர்ச் லைட் கிடைக்குமா?”
அங்கு வந்த வாட்ச் மேன் ஓடிப்போய் பெரிய டோர்ச் கொண்டுவந்தான்.

அதற்கு முதல் அவன் புல்டோசரை ஸ்டார்ட் செய்ய வாட்ச் மேன் திறப்பு கொண்டு வந்து கொடுத்து விட்டிருந்தான். இவன் ஏறி திறப்பைப் போட்டு ஸ்டார்ட் செய்யப் பார்த்தான். ஊஹூம் ஒன்றும் நடக்கவில்லை எஞ்ஜின் இருந்த பகுதிக்கு வந்து டீசல் டாங்க் திறந்து பார்த்தான் . டீசல் ஃபுல் ஆக இருந்தது. டியூபுகளை சோதித்துப் பார்த்தான். சரியாக இருப்பது போல் தோன்றியது. பற்றரியில் இருந்து வரும் ஒயர்களைச் சோதிக்கும் பொருட்டு அந்த வயர் கம்பிகள் வரும் இடமெல்லாம் லைட்டை அடித்து அடித்துப் பார்த்து வரும் போது அந்த நாய் உட்கார்ந்திருந்த இடத்துக்கு அருகில் வரும் கம்பிகளைப் பார்க்க லைட்டைப் பாய்ச்சினான். அப்பவும் அந்த நாய் அதிலேயே உட்கார்ந்து இவனைப் பார்த்து முனங்கியது மனசுக்குள் (வைரவரே நீங்க என்னமோ சொல்லுறீங்க என்று தெரியுது ஆனால் என்னவென்று விளங்க வில்லையே?) என்றவாறு

புல்டோசர் அடியில் நன்றாக லைட்டை அடிச்சு அடிச்சு பார்த்தான்.

அப்போ அவன் கண்களில் தட்டுப் பட்டது பெரும் ஆச்சரியத்தை வரவழைத்தது. வாட்ச்மேன் பக்கம் திரும்பி "ஒருக்கா இந்த லைட்டைப் பிடியுங்கண்ணே" என்றவாறு லைட்டைக் கொடுத்துவிட்டு

பார்த்தபோது நாயைக் காணோம். சற்று ஆச்சரியமாய் இருந்தாலும், வைரவர் வேலைதான் என்று சட்டென புரிந்து கொண்டான்.

அவன் கீழே படுத்தவாறு புல்டோசர் அடிப்பக்கம் நகர்ந்து க்ராங்க் அருகில் மாட்டிக்கொண்டிருந்த அந்த உலோகப் பொருளை இழுத்து எடுத்தான்.

வாட்ச்மேனிடம் இருந்து லைட்டை திருப்பி வாங்கி அந்த உலோக வஸ்து குத்தி இருந்த இடத்தைப் பார்த்தான் . வயர் பகுதியில் எந்த பாதிப்பும் இருக்கவில்லை. அந்த உலோகத்தையும் எடுத்துக் கொண்டு வெளியில் வந்தான்.

"சோதி என்னது அது?" எஸ்.பி கேட்டார்

"இதுவா சேர்.. இது வைரவர் சூலம்"

"ஓம் இது மரத்துக்குக் கீழ் குத்தி வைத்து விட்டு உங்கடை ஆட்கள் பூசை பண்ணுறதுதானே பார்த்து இருக்கேன்"

"ஓம் சேர் சரியாச் சொன்னிங்க. இதைத்தான் அந்த நாய் காவல் செய்து கொண்டு இருந்திருக்கு."

"சோதிஅண்ணே இண்டைக்குத்தான் அந்த நாயைப் பார்த்தேன், இவ்வளவு நாளும் இல்லை..." என்று வாட்ச் மேன் சோதியிடம் சொன்னான்

"ஓ அப்படியா என்று கேட்டு விட்டு மீண்டும் புல் டோசரில் ஏறி திறப்பை முடுக்கி பொத்தானை அமுக்க... என்ன ஆச்சரியம்.....

'டர்ர்ர்ர்...... 'என்று எஞ்ஜின் ஸ்டார்ட் ஆகியது.

இரண்டு மூன்று முறை திரும்பத் திரும்ப ஸ்டார்ட் செய்து பரிசோதித்து விட்டு கீழிறங்கினான்.

சோதியை சந்தோஷத்தில் கட்டிப் பிடித்துவிட்டார் எஸ்.பி,

"சோதி ஊரிலேருந்து என்ர மெக்கானிக்கு அவன் கூட்டி வந்த மெக்கானிக்கல் இன்சினியர் எல்லோரும்

வந்து செய்ய முடியாமல் என்னமோ சொல்லிட்டு போய்ட்டான்கள். கடைசியா ஒரு நம்பிக்கையோடுதான் உன்னட்டை வந்தேன். எப்படி சோதி உன்னால் மட்டும் இது முடிஞ்சது?”

“அது சேர் இந்த வைரவர் அருள்தான். இந்த சூலத்தை இங்கு எங்கையாவது ஒரு வேப்பமரம் அல்லது அரசமத்துக்கு கீழே வைத்து டெய்லி சூடம் ஏற்றச் சொல்லுங்க” என்று அவர் கையில் அதைக் கொடுத்தான்.

“வாட்ச் மேன் இதை பத்திரமா வைத்திரு ஒரு நாளைக்கு வாரன் நல்ல இடம் பார்த்து இதை வைப்போம் சரியா?”,

வாட்ச்மேன் அதை வாங்கிக் கொண்டான்….

## 5

காலவைரவர் தோன்றிய கதை !

இறைவன் பிரபஞ்சத்தை படைத்த காலத்தில் பிரம்மா, விஷ்ணு முதலான தெய்வங்கள் தோன்றினார்கள். ஒரு காலத்தில் படைப்புக் கடவுளான பிரம்மாவுக்கும், காக்கும் கடவுளான விஷ்ணுவுக்கும் தங்களில் யார் பெரியவர் என்ற பேதம் உண்டாயிற்று. இவர்களின் பேதத்தை போக்குவதற்காக இறைவன் சிவபெருமான் ஆதி அந்தம் இல்லாத அக்னி ரூபத்தை காட்டி உங்களில் யார் என் அடி முடியை முதலில் காண்கிறீர்களோ அவர்களே பெரியவர் என்று கூறினார். பிரம்மாவும், விஷ்ணுவும் உடனே அடி முடியை காண்பதற்காக விரைந்தனர். பல

யுகங்கள் கடந்து பயணித்தும் காணமுடியவில்லை, அந்த சமயம் இறைவனின் முடியில் இருந்து வந்த கங்கையை பிரம்மா கண்டார். உடனே நான் எம்பெருமானின் முடியை கண்டேன் என்று பொய் உரைத்தார். அந்த கனத்தில் அக்னி பிழம்பில் இருந்து கடும் உக்ரத்தோடு ஸ்ரீ கால வைரவர் தோன்றி, பிரம்மாவின் ஒரு சிரஸை கொய்தார். இவர் தான் ஸ்ரீ கால வைரவர் என புராணங்கள் கூறுகிறது

*கேதீச்சரம் –*

*அடுத்த வெள்ளிக் கிழமை – அர்த்த சாமப் பூசைக்குப்பின் கிருஷ்ணாவும் சோதியும் கடையைப் பூட்டியபின் கடை வாசலில் வழமை போல் வாங்கில் (பெஞ்சில்) அமர்ந்து கொண்டனர்.*

*“சோதி.. என்னமோ ரெண்டு விஷயம் சொல்ல இருக்கு என்றாய் என்னது?”*

*“கிருஷ்ணா உனக்கு ஆண்டாங்குளம் ஜெயா மில் ஓனர் ஜெயதாசனைத் தெரியுமா”*

*“தெரியும் சோதி இரண்டொரு தடவை அவர் கோவிலுக்கு வரும் போது பார்த்திருக்கேன் ஆனால் பேசியதில்லை.ஏன் அவருக்கு என்ன?..”*

*“அப்பா, அம்மாவுக்கு அவர் குடும்பம் நன்கு பழக்கம். போன செவ்வாய் அவர் என்னைத் தேடி வந்தார். அவர் மில்லில் ஜெனரேட்டர் பழுதாகி திருத்தம் செய்ய என்னை அழைத்துப் போக வந்திருந்தார்..”*

*அவர் தன்னைத் தேடி வந்ததையும், கறுப்பு நாயைப் பார்த்ததையும் பின்பு அதே நாயை அவர் வீட்டில் பார்த்ததையும் அது முதல் அவர் மகள் சுவாதி வரை ஒன்றும் விடாது சொன்னான். சுவாதியை பற்றி*

சொல்லும் போது கொஞ்சம் தயங்கித் தயங்கி புன்னகையுடன் சொன்னதை கிருஷ்ணன் கவனிக்கத் தவற வில்லை

"சோதி கேட்கவே சந்தோஷமாய் இருக்கு"

சோதிக்கு அவன் சந்தோஷம் என்ற வார்த்தையை ஏன் சொன்னான் என்பது சூசகமாகப் புரிந்தாலும் அவன் வாயைக் கிளறினான்.

"கிருஷ்ணா சந்தோஷமா...? ஏன் அப்படிச் சொல்லுறாய்.."

"சோதி நீ பேசும் போது அதிலும் குறிப்பா சுவாதியைப் பற்றி நீ சொல்லச் சொல்ல உன் கண்களில் ஒரு உற்சாகம் ஒளிர்வதை கவனித்தேன்.சோதி வாழ்த்துக்கள்..."

"கிருஷ்ணா நீயா எதையும் கற்பனை பண்ணிக்காதே"

சோதிக்கு உள்ளூற மகிழ்ச்சியாகவே இருந்தது மெலிதான வெட்கம் அவன் குரலில் இழையோட..

"கிருஷ்ணா. எது நடந்தாலும் அது ஆண்டவன் செயல்...."

"ஆங்... அடுத்து புல்டோசர் கதையையும் சொல்லி விடுகிறேன்."

முருங்கனில் கட்டுக்கரைக் குளத்து அருகில் புல் டோசர் பார்த்ததையும் முக்கியமாக அந்த நாயின் நடவடிக்கையயும் சொல்லி முடித்தான்

"சோதி, அந்த சூலம் கிடைத்ததைப் பற்றிச் சொன்னாயே..?"

"ஓமோம்..ஏன்?"

"சோதி அந்த சூலம் ஏன் நாம் கேதீச்சரத்தில் தேடிப் போனதாய் இருக்கக் கூடாது?"

“அடடா கிருஷ்ணா .. எனக்கு ஏன் அந்த மாதிரி என் புத்தியில் படவில்லை?..சா..இந்த சூலமும் ஆலமரத்துச் சூலம் போல் மூன்று முனைகளும் தட்டையாகி கூராகவே இருந்ததை அவதானித்தேனே . ஆனால் என் மரமண்டைக்கு ஏன் அது உறைக்காமல் போனது. நாளைக்கே போய் அதனை கேட்டு வாங்கலாமா?
“சோதி நீயே அந்த எஸ்.பியிடம் வழிபாட்டுக்காக கொடுத்துவிட்டதாய்ச் சொன்னாயே?..”
“சரி கிருஷ்ணா நான் எதற்கும் எஸ்.பியிடம் கேட்டுவிட்டு என்னவென்று அதை கவனிக்கிறேன் உடனேயே”
“சோதி எனக்குப் புரியுது.. வைரவர் உனக்கு சரியான வெற்றிப்பாதையைக் காட்டி அருள்கின்றார் என்பதுதான். சீக்கிரமே நீ ஒரு உயர்ந்த ஸ்தானத்துக்கு வருவாய் என்கிற நம்பிக்கை எனக்கு இருக்கு”
“சரி சோதி உன் அதிர்ஷ்டப் படியே எல்லாம் நல்லா நடக்கும்.”
“சரி.. பஸ் வருது நான் கிளம்பறேன்”
“சரி சோதி அப்புறம் பார்ப்போம் போய்ட்டு வா..”
“சரிடா….”
சனிக்கிழமை காலையிலே….
காலை 7.30 மணிக்கே எஸ்.பியை பார்க்க கிளம்பினான்.
“வா சோதி என்ன காலையிலேயே இந்தப் பக்கம்?”
எஸ்.பியிடம் திரிசூலம் பற்றிச் சொன்னான்.
“சோதி நான் அந்த வாட்ச் மேனைக போனில் கூப்பிட்டுக் கேட்கிறேன்”
வாட்ச்மேனுடன் போனில் பேசிய இன்ஸ்பெகடர், கோபமாய் அவனைத் திட்ட ஆரம்பித்தார்.

"என்னவோய், ஒரு பொருளை பத்திரமாய் பார்க்கத் தெரியாதா? அது யார்னு விசாரித்து வை நான் பின்னேரம் வாரன்."

"சோதி சொறி சோதி.."

"ஏன் சேர்?"

"வாட்ச்மேன் சொல்றான்.அவன் சூலத்தை என்னிடம் வாங்கி தனது மேசைக்குப் பக்கத்தில் வைத்திருந்தானாம்..நேற்று காலை அதை ஒரு மரத்தடியில் வைக்க என்று பார்த்தபோது அதைக் காணவில்லையாம்.. இப்போ சொல்லுறான் மடையன். நான் பின்னேரம் போய் பார்க்கிறேன்.."

"சரி சேர் .. முடிந்தால் நானும் வரப் பார்க்கிறேன்."

ஏமாற்றத்துடன்..விடை பெற்றுக் கிளம்பினான்

கராஜில் ...

காலை 10.00 மணி

அப்போதான் ஒரு டிராக்டரின் பிஸ்டனை கழற்றி விட்டு அதைப் பேஸ்ட் பண்ணுவதற்கு மணியிடம் சொல்லிவிட்டு மற்ற டிராக்க்டரின் லைட் செக்ஷனை பரிசோதிக்க நினைக்க,

"சோதித் தம்பி!" என்று அழைத்த வண்ணம் உள்ளே நுழைந்தார் பரந்தாமன்.

பரந்தாமன் அங்கிள் வாங்க.

"தம்பி அப்பா இருக்காரா?" என்று கேட்டபடி தனது மூக்குக் கண்ணாடியை சற்று நெற்றியில் நகர்த்திவிட்டு உள்ளே அலுவலகம் பக்கம் எட்டிப் பார்த்தார்.

“இல்லை அங்கிள். இனிமேல்தான் வருவார் அவர் இப்போ மாத்திரை போட்டுவிட்டு சற்று ஓய்வில் இருக்கார்”
“என்ன.. அங்கிள் .... ஏதாவது முக்கியமா?..”
“முக்கியம்தான் அதை அவரிடம்தான் பேசவேண்டியுள்ளது..” என்று சற்று யோசித்துக் கொண்டிருந்தவருக்கு அமரவென மணி, கதிரையைக் கொண்டு வந்து போட்டான்.
கதிரையில் இருந்த வண்ணம்,
“சோதித்தம்பி வேலையெல்லாம் எப்படிப் போகுது.? சரியான பிசியாய் இருக்காய் போல?”
“ஆமாம் அங்கிள். விதைப்புக் காலம் நெருங்குதுதானே அதுதான் டிராக்டர்களை கொண்டு வந்து போட்டுள்ளார்கள்”
“அதுதானே பார்த்தேன், நேற்று முன்தினம் வந்திருந்தேன். நீ ஜெயதாசனுடன் போனதைப் பார்த்து விட்டுத் திரும்பி விட்டேன்.”
அவர் சொன்ன தொனியில் ஏதோ உள்ளர்த்தம் இருப்பதாக உணர்ந்தான்.
“ஏனங்கிள் அப்போ அப்பா இருந்தார். அவரைப் பார்க்கவில்லையா அங்கிள்?”
“இல்லை தம்பி, எதுக்கு அவரைக் குழப்புவான் என்றுதான் திரும்பிப் போய் விட்டேன்.”
சோதிக்குத் தெரியும் அவர் நிச்சயமாக இங்கு வந்திருக்க மாட்டார். ஜெயதாசன் வீட்டுக்குப் போய் வந்தபின் மணி சொன்ன ஒரு விடயத்தை இப்போ எண்ணிப் பார்த்தான்.
அன்று சோதி வந்த பின்,

மணி சோதியிடத்தில் வந்து,
"அண்ணே. நான் கடைத்தெருவுக்குப் போயிருந்த போது பரந்தாமன் அங்கிள் என் பின்னே வந்து, --"டேய் மணி, என்ன ஜெயதாசன் உங்க கராஜ் பக்கம் இருந்து வருகிறார், என்ன விஷயம்னு தெரியுமா?..--- கேட்டார். நான் எனக்கு ஜெயதாசன் யார்னே தெரியாதுன்னு சொல்லிட்டு வந்தேன்." என்று சொன்னதை நினைத்துப் பார்த்தான் சோதி.
சோதியின் அப்பா அவனிடம் பரந்தாமனைப் பற்றி ஏற்கெனவே சொலியிருக்கார்
அவருக்கு ஒரு மகள், மகன் . அவர் மனைவி ஒரு டீச்சர், இவர் ரிடைர்ட் விதானை.
அவர் சம்பாதிப்பு விள்ளங்கம் சொல்லி சேர்த்த அபரிதமான சொத்து சேகரிப்பு.
மன்னாரில் இரண்டு வீடுகளில் ஒரு வீடும் பேசாலையில் ஒரு வீடும் வாடகைக்கு விட்டு இருக்கார். மாத வருமானத்துக்கு குறைச்சலில்லை. ஆசைகளுக்கும் குறைச்சலில்லை. இருந்தும் மற்றவர் வளர்ச்சியைப் பொறுக்க மாட்டாதவர். அவர் ஒரு குறிக்கோளுடன் இருப்பதால் தான் இன்னும் சோதியின் வளர்ச்சியில் மூக்கு நுழைக்காமல் இருக்கார்.
அதனாலேயே பரந்தாமன் அங்கிள் என்றால் மனதளவில் நூறடி தள்ளித்தான் இருக்கிறான்.
பல வீட்டு நிகழ்ச்சிகளுக்கு சோதி அப்பாவைக் குடும்பத்தோடு வரச் சொன்ன போதும் சோதி மட்டும் அங்கு போவதை நிறுத்தி விட்டான். கடைத்தெரு பக்கங்களில் அடிக்கடி அவர் மகளைப் பார்த்த போதும்

வலியப் போய் பேச நினைத்ததில்லை ஆனால் அவள், ராதா இவனிடம் வந்து வலியப் பேசுவதுண்டு.
ராதா அழகானவள் தான். ஆனால் மாடர்ன் ட்ரெஸ்ல் தான் அவளை எப்போதும் பார்க்க முடியும். அவள் கோவிலிற்குக் கூட பெரும்பாலும் சுரிதார் அணிந்தே வருவதுண்டு.
ட்ரெஸ் வகையில் ராதாவுடன் சுவாதியை ஒப்பிடவே இயலாது. வீட்டில் தாவணியுடன் அவளை முதன் முதலில் பார்த்த போது அவள் இவன் மனசுக்குள்ளும் புகுந்து விட்டது உண்மையோ உண்மை. என்ன ஒரு சாத்வீகமான அழகு. மீண்டும் அவளைப் பார்க்க மாட்டோமா என அவன் இந்த நாலு நாளா ஏங்கித்தான் போனான்.
"சோதி!"
பரந்தாமனின் அழைப்பால் திடுக்கிட்டு சுவாதியை விட்டு இவரிடம் திரும்பினான்.
"என்ன அங்கிள்?"
"என்ன யோசனை நான் கேட்டதுக்குப் பதிலையே காணோம்?"
"என்ன அங்கிள் கேட்டீங்க?"
"சரியாப் போச்சு? சோதிக்கு மாப்பிள்ளை கனவோ?.."
இவர் என்ன.. இப்படி உளறிக் கேட்கிறார்?
"இல்லை அங்கிள்... பாட்டரிக்கு சொல்லி இருந்தேன் இன்னும் காணோம்....."
சமாளித்தான் சோதி.
"சோதி நான் என்ன கேட்டேன் என்றால் ....ரெண்டு நாளைக்கு முன்னாலே போலீஸ் எஸ்.பி வந்தாரே? என்ன ஆச்சு?"

“சரியாப்போச்சு. இந்தாளுக்கு என் கராஜைக் கவனிப்பதேதான் வேலையோ?”
“அதுவா அங்கிள். அவர் வீட்டு பசு மாடு கன்று போட முடியாமத் தவித்துக் கொண்டு இருந்ததாம். அதுதான் எனக்குத் தெரிந்த மிருகவைத்தியரிடம் அழைத்துப் போனேன்….”(சோதி வேணுமென்றே கதை விட்டான்)
“ஓ.. அப்படியா.. நானும் என்னமோ ஏதோ என்று நினைத்துவிட்டேன்” – என்று அமுங்கிவிட்டார். அவருக்கு ஏண்டா அவனிடம் இந்தக் கேள்வியைக் கேட்டோம் என்று தோன்றியதோ என்னவோ..
“யாரு .. பரந்தாமனா? வா.. வா.. உள்ளே வா..”
‘நல்ல வேளை அப்பா வந்து இவனைக் காப்பாற்றி விட்டார்.’
அரை மணி நேரம் சென்றது. அவர் புறப்பட்டுப் போய்விட்டார். போகும் போது சற்று முகம் தொய்ந்த நிலையில் இவனிடம் கூட சொல்லிக் கொள்ளாமல் புறப்பட்டுப் போய் விட்டார்.
சோதி சற்று நேரம் கழித்து அலுவலகத்தில் வந்து அப்பாவிடம்,
“அப்பா, நான் மதியம் வவுனியா போகனும்.முக்கியமான உதிரிப் பாகம் வாங்கனும்”
“சரிப்பா சோதி. மதியம் சாப்பிட்டு விட்டுப் புறப்படு.”
வவுனியா பஸ்… புறப்பட ஆயத்தம், ஓடி வந்தே ஏறினான்.
பஸ்ஸின் நடுப்பக்க சீட்டைக் கடந்து முன்னுக்குப் போய் இடது பக்க இருவர் அமரும் சீட்டில் அமர்ந்தான். பஸ் பாலம் கடந்து தள்ளாடி ரோட்டில் போய்க் கொண்டு இருந்தது.

இடையில் பஸ் திடீரென நின்றது. ரோடில் வான் ஒன்று நின்று கொண்டிருக்க அதிலிருந்து இறங்கிய பரந்தாமனும் ராதாவும் பஸ்ஸினுள் முன்பக்க வாசலால் ஏறினார்கள்

உள்ளே ஏறிய ராதா இவனைப் பார்த்ததும் மிகுந்த முக மலர்ச்சியோடு அருகில் வந்து அமர்ந்தாள். அவள் பின்னால் ஏறிய பரந்தாமன் அங்கிளைப் பார்த்ததும் அவருக்கு இடம் கொடுக்க நினைத்து இவன் எழுந்து கொள்ளும் போது,

"நீங்கள் இருங்கோ சோதி. அப்பா என்னை ஏற்றிவிட்டு டிரைவர் கணேஷடம் சொல்லத்தான் ஏறினார். அவர் வரவில்லை. வானைத் திருத்திக் கொண்டு வவுனியா வந்து விடுவார்"

பஸ் கண்டக்டர் கணேஷடம் தன் மகளை செட்டிக் குளத்தில் இறக்கி விடச் சொல்லிவிட்டு சோதியிடமும் ஒருவார்த்தை சொல்லிவிட்டு இறங்கி விட்டார்.

"அப்புறம் சோதி, வவுனியாவுக்கா?"

"ஆமாம், நீ அம்மம்மா வீட்டுக்கா?"

"ஆமாம் அம்மம்மாவிடம் ரெண்டு நாள் இருந்து விட்டு கிளம்பி வந்துவிடுவேன்."

"நீங்க உடனே திரும்பி விடுவீங்களா? வாங்களேன் அம்மம்மா வீட்டுக்கு வந்துட்டு அடுத்த பஸ்ஸில் வவுனியா போகலாமே"

"எனக்கு நிறைய வேலை இருக்கு உடனே போய் திரும்பவேண்டும்"

அதற்கு மேல் பேசாமல் ( பேச விரும்பாமல்) போனை எடுத்து நோண்டுபவன் போல் பாசாங்கு பண்ணினான்.

அப்போ ராதாவின் போன் ரிங்காக, அவள் அதைக் காதில் வைத்து பேச ஆரம்பித்தாள்.
"ஹலோ!.."
"................"
"ஏய் சுவாதி, என்னடி?"
"................"
"நான் இப்போ அம்மம்மா வைப் பார்க்க செட்டிக்குளம் போய்க் கொண்டு இருக்கேன், வான் பழுதாப் போச்சு அதனால் பஸ்ஸில்தான் போகிறேன்"
"................"
"இல்லைடி அப்பா கண்டக்டரிடம் சொல்லிட்டு இறங்கிட்டார். அதுவுமில்லாம பக்கத்துலே துணையாக சோதி இருக்கார். பயமில்லை"
"................"
வெள்ளிக் கிழமை கேதீச்சரம் போறியா என்ன விஷயம்"
"................"
"ஓ அப்படியா, நான் வரப் பார்க்கிறேன். கோவிலுக்குப் போய்ட்டு உன் வீட்டுக்கு வந்து விடுகிறேன், நைட்டுக்கு கொண்டு வந்து விடுவாய்தானே?"
"................"
"சரிடி.. வேற ஒன்னுமில்லை. நான் அம்மம்மா வீட்டுக்குப் போய்ட்டுப் பேசுறேன். பஸ் எஞ்ஜின் இரைச்சலில் சரியாக விளங்க வில்லை. பை..டீ"
சோதி மனசுக்குள் சற்று வியப்பாய் உணர்ந்தான். ஓ சுவாதிக்குப் பிறந்த நாளோ... ...
"சோதி.. எனக்கு ஒரு உதவி செய்ய முடியுமா?.."
"என்ன உதவி?"

“வேறு ஒன்றுமில்லை. வவுனியா வியாசன் ஸ்டூடியோவில்.. நான் தருகின்ற நம்பரைக் கொடுத்தீங்கன்றால் உடனே பிறிண்ட் போட்டுத் தருவாங்க. நீங்க வாங்கி வந்து வீட்டில் வைத்து இருங்க.. நன் வந்து வாங்கிக் கொள்ளுறன்.. என் ஃப்ரண்டு சுவாதிக்கு வார வெள்ளிக் கிழமை பெர்த்டே. இப்போ அவள்தான் பேசினாள்”...

என்று சொல்லிய படி தன் கைப்பையைத் துலாவி ஒரு ரிசீப்டு தந்தாள்.

வாங்கி பெர்ஸில் வைத்துக்கொண்டான். ‘நம்மாளு பெர்த் டேயா. நல்ல பரிசு ஒன்று தேடி வாங்குவோம்...’சோதி மனசுக்குள் குதூகலிப்போடு திட்டமிட்டான்..

வவுனியா....

தான் வந்த வேலைகளை முடித்துக் கொண்டு. ராதா சொன்ன வியாசன் ஸ்டூடியோவுக்குப் போனான்.

அவள் கொடுத்த ரிசீதை அங்கு கொடுத்தான்

“எத்தனை பிறிண்ட் அண்ணே? ஒரு பதினைஞ்சு நிமிஷம் ஆகும் பரவாயில்லையா?”

..ராதா ஒன்றுதான் சொன்னாள். எதுக்கும் இரண்டு சொல்லுவோம்..

“இரண்டு கொப்பி பிறிண்ட் போடுங்க...நான் இங்கேயே உட்கார்ந்து காத்திருக்கேன்”

கால் மணி நேரத்தில் இரண்டு A4 பிறிண்டு போட்டு பெரிய என்வலப்பில் கொடுத்தார்கள்.

அதனை வாங்கிப் பார்த்த சோதிக்கு ஆச்சரியமாய் இருந்தது.
அதில் A4 சைஸில் சுவாதி அழகான பிங்க் சாரியிலும், ராதா சுடிதாரிலும் சிரித்துக் கொண்டிருந்தார்கள்.
"தம்பி, இன்னுமொரு உதவி இந்த இரண்டு பேரையும் தனித்தனியாக உங்க போட்டோ சிஸ்டம் மூலம் பிரிச்சு இரண்டு பேரையும் இரண்டு பிரிண்ட் போட முடியுமா?"
அவனுக்குத் தேவை, சுவாதியின் படம் மட்டும் தான். ஆனால் ஸ்டூடியோக் காரன் நாளை பின்னே ராதாவைப் பார்க்க நேர்ந்தால் தேவையற்ற கதைகளுக்கு இடம் கொடுப்பானேன் அதனால் தனித்தனி இரண்டு பிரிண்ட் போடச் சொல்லி விட்டான்.
"முடியும் அண்ணே... ஒருமணி நேரம் கழித்து வருவீங்களா?"
"சரி தம்பி. ஒரு விஷயம் இரண்டு பேருக்கும் நல்ல பூந்தோட்டம் அல்லது மரங்கள் போல் பின்னணி கொடுங்க.
சரி அண்ணே, வந்து பாருங்க. இரண்டு பிரிண்டுக்கும் 1500.00ரூபா வாகும்.."
"பரவாயில்லை.. இந்தாங்க.."
என்றவாறு பணத்தை கொடுத்து விட்டு வவுனியாவில்அவனது நண்பன் பாலுவைப் பார்க்கப் போய்விட்டு மீண்டும் வந்தான்.
பிரிண்டுகளை வாங்கிக் கொண்டு படத்தைப் பார்த்தான். அழகான பூந்தோட்டத்தில் சுவாதி சிரித்துக் கொண்டிருந்தாள்.

**மன்னார்...**

வியாழக்கிழமை ராதா வந்ததும் அவள் படத்தை எடுத்துக் கொடுத்தான், சோதி.
"மிகவும் நன்றி சோதி" என்று மகிழ்ச்சியோடு சொல்லிவிட்டுப் போனாள்.

**வெள்ளிக்கிழமை மாலை கேதீச்சரம் கோவில்,**

தனது அம்மாவுடனும் ராதாவுடனும் வந்திருந்தாள் சுவாதி. அழகான பச்சை நிறச் சேலையில் அழகுதேவதையாக வந்திருந்தாள். ராதா நண்பிக்கு மாட்சாக பச்சை நிறத்தில் சுரிதாரில் இருந்தாள்.
பூஜை முடிந்த பின் அர்ச்சனை முடித்துக் கொண்டு வெளியே வந்தவர்களை கோபுர வாசல் படிகளில் எதிர் கொண்டார்கள் கிருஷ்ணாவும் சோதியும். பரஸ்பரம் வணக்கத்தைத் தெரிவித்துக் கொண்ட பின் சோதி சுவாதியைப் பார்த்துப் புன்னகைத்தான்,
வெட்கத்தில் சிவந்த அழகு தேவதைக்கு –
"பிறந்த நாள் வாழ்த்துக்கள் சுவாதி.." என்றவாறே கைகளைக் குவித்துச் சொல்லிவிட்டு, கிருஷ்ணாவிடம் இருந்து அந்த பார்சலை வாங்கி அவள் கைகளில் கொடுத்தான்.
"ஆஹா உங்களுக்கு எப்படி என் பிறந்த நாள் என்று தெரியும்?..."
சோதி ... மெதுவாக ராதாவைப் பார்த்தான்.
"ஓ.. அவள் சொன்னாளா?.."
கிருஷ்ணாவும் சேர்ந்து அவளுக்குப் பிறந்த நாள் வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொண்டான்.
கிருஷ்ணா ராதாவைப் பார்த்து,

“உங்க பிறந்த நாள் எப்ப?..” என்று கேட்டான்.
“அவளுக்கு அடுத்த மாதம் 15ம் திகதி” என்று .. சுவாதி சொன்னாள்.
“அப்படி என்றால் அடுத்த மாசம் 15ம் திகதி புதன் கிழமை. கோவிலுக்கு வருவீர்களா?”
என்று கேட்ட கிருஷ்ணாவை சற்று வெட்கத்துடன் பார்த்தாள்,ராதா.
“நான் அவளைக் கூட்டி வருகின்றேன்” என்றவாறு கண்ணைச் சிமிட்டியபடியே சுவாதி ராதாவைப் பார்த்தாள்.
அட இவளுக்கும் வெட்கம் எல்லாம் வருதே.. என்று மனசில் சொல்லிக் கொண்டாள் சுவாதி
கிருஷ்ணாவைப் பார்த்துக் கொண்டே ராதா கேட்டாள்..
“ஒவ்வொரு வெள்ளிக் கிழமையும் கோவிலுக்கு வருவீர்களா?”
“ஓமோம்... வெள்ளிக் கிழமை என்றில்லை தினமும் காலையில் வருவேன். சோதிதான் வெள்ளிக் கிழமை மாலைப் பூசைக்கு வருவார்...அவரோடு நானும் வருவேன்..” என்று கிருஷ்ணா சொன்னான்.
இவர்களிடம் விடை பெற்றுக் கொண்டே கோவிலுக்குள் போனார்கள் கிருஷ்ணாவும் சோதியும்.
இரவு 9.00 மணி
வழமைபோல் கடை வாசலில் அமர்ந்து கொண்டார்கள்.
“சோதி இப்போ சந்தோஷம் தானே?”
“எதுக்கு?”
“சுவாதி மனசிலே நீ போய் உட்கார்ந்து இருப்பதை நானும் அவளிடம் கண்கள் மூலம் பார்த்துவிட்டேன்”
சொன்ன கிருஷ்ணாவிடம் சோதி,

“என்ன ராதா.. கிருஷ்ணா!...”
கிருஷ்ணா சிரித்தான்.. சற்று வெட்கம் தொனிக்க..
“சோதி.. பச்சைச் சுரிதாரில் அசத்துறா ராதா.. இல்லையா?”
“ஓமொம்.. ஆனா நான் எங்கே அதை ரசித்தேன்.. நீதான் சரிந்து விட்டாயே அவள் பார்வை வீச்சில்..அதைத்தான் ரசித்தேன்.. ..”
“சோதி... ராதாவை முதன் முதல் இப்போதானே பக்கத்தில் பார்க்கிறேன்...”
“இந்தா கிருஷ்ணா நீ, இந்த ராதாவையே பார்த்துக் கொண்டே இரு” – என்று தனது பையில் இருந்து ஒரு பெரிய என்வலப்பை அவனிடம் கொடுத்தான்.
“என்னடா இது?”
“பிரிச்சுப் பாரேன்...”
பார்த்தான் .. படத்தில் – ரோஜாத்தோட்டத்தில் ராதா அழகாக சிரித்துக் கொண்டிருந்தாள்
“சோதி.. எப்படிடா? நன்றிடா ...நன்றி” என்றவாறு சந்தோஷத்தில் கட்டிக் கொண்டான் சோதியை.
“சரி சரி .. வேணுமென்றால் பாரேன் ராதா அடுத்த வெள்ளிக் கிழமையும் கோவிலுக்கு வருவாள்.”
மன்னார் பஸ் வந்தது....

**ஆண்டாங்குளம்**

தோழிகள் இருவரும் கட்டிலில் அமர்ந்திருந்தார்கள் சுவாதி கையில் அந்த பெரிய என்வலப் அதைப் பிரித்து போட்டோக்களை வெளியே எடுத்தாள்.

“ஏய் … மிக்க நன்றி ராதா.. இந்தப் போட்டோவை பார்க்கும் போது நமது விவசாயக் கல்லூரி நாட்கள் ஞாபகம் தான் வருது…”
“ஆமாம் சுவாதி அதுதான்.. வவுனியாவுக்குப் போன சோதியிடம் சோல்லி பிரிண்ட் போட்டு எடுத்துக் கொண்டேன்.”
“ஆமாம் சுவாதி.. எங்கே சோதி கொடுத்த பார்சல். அதை நீ பிரிச்சுப் பார்க்கவில்லை?”
சுவாதி அந்தப்பார்சலை தனியாக வைத்திருந்தாள். ராதாவின் முன் அதைப் பிரிக்க மனசு வரவில்லை.. இப்போ அவள் வற்புறுத்தவே கைப் பையில் இருந்து அதை எடுத்துப் பிரித்தாள்.
உள்ளே… அழகான ரோஜாத் தோட்டத்தில் சுவாதி பிங்க் கலர் சாறியில் சிரித்துக் கொண்டிருந்தாள்…
“அட மைனர் என்னட்ட சுட்டு உனக்குத் தந்திருக்காரா?”
“என்னடி சொல்றாய்..ராதா?”
“அன்னிக்கு வவுனியாவுக்குப் போன சோதியிடம் ஸ்டூடியோ ரெசீப்ட் கொடுத்து நம்ம போட்டோவை பிரிண்ட் போட்டு எடுத்துத் தரச் சொன்னேன். மைனர் என்னடான்னா நம்ம போட்டோவில் இருந்து உன்னை மட்டும் இந்தமாதிரி பிரிண்டு போட வைத்து பரிசு கொடுத்துள்ளார்.”
“அப்படியாவது வித்தியாசமாய் யோசித்து செய்துள்ளாரே.. அவரைப் போய் மைனர் அவர் இவர் சுட்டுட்டார் என்று சொல்லிக் கிண்டல் பண்ணுறாய்..”
“பார்ரா.. அவரைச் சொன்னதும் அம்மாவுக்குக் கோபம் பொத்துக் கொண்டு வருது… சரி…என்னடி…

பரிசெல்லாம் தந்துள்ளாரே சோதி..சுவாதி….என்ன… ரோடு போட்டாச்சா”…

“போடி.. நீ ஒன்று.. அப்படியெல்லாம் இல்லை..”

“சுவாதி.. நீ என்ன வேணும் என்றாலும் சொல்லு.. நான் அடிச்சுச் சொல்வேன்.. நீ அவன் மனசுக்குள்ளே புகுந்துவிட்டாய்..”

சுவாதியின் கன்னமிரண்டும் வெட்கத்தால் சிவப்போ சிவப்பாகிவிட்டது..

“ஏய் உன் கன்னமும் கண்களுமே சொல்லுதுடி… வாழ்த்துக்கள் சுவாதி”

“சும்மா போடி.. எனக்குப் பசிக்குது.. வா சாப்பிடலாம்..”

“சமாளிக்காதே சுவாதி.. இனி உனக்குப் பசிக்கக் கூடாது.. தூக்கம் வரக் கூடாது… கோப்பி தேத்தண்ணி கசந்தாலும் புரியாது…என்ன மாயம்டி பண்ணினான்..”

“அதெல்லாம் ஒன்றும் இல்லை. போனவாரத்துக்கு முந்தின வாரம்தான் முதன் முதல் அப்பா அவரைக் கூட்டிக் கொண்டு வந்திருந்தார்..”

“எதுக்கு பொண்ணு பார்க்கவா?..”

“போடி.. நம்ம மில்லு ஜெனரேட்டர் பழுதாகி எத்தனையோ மெக்கானிக்குகள் வந்து பார்த்தும் சரி வரவில்லை ..அவர் வந்தார் என்ன மாயம் செய்தாரோ?.. அரை மணிநேரத்தில் மில்லு இயங்க ஆரம்பித்து விட்டது. அப்பாவுக்கு பரம சந்தோஷம்…”

“அப்படியே உனக்கும் மாயம் பண்ணிக் கொண்டு உன் மனசுக்குள்ளும் வந்து உட்கார்ந்து கொண்டாராக்கும்..”

சுவாதிக்கு வெட்கம் பிடுங்கித் தின்றது….

திடீரென்று ராதா கேட்டாள்..

“ஏண்டி ஒவ்வொரு வெள்ளிக் கிழமையும் கோவிலுக்குப் போகலாமா?,”
“ஓம் போகலாமே.. தினமும் போறது என்றாலும் எனக்கு ஓகேதாண்டி ராதா... ஆமாம் நான் போறது ஓகே நீ எதுக்கு போகனும் என்று துடிக்கிறாய்..”
“எனக்குப் புரிஞ்சு போச்சு ராதா. நான் அப்பவே கேட்க வேண்டும் என்றிருந்தேன்..கிருஷ்ணாவை உனக்கு முன்பே தெரியுமா?”
“கிருஷ்ணாவா... யார் அது?..”
“ஏய் ஒன்றும் தெரியாத பாப்பாவாம் போட்டுதாம் தாப்பா,, கதைதான். அவர் தான் சோதி ஃப்ரண்டு..”
“ஓ.. அவரா?”
“அவரு?.... ஓமோம் அவரேதாண்டி..”
“அட இப்போ உன் முறையா?”
“என்னடி ராதா இப்படி கன்னம் சிவக்குது?..சரி சரி.. நான் ஏதும் உதவி பண்ணவாடி..?”
“நீ ஒன்றும் பண்ண வேண்டாம் தாயே .. இப்போ கொஞ்சம் மூடிக் கொண்டு இருக்கியா? அங்கே என்ன இருக்கு என்றே தெரியாம....”
“எங்கே..? என்ன.. ராதா? கிருஷ்ணா பந்தை உன் பக்கம் உருட்டி இருக்கார். இப்போ உன் முறைதானேடி..”
“சும்மா இருடி சுவாதி.. வா எனக்கும் பசிக்குது..”

6

கோவில்களில் மட்டுமின்றி உலகில் உள்ள அனைத்து உயிர்களுக்கும் ஆபத்து ஏதாவது நேரும்போது சிவனின் அம்சமாக இருந்து

ஆபத்துக்களிலிருந்து விடுபட வைத்துக் காப்பாற்றுபவர் பைரவ மூர்த்தியாவார். இதைத் தவிர எல்லைக் காவல் தெய்வமாகவும் இருந்து அருள் பாலிக்கிறார். கால பைரவர்: பைரவ உருவங்களில் பல உண்டு என்றாலும் பிரதானமானவராகக் கருதப்படுபவர் கால பைரவர். காசி கோவிலில் பைரவர்தான் பிரதானமாக வணங்கப்படுகிறார். எண்ணற்ற மக்கள் கால பைரவரின் புனித ரட்சையை (காசிக்கயிறு) அணிந்து கொண்டு எவ்வித அச்சமும் இல்லாதவர்களாக வாழ்ந்து வருகிறார்கள். சனீஸ்வர பகவானுக்கு குருவாக விளங்குபவர் பைரவர். சூரியன் மகனான யமதர்மனால் அலட்சியப்படுத்தப்பட்டு கவுரவக் குறைவை அடைந்தார். சனி அவருடைய தாய் சாயாதேவியின் அறிவுரைப்படி பைரவரை வழிபட்டு அவருடைய அருளால் நவக்கிரகங்களில் ஒருவராக கிரக தேவ பதவி கிடைக்கப் பெற்றார்.

**கேதீச்சரம்..**

**புதன் கிழமை..**

*கிருஷ்ணாவுக்கு எந்த வேலையும் போன வெள்ளிக் கிழமையிலிருந்து ஓடவே யில்லை சிந்தனை முழுதும் ராதாதான் நிறைந்திருந்தாள்..*

*இன்றைக்கு அவளுக்கு பிறந்தநாள் இன்று எப்படியும் கோவிலுக்கு வருவாள். காலையில் வருவாளா? பின்னேரம் வருவாளா தெரியவில்லையே.*

*மன்னாரில் இருந்து வருகின்ற பஸ்களில் இருந்து இறங்கும் பயணிகளையே ஆவலுடன் பார்த்துக் கொண்டிருந்தான்.. சங்குப்பிட்டி பஸ் வருது. இது எப்பவும் சனம் நிரம்பித்தான் வரும் . இதில் கண்டிப்பா கசங்கிப் பிசங்கி வரமாட்டாள்..*

*அப்போது செல்லத்துரையார் கடிதக் கட்டுகளோடு வந்தார்.*

“இந்தாப்பா உனக்கு ஒரு கடிதம்”.
—வாங்கிப் பார்த்தான் இலங்கை வங்கியில் இருந்து வந்திருந்தது.
மிகுந்த ஆர்வத்துடன் பிரித்தான்.
உள்ளே “வேலையில் சேர்வதற்கான அழைப்புக் கடிதம்.”
“கடவுளே நன்றிப்பா.. எத்தனை இன்ரவியூ போனது… ஒருமாதிரி வேலை கிடைத்து விட்டது. முதலில் அம்மாவிடம் சொல்லிவிட்டுக் கோவிலுக்குப் போய் அர்ச்சனை செய்வோம்.”
கடையில் இருந்த சித்தப்பாவிடம் கடையைப் பார்க்கச் சொல்லிவிட்டு வீட்டுக்கு ஓடினான். தற்காலிகமாக ராதா சிந்தனையில் ஒரு ஓரமாகப் போய் உட்கார்ந்து கொண்டாள்.
அம்மாவிடம் வேலை கிடைத்ததைச் சொல்லி வணங்கி விட்டு..கோவிலுக்குப் போய் அர்ச்சனை பண்ணினான்.
அர்ச்சனை முடிந்து விபூதி அணிந்து நிமிர்ந்த போது..
அவன் கண்களை நம்பவே முடியவில்லை எதிர்ப்புறம்..
ராதா ஆரஞ்சு வர்ண சேலையில் அழகு தேவதையாக நின்றாள்.
அவள் கண்களிலும் ஆச்சரியம்.. ‘இங்கே கிருஷ்ணாவைப் பார்ப்போம் என்று…’
சட்டென்று சந்நிதான வாசல் என்பதையும் மறந்து,—
“உங்களுக்கு மனம் நிறைந்த பிறந்த நாள் வாழ்த்துக்கள்!”
என்று கிருஷ்ணா வாய் விட்டு அவளை வாழ்த்தியபோது குருக்களும் கேட்டார்.
“என்னம்மா ராதா .. பிறந்த நாளா இன்னிக்கு?”

“ஆமாம் ஐயா.. ஆசீர்வாதம் பண்ணுங்க ஐயா..”
“கௌரியம்பாள் சமேதர் கேதீச்சர நாதர் திருவருளால் சகல சௌபாக்கியமும் உண்டாகட்டும் அம்மா.. அர்ச்சனை பண்ணிடலாமா?”
அர்ச்சனை பண்ணி பிரசாதம் கொடுக்கும் வரை கிருஷ்ணாவும் காத்துக் கொண்டிருந்தான்.
“அது சரி அதிசயமா என்ன நீங்க இந்த காலையிலே கோவிலுக்கு வந்து இருக்கீங்க.”
குருக்களே முந்திக் கொண்டு பதிலை சந்தோஷமாக சொன்னார்.
“கிருஷ்ணாவுக்கு இலங்கை வங்கியிலே உதவி மானேஜர் வேலை கிடைச்சிருக்கு அதுதான் அர்ச்சனை பண்ண ஓடி வந்துள்ளான்”
“அப்படியா.. கிருஷ்ணா எனது மனமார்ந்த வாழ்த்துக்கள்” என்று கை குலுக்கிக் கொண்டாள்
குருக்கள் மனசுக்குள் சிரித்துக் கொண்டார்.. எத்தனை அனுபவமான உணர்வில் சிரித்திருப்பார் அவர்,
“ரெண்டுபேருக்கும் சகல சௌபாக்கியமும் கிடைக்கட்டும்”..என்றவாறு இருவரையும் வாழ்த்தினார்.
இருவரும் வெட்கத்தோடு ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டிருந்தார்கள்.
இருவரும் கோவில் வாசலில்–வெளியில் எதுவும் பேசாமல் மௌனமாக ஆனால் உரசியும் உரசாமலும் அருகருகாக வந்தனர். இருவர் மனத்திலும் சொல்ல முடியாத உணர்ச்சிக் கொந்தளிப்புக்கள்... அவர்களை மௌனமாக்கின,,

கோவில் வாசலில் கொன்றை மர நிழலில் ஒரு கார் நின்று கொண்டிருக்க அதன் மீது அழகாக சாய்ந்தபடி நின்றுகொண்டிருந்தாள் சுவாதி.

"அட.. சுவாதி வந்திருக்காங்க. அவங்க கூடத்தான் வந்தீங்களா?"

"ஆமாம். அவள் இன்று கோவிலுக்குள் வரமுடியாது..." அவன் ஏன் என்று கேட்கவில்லை..

"என்ன ரெண்டுபேரும் சோடியாக வருகிறீர்கள்...?" ராதாவும் கிருஷ்ணாவும் வெட்கத்தில் சிரித்துக் கொண்டிருந்தார்கள்.

"சாருக்கு, இலங்கை வங்கியில் உதவி மனேஜர் வேலை கிடைச்சிருக்கு அதுதான் அர்ச்சனை பண்ண வந்தார்".

"ஓ அப்படியா வாழ்த்துக்கள் கிருஷ்ணா.." என்று கைகுலுக்கிக் கொண்டாள்.

நன்றி என்றவனிடம்.

"சரி எங்கே உங்க ஃப்ரண்டைக் காணோம்."

"சோதியா...? அவனைப் பார்க்கத்தான் மன்னாருக்குக் கிளம்பிக்கொண்டு இருக்கேன். அவனை நேரிலே பார்த்து எனக்கு வேலை கிடைத்த விபரம் சொல்லவேண்டும்."

"அப்படியா வாங்களேன் எங்க கூட.. நாங்களும் மன்னாருக்குத்தான் போகிறோம்..அப்பாவும் அங்கே உங்க ஃப்ரண்டு கராஜில் தான் இருப்பார்."

"அப்படியா சரி வாருங்கள்."

"நீங்க உங்க தோழியோடு இருங்க .. நான் ட்ரைவ் பண்ணுகிறேன்."

கார் சாவியை வாங்கிக் கொண்டான்.

**மன்னார்..**

சோதி கராஜில் காரை நிறுத்திவிட்டு, மூவரும் இறங்கி உள்ளே நுழைந்த போது, சோதி தன் வாயெல்லாம் பல்லாகி வரவேற்றான்

"வாங்க சுவாதி வாங்க ராதா. கிருஷ்ணா என்ன உங்கள் ரெண்டு பேருக்கும் காவல்காரனா?"

"ஓம் சோதி நான் உன்னிடம் ஒரு சந்தோஷமான செய்தி சொல்ல வந்தேன். எனக்கு இலங்கை வங்கியில் அசிஸ்டெண்ட் மேனேஜர் வேலை கிடைச்சிட்டு. அர்ச்சனை பண்ண கோவிலுக்குப் போனால் ராதாவும் அர்ச்சனை பண்ண வந்துட்டாங்க. சுவாதியின் அப்பாவைப் பார்க்க இங்கேதான் வர வேண்டியிருந்ததால் நானும் சேர்ந்து கொண்டேன்."

"சோதி இந்தா சொக்லேட்.."

"அப்படியாடா?.. எவ்வளவு சந்தோஷமாய் இருக்கு,..."

"எந்த ஊருக்கு அப்போயிண்ட் மெண்ட்?"

"இங்கே மன்னாரிலேயேதான் முதல் போஸ்டிங். நாளைக்கு கொழும்பில் இருக்கவேணும். ரெண்டுவாரம் ரெயினிங் முடித்த பிறகு அடுத்த மாதம் முதலாம் திகதியில் இருந்து வேலை ஆரம்பிக்குது."

"நல்லதுடா. கிருஷ்ணா வாழ்த்துக்கள்டா" என்று அணைத்துக் கொண்டான் அவனை.

அப்புறம் ராதாவைப் பார்த்து .

"உங்களுக்கு எனது மனம் நிறைந்த இனிய பிறந்த நாள் வாழ்த்துக்கள்" என்று ராதாவின் கையைக் குலுக்கி விட்டு, கடைக்கண்ணால் சுவாதியைப் பார்த்துக்

கொண்டான். அவளும் அவன் பார்வையின் அர்த்தம் புரிந்து கொண்டவள் போன்று,
"உங்களது பரிசு மிகவும் பிடித்துக் கொண்டது. மிக்க நன்றி" என்றாள்.
ராதா மெதுவாக சுவாதியின் கையில் கிள்ளியதை இவன் கவனிக்கத் தவறவில்லை.
அப்போது மாடியிலிருந்து சோதியின் அப்பாவும் சுவாதியின் அப்பாவும் இறங்கி வந்தார்கள்.. பின்னாலேயே சோதியின் அம்மாவும் வந்தாள்.
"என்ன இங்கே இளைஞர் கூட்டம்?"
என்றவாறு ஜெயதாசன் இவர்கள் அருகில் வந்தார், சுவாதி பதிலுக்கு,
"அப்பா.. இன்று இரண்டு விசேஷம்."
"ஒன்று ராதாவுக்கு பிறந்தநாள். மற்றது, கிருஷ்ணாவுக்கு இலங்கை வங்கியில் வேலை கிடைத்து விட்டது."
"அப்படியா பிறந்தநாள் வாழ்த்துக்கள் ராதா."
"நன்றி அங்கிள்."
"கிருஷ்ணா உங்களுக்கும் என் வாழ்த்துக்களும் பாராட்டுக்களும்..."
"மிக்க நன்றி அங்கிள்...."
தொடர்ந்து சோதியின் அப்பாவும், அம்மாவும் அவர்கள் இருவரையும் வாழ்த்தினர்.
"மேலே வாங்கோ எல்லோரும் பலகாரம் சாப்பிட்டு டீ குடிச்சு கொண்டாடுவோம்", சோதி யின் அம்மா கூப்பிட்டாள்.
"இல்லை அன்ரி, நாங்க வெளியில் ஒரு பார்டி வைத்துக் கொள்ள ஆசைப் படுகிறோம்"

“அப்போ ஒரு ஐஸ்கிறீம் பார்டி வைப்போமா”
“அப்பா. அதைத்தான் நானும் சொல்ல இருந்தேன்..”
“ஜோதிவிலாஸ் போகலாம் அப்பா”
“சோதி நீங்களும் வாங்களேன்”
“கண்டிப்பா நான் இல்லாமலா. நீங்க முன்னுக்கு போங்கோ, பின்னாலேயே நாங்க வந்து விடுகிறோம்” என்றான் சோதி.
“அன்ரி அங்கிள் நீங்களும் வாங்களேன்” ராதா சோதியின் அப்பா அம்மாவை அழைத்தாள்.
“வேண்டாம்மா இவர் ஐஸ்கிறீம் சாப்பிட மாட்டார். நானும் தான். இன்னொருநாள் நீங்க எல்லோரும் வீட்டுக்கு வாங்கோ விருந்தே சாப்பிடலாம்”
“அதுவும் சரியே நீங்க எல்லோரும் போய்ட்டு வாங்கோ” என்றார் சோதி அப்பா.
ராதா, சுவாதி, அவள் அப்பா மூவரும் காரில் முன்னால் போக சோதியும், கிருஷ்ணாவும் ஆட்டோ ஒன்றில் போனார்கள்
ஜோதி விலாஸ் ஐஸ்கிறீம் ஹவுஸில் ...
ராதா, சுவாதி, ஜெயதாசன் மூவரும் வாசற்புறத்தை நோக்கியவாறு ஒருபுறமும், மறுபுறம் சோதியும் கிருஷ்ணாவும் அமர்ந்தவாறு, ஃப்ருட் சலட் ஐஸ்கிறீம் சுவைத்துக் கொண்டிருந்தார்கள்
அப்போது ராதாவின் அப்பா–பரந்தாமன் அந்தப் பக்கமாக போனவர், எதேச்சையாக ஜோதி விலாஸ் உள் பக்கம் பார்த்தார். அப்போ இவர்கள் அவர் கண்ணில் படவே உள்ளே வந்தார். வந்தவரை முதலில் பார்த்தது, ஜெயதாசன் தான்..

“ஏய் பரா.. வாடா.. கன நாள் ..உன்னைப் பார்த்து.. உன் மகள் பெர்த்டே பார்டி தான் வா வா..” என்று வரவேற்றார்,

“ராதா! அப்பாவும் சரியான சமயத்தில் வந்து விட்டேன் பார்த்தாயா...”என்றவர், கிருஷ்ணா பக்கத்தில் அமர்ந்து கொண்டார்.. சுவாதி அதைப்பார்த்து ராதாவின் துடையில் கிள்ளினது யாரும் அறியார்.

“அங்கிள்.. இந்த பார்ட்டி உங்க மகள் பெர்த் டே பார்டி மட்டும் இல்லை... கிருஷ்ணாவுக்கு இலங்கை வங்கியில் அசிஸ்டெண்ட் மனேஜர் வேலை கிடைத்ததற்கும் தான் பார்டி.”

சுவாதி விலாவாரியா சொன்னதன் அர்த்தத்தை கிருஷ்ணாவும் ராதாவும் கண்டிப்பா புரிந்து கொண்டிருப்பார்கள் என்று அவள் நினைத்தாள்

“அப்படியா ...பாராட்டுக்கள் தம்பி..” என்று பரந்தாமன் கிருஷ்ணாவின் தோளைத்தட்டிக் கொடுத்தார்.

ஆனால் இப்போ அவருக்கு சோதியை கணக்கே எடுக்கத் தேவையில்லை, என்று மனதில் உணர்ந்து கொண்டதாலோ என்னவோ சோதியின் பக்கம் பார்க்கவேயில்லை.

“நன்றி அங்கிள்” என்று கிருஷ்ணா சொன்னான்.

“ராதா தம்பியை வீட்டுக்கு அழைத்து வா. கிருஷ்ணா வீட்டுக்கு அவசியம் வரணும். அம்மா நல்லா இருக்காங்களா?. நானும் கேதீச்சரம் வந்து பல மாதங்கள் ஆகின்றன. இந்தக் கிழமை அந்தப் பக்கம் வேலை ஒன்று இருக்கு. அப்போ கண்டிப்பா வந்து உங்களோட அம்மாவைப் பார்க்கிறேன்.”

“வாங்க அங்கிள். நான் இன்று அவசரமாய் கொழும்பு போக ஆயத்தம் செய்யனும். இன்னும் இரண்டு வாரங்களின் பின் இங்கேதானே வேலை. அப்போ அவசியம் ஒருநாள் வீட்டுக்கு வருகிறேன் அம்மாவையும் அழைத்துக் கொண்டு,..”
பார்டி முடிந்து ஒருவரை ஒருவர் விடை பெற்றுக் கொள்ளும் போது, சுவாதி, கிருஷ்ணாவைத் தம்மோடு வந்தால் கேதீச்சரத்தில் விட்டு விடுவதாகச் சொன்னாள்.அதற்கு கிருஷ்ணா,
“அப்ப சோதி, நான் பின்னேரம் ரெயில்வே ஸ்டேஷனுக்குப் போக ஆயத்தமாய் வாறன்.”.
என்று சோதியிடம் சொல்லிவிட்டு அவர்களுடன் கிளம்பும் போது, பரந்தாமன் அவனிடம்,
“தம்பி கிருஷ்ணா நான் உங்களுக்கு ரெயிலுக்கு புக் பண்ணி விடுகிறேன். ஸ்டேஷன் மாஸ்டர் நம்ம ஆள்தான்” என்றார் பரந்தாமன்.
“நன்றி அங்கிள்”

**ஸ்டேஷனில்.**

சோதியும் கிருஷ்ணாவும்,
“சோதி ராதாவைப் பற்றி என்ன நினைக்கிறாய்?”
“கிருஷ்ணா.. இதில் நான் நினப்பதுக்கு என்ன இருக்கு? ராதா என்று உரிமையோடு நீ அழைப்பதை அவள் நிச்சயம் விரும்புவாள். மிகவும் சந்தோஷமாய் இருக்குடா. ராதாவினால் தான் உனக்கு அதிர்ஷ்டம் என்று நினைக்கிறேன். இன்றைக்கு ஆளே மாறி இருந்தாளே. அழகாக சேலை உடுத்திக் கொண்டு, அதுவும் உனக்கு விருப்பமான ஆரஞ்சு கலரில்.

“அவள் உனக்கு வாழ்க்கைத் துணையாய் அமைய நீ மிகவும் கொடுத்து வைத்தவன். பார்த்தாயா இன்னிக்கு. பரந்தாமன் அங்கிள் விழுந்து விழுந்து உன்னைக் கவனித்ததை. வேண்டுமென்றால் பார். அவர் கண்டிப்பா ஸ்டேஷனுக்கு வருவார்..”

அவன் சொல்லி முடிக்கவில்லை, ராதாவுடன் பரந்தாமன் வந்து கொண்டிருந்தார். கிருஷ்ணாவுக்கு ஆச்சரியம் தாங்கமுடியவில்லை.

அவர்கள் வரவும் ரெயினும் வரவும் சரியாக இருந்தது ரெயினில் இருக்கை அருகில் பயணப் பையை வைத்துவிட்டு கீழே இறங்கி வந்தான்.

சோதி கிருஷ்ணாவிடம் கண்காட்டிவிட்டு, பரந்தாமனுடன் தனியாக நின்று பேசுவதுபோல் பாசாங்கு பண்ணிக் கொண்டிருக்க,

ராதாவிடம் கிருஷ்ணா வந்தான்.

“ராதா....”

‘ராதா? ஆஹா கிருஷ்ணாவா அழைப்பது?’ உச்சி குளிர்ந்தாள், ராதா.

“கிருஷ்ணா நான் ஒரு கிஃப்ட் தந்தால் ஏற்றுக் கொள்ளுவீர்களா?”

“முதலில் கொடுங்களேன், ஏற்றுக் கொள்கிறேனா இல்லையா என்று நீங்களே பாருங்களேன்”

ராதா, சற்றுத் திரும்பி அப்பா தன்னை பார்க்கவில்லை என்பதை உணர்ந்து சட்டென்று தன் கைப் பையைத் திறந்து சிறிய பார்சலை அவன் கையில் திணித்தாள்.

அதனை வாங்கி ஜீன்ஸ் பாக்கட்டில் போட்டுக் கொண்டான்.

“என்னவென்று சொல்லுவீர்களா ராதா?”

*“அதை நீங்கள் அப்புறம் ரெயிலில் போகும் போது பிரித்துப் பாருங்கள்” – என்றாள்.*
*அப்போ ரெயில் ஹோர்ண் அடிக்கவே ரெயிலில் ஏறிக் கொண்டு இவர்களுக்கு கை காட்டிக் கொள்ளவே ரெயிலும் புறப்பட்டது.*
*தன் இருக்கையில் சாய்ந்து ராதா கொடுத்த பார்சலைப் பிரித்தான்..*
*‘கிருஷ்ணாவுக்கு எனது அன்புப் பரிசு. ராதா’*
*என்று போட்டு அவள் போன் நம்பரும் எழுதிய சிறு துண்டுவைத்து தங்க நிற பட்டியுடன், அழகிய ‘ஷீக்கோ’ வாட்ச் ஒன்று இருந்தது.*
*கொழும்பு வரை கிருஷ்ணா ஆனந்தமுடன் ராதாவுடன் டூயட் பாடிக் கொண்டே பயணித்தான்.*

## *7*

ஸ்ரீபைரவர் காவல் தெய்வமாகையால் காவல் குறியீடான நாயை வாகனமாகக் கொண்டுள்ளார். இந்த நாயானது பைரவருக்கு பின்புறம் குறுக்காகவும், அவருக்கு இடப்புறம் நேராகவும் நிற்கின்றது. நகரத்தார் கோவில்களில் காணப்படும் பைரவர் வடிவத்தில் பெரும்பாலும் இரு நாய் வாகனங்களே காணப்படுகின்றன. அஷ்ட பைரவ வடிவங்களில் இந்த நாய் வாகனம் வேறு வாகனங்களாகக் காட்சியளிக்கிறது. பைரவர்க்கு வாகனம், 1. அசிதாங்க பைரவர்- அன்னம் 2. ருரு பைரவர்- ரிஷபம் 3. சண்ட பைரவர்- மயில் 4. குரோதன பைரவர்- கருடன் 5. உன்மத்த பைரவர்- குதிரை 6. கபால பைரவர்- யானை 7. பீஷண பைரவர்- சிம்மம் 8. சம்ஹார பைரவர்- நாய். தேய்பிறை அஷ்டமி வழிபாடு:- இழந்த செல்வங்களை மீண்டும் பெறவும் தொழிலில் வளர்ச்சி காணவும் குடும்பத்தில் மகிழ்ச்சி

நிலவவும் செல்வ செழிப்போடு வாழவும் தேய்பிறை அஷ்டமியன்று பைரவர் வழிபாடு செய்ய வேண்டும்.

சோதியின் வீடு
ஞாயிற்றுக் கிழமை மாலை 3.00 மணி.
"சோதி வேனுக்குச் சொல்லி விட்டாயா?
"ஓமம்மா வேன் இப்போ வந்து விடும்."
"சோதி, மணி தயாராய் இருந்தால் வரச் சொல்லு இந்த பைகளையும் தாம்பாளத்தையும் கீழே கொண்டு போய் வைக்கச் சொல்லு.."
"அ.. அப்படியே நாம போகிறவழியில் பரந்தாமனையும் அவர் மனவியையும் ராதாயையும் கூட்டிப்போகனும். போன் பண்ணி ரெடியா என்று அறிந்து கொள்."
"சரி அம்மா.."
"அப்படியே தனம் வீட்டில் பூக்களும் பூச்சரமும் ரெடியா வைத்திருப்பாள். அதையும் போகும் போது எடுத்துக் கொண்டு போகனும்."
"சரிம்மா .. வேன் வந்தாச்சு அப்பாவை மெதுவாக கிழே அழைத்து வாங்கம்மா.."

**ஆண்டாங்குளம் ஜெயதாசன் வீடு.**
வீட்டின் வாசலில் வந்து நின்ற வேனில் இறங்கிய சோதி வீட்டாரையும் பரந்தாமன் குடும்பத்தினரையும் மகிழ்ச்சியுடன் வரவேற்றார் ஜெயதாசன்.
அனைவரும் ஷோபாக்களில் அமர்ந்தனர். மணி கொண்டு வந்த பொருட்களை எடுத்து வர சோதியின் அம்மா கற்பகம் அவற்றை தாம்பாளத்தில் எடுத்து

*வைத்தாள். பூச்சரப் பந்தை எடுத்து ராதா கையில் கொடுத்து அவளையும் சுவாதியையும் தலைக்கு வைத்துக் கொள்ளச் சொல்லி சொன்னாள். ராதா அதை எடுத்துக் கொண்டு வீட்டுக்குள் சென்று சுவாதியை அலங்கரிக்கும் அறைக்குள் நுழைந்தாள்.*

*"இதோ ராதா வந்துட்டாள். ராதா நீ சுவாதியின் அலங்காரத்தை கவனிச்சுக்கோ. நான் வந்தவர்களை உபசரிக்கிறேன்." என்று நகர்ந்தாள்*

*"ஏய் சுவாதி.. மாப்பிள்ளை வந்தாச்சுடீ. இந்த அழகுப் பெட்டகத்தை கையோடு தூக்கிக் கொண்டு போக வந்து விட்டார். சோதி இன்றைக்கு சினிமா ஹீரோ மாதிரி அட்டகாசமாக இருக்கார்டி".*

*"ஏய் என்னாளு மேலே உன் கண்ணு எப்படி படலாம்?"*

*"பார்டா ... தேவிக்கு வரும் கோபத்தை. அம்மா தாயே நான் ஒண்ணும் கண்ணும் வைக்கவில்லை காதும் வைக்கவில்லை. நீ அந்த அழகு மன் மதனைப் பார்க்க ரெடியாகு என்றுதான் சொல்கிறேன். இந்தா உன் மாமியார் நிறைய பூச்சரம் கொண்டு வந்திருக்காங்க. வைத்து விடுகிறேன்." என்றவண்ணம் கனகாம்பரம் மல்லிச் சரங்களை அவள் தலையில் அழகாக கோர்த்துவிட்டாள்.*

*அன்னை மகாலட்சுமியாய் ஜொலித்தாள் சுவாதி. அவள் அழகை ராதாவே ரசித்துக் கொண்டிருக்கும் போது கற்பகம் அம்மா வந்தாள்.*

*"என் ராசாத்தி என் கண்ணே படப் போகுது. அந்த மகா லட்சுமியே வந்தமாதிரி இருக்கு. நான் ரொம்பக்*

கொடுத்துவைத்தவள் சுவாதி" என்று அவளுக்கு கன்னம் வழித்து கண்ணூறு கழித்தாள்.
சுவாதியோட அம்மா கீதா உள்ளே வந்தாள் ..
"ராதா.. சுவாதியை அழைத்து வாடி." என்று விட்டு
"வாங்க சம்பந்தி அம்மா" என்று கற்பகம் அம்மாவை வரவேற்பறைக்கு அழைத்துச் சென்றாள்.
வரவேற்பறையில் பரந்தாமன், ராஜநாயகம், ஜெயதாசன் மூவரும் தம் பள்ளி நாட்களைப்பற்றிப் பேசிப் பகிர்ந்து கொண்டு இருந்தார்கள்,

சோதிக்கோ கிருஷ்ணாவின் நினைப்பே மிகுந்து இருந்தது. 'என்னுடைய எல்லா நிகழ்விலும் அவன் இருப்பான். இப்பமட்டும் என்னோடு அவனும் இருந்தால் எப்படி இருக்கும்.'– என்றவாறு அவனைப்பற்றி நினைத்துக் கொண்டிருக்கும் போது சோதியின் போன் அழைத்தது. எடுத்தபோது அவனுக்கு ஆச்சரியமோ ஆச்சரியம்..
"கிருஷ்ணா..." என்று வாய்விட்டே கூப்பிட்டான். போனைக் காதில் வைத்து,
"கிருஷ்ணா !"
"............."
"இங்கே ஆண்டாங்குளத்தில் மாமா வீட்டில்தான் இருக்கோம். நீயும் வா வா.."
"............."
"ஓ.. அப்படியா.. உள்ளே வந்து தான் கூப்பிடுகிறாயா?"
"ஜெயதாசனுடன் பரந்தாமனும் எழுந்து கொண்டார்கள்."
வெளியே வந்தார்கள்.
ஆட்டோவில் இருந்து இறங்கினான் கிருஷ்ணா.

“வாங்க தம்பி வாங்க”
“சரியான நேரத்தில் தான் வந்திருக்கீங்க வாங்க வாங்க” என்று ஜெயதாசன் வரவேற்றார்.
பரந்தாமனும்,
“தம்பி வாங்க கொழும்பு பிரயாணம் எல்லாம் நல்லபடியா முடிந்ததா?”
“ஓம் அங்கிள். நீங்க மட்டுமா வந்திருக்கீங்க?”
“இல்லை என்னுடன் ராதாவும் அம்மாவும் தான் வந்துள்ளார்கள்.”
சற்றுக் களைத்துப் போன முகத்தில் ராதாவின் பெயரைக் கேட்டதும் ஒரு பிரகாசம் வந்ததை பரந்தாமன் கவனித்தார். அவர் எதிர் பார்த்ததுதானே.
உள்ளே வந்து சோதியின் அருகில் அமர்ந்துகொண்டான்.
“என்ன மாப்பிள்ளை! பொண்ணு பார்த்திட்டீங்களா?”
“எங்கப்பா இன்னும் அலங்காரம் முடியலை போல..”
சொல்லிக் கொண்டிருக்கும் போதே அங்கு அழகு ரதம் ஒன்று நகர்ந்து வருவதைப் போல் வந்து கொண்டிருந்தாள் சுவாதி. கூடவே வந்த ராதாவின் முகம் சட்டென ஆயிரம் வாட்ஸ் பல்புமாதிரி ஒளிர்ந்தது, சோதி அருகில் இருந்த கிருஷ்ணாவைப் பார்த்ததும்.
‘என்னப்பா? சொல்லவே இல்லை’ என்பது போல் கண்களை விரித்து கோபத்தை காட்டினாள்.
‘கிருஷ்ணா கண்ணைச் சிமிட்டினான்., எனக்குத் தெரியும்டி நீ இங்கேதான் இருப்பாய் என்று, அதுதான் ஓடி வந்தேன்’ என்று கண்ணாலே பதில் சொன்னான்.
இந்த நாடகத்தைக் கவனிக்க சோதிக்கு நேரம் இருக்க வில்லை. அவன் அவ்வளவுக்கு சுவாதியின் அழகில்

கிறங்கிப் போய் இருந்தான். அவள் மேல் வைத்த கண்ணை எடுக்காமல் பார்த்துக் கொண்டிருந்தான்...
கிருஷ்ணாவுக்கு அருகில் வந்த சுவாதியோ அவன் கண் வீச்சில் இருந்து மீள முடியாமல் கிறங்கிப்போன தன் கண்களால் அவனை கட்டிப் போட்டாள்.
"மாப்பிள்ளைக்கு கோப்பியைக் கொடும்மா.." என்று கீதாம்மா ரெண்டு தடவை சொன்ன பிறகே தன்னிலைக்கு வந்தாள். கோப்பியை எடுத்துக் கொண்ட சோதியின் விலாவில் மெல்ல இடித்தான்,கிருஷ்ணா.
"டேய் சோதி மயக்கம் தீர கோப்பியைக் குடி".
"சரிடா.. சும்மா இருடா கிருஷ்ணா என்னைப் பார்க்கவே விடமாட்டாய் போல.." தன்னை மறந்து சற்று சத்தமாகவே சொன்னான். எல்லோரும் சிரித்தே விட்டார்கள்.
"சுவாதி மாப்பிள்ளை உன்னிடம் ஏதோ பேசனும் போல துடிக்கிறார். உள்ளே அழைத்துப் போம்மா"
பரந்தாமன் தான் சொன்னார்.
"அப்படியே பலகாரங்களையும் அவருக்கு கொடுத்து விடம்மா". என்று கீதாம்மா தன் பங்குக்கு சொல்ல, சுவாதி உள்ளே திரும்ப சோதியும் எழுந்து கொண்டான்.
வீட்டருகில் இருந்த வேப்பமரக்குடில் ஒன்றில் மேசை கதிரைகள் இருந்தன வெயில் காலத்தில் காற்றாட சாப்பிட அந்த இடத்தை அழகாக வைத்திருந்தார் ஜெயதாசன்.
இருவரும் அங்கு அமர்ந்து கொண்டனரே தவிர ஒருத்தருக்கு ஒருத்தர் வார்த்தைகள் எழவில்லை. அப்போ அங்கு ராதா வந்தாள்.

“என்ன இப்படியே பார்த்துக் கொண்டிருந்தால்.. எப்படி? அடுத்த வருஷம் உங்க கல்யாணம் வந்து விடும் அதுக்குள்ளே பேசி ஒரு முடிவுக்கு வாங்க.”

“ஏய் வாலு. உன் ஆளை விட்டுட்டு நீ மட்டும் இங்கே வந்திருக்கே?”

“தானா பின்னாலே வருவாரு என் ஆளு. பார்த்தீங்களா நான் சொன்னேனே.”

அவள் பின்னால் கிருஷ்ணா.

“நீங்க ரெண்டு பேரும் பேசுங்க நாங்க அந்தப் பக்கம் போகிறோம்.”

என்ற வண்ணம் மில் பக்கம் இருக்கும் வேப்பமரத்தடிக்கு அவர்கள் இருவரும் நகர்ந்தனர்.

“சுவாதி!”

“உம்...”

“நான் அதிர்ஷ்டசாலி..”

“நீங்க இல்லை நான் தான்.”

“உனக்கு நம்ம கல்யாணத்துக்கு அப்புறம் மன்னாரில் இருக்க விருப்பமா, இல்லை இங்கே நான் வந்து விட வேண்டும் என்று விரும்புவாயா?”

“இதென்னங்க கேள்வி. ராமன் இருக்குமிடம் தானே சீதைக்கும்.”

“நீ அப்படி நினைக்கிறாய். எங்க அம்மா அப்பா என்ன சொல்லுறாங்க தெரியுமா இங்கேயே பெரிய இடமா பார்த்து கராஜை மாத்திக் கொள்வோம். அதுவும் நல்லதுக்கே. அப்பதான் உன்னிடம் இருந்து தூரத்தில் இருப்பதாக மாமா மாமிக்கு ஒரு உணர்வு ஏற்படாது. அதோடு எங்கு இருந்தாலும் என் கராஜ்வேலைகள் எதுவும் கெட்டுப் போகாது.”

“எது எப்படியோ இனி நீங்கதான் என் உலகம். என்ன முடிவு எடுக்கறீங்களோ–அதனை செம்மைப் படுத்துவதுதான் என் வேலை.”
“இவ்வளவு விசாலமான மனப்பான்மையோடு இருக்கிறாய் உண்மையில் நான் மிகவும் கொடுத்து வைத்தவன்.”
“சரி இந்த பலகாரங்களை சாப்பிடலாமே..”
“இருவரும் சேர்ந்தே ..”
என்றவாறே இருவரும் பல எதிர்காலத் திட்டங்களைப் பற்றி பேசிக்கொண்டு இருக்க கிருஷ்ணாவும் ராதாவும் அவர்களுடன் சேர்ந்து கொண்டார்கள்.
ராதாவின் அம்மா இன்னும் பலகாரத் தட்டுடனும் கோப்பி பிளாஸ்குடனும் வந்தார்கள்
“எனக்குத் தெரியும் நாலுபேரும் இங்குதான் இருப்பீங்க என்று. இந்தாங்க இன்னும் கொஞ்சம் சாப்பிடுங்க”
“எனக்குப் போதும் மாமி.என்றான் சோதி.”
எனக்கு வேணுமென்று மறுக்காமல் அவற்றை வாங்கிக் கொண்டான் கிருஷ்ணா. ராதா எடுத்துக்கோ என்றவாறு தட்டை அவளை நோக்கி நீட்டினான்.
“ராதா.. உன் மனேஜர் என்னவாம் உன்னை மனேஜ் பண்ணுவாராமா?”
என்று கேட்டாள் சுவாதி.
“முதல்ல அவர் மரேஜ் பண்ணிக்கட்டும் அப்புறம் மனேஜ் பண்ணுறது என் வேலையாச்சு.”– கிருஷ்ணா அசடு வழிந்தான் எதுவும் பேசாமல்.
“என்னடா வாட்சு மின்னுது. கொழும்பில் வாங்கினியா?”

அவனுக்குத் தெரியும் அது ராதாவின் அன்புப் பரிசு என்று. வேண்டுமென்று வம்புக்குத்தான் கேட்டான்.

"ஓமோம் கொழும்பில் வாங்கினதுதான்.. நல்லாருக்கா?" இவர்கள் பேசிக் கொண்டிருந்ததில் நேரம் போனதே தெரியவில்லை.

ராதாவின் அம்மாவும் கற்பகம் அம்மாவும் வந்தார்கள். போகலாமா? என்று கேட்டவாறு.

ராதாவையும் கிருஷ்ணாவையும் ஜோடியாகப் பார்த்த ராதாவின் அம்மா,

"அடுத்த விசேஷம் நிச்சயதார்த்தம் உங்களோடதுதான் என்று உன் அப்பா சொல்லிட்டார்."என்று ராதாவின் அம்மா சொன்னபோது ராதா முகம் சிவந்தாள்.

"நல்ல செய்தி சொன்னீர்கள் மாமி " என்று கிருஷ்ணா சொன்ன போது மாமிக்கு முகம் சிவந்தது, உரிமையோடு அவன் 'மாமி' என்று சொன்னபோது...

"அப்ப எங்க கல்யாணத்துக்கு முன்னாலே இவுங்க ரெண்டு பேருடைய கல்யாணமா?" என்று சோதியும் சுவாதியும் ஒரு சேர சொன்ன போது, ராதா, கிருஷ்ணா ஜோடி ஒருவரை ஒருவர் பார்த்துக்கொண்டு வெட்கத்தை வெளியிட்டார்கள்

அடுத்து வந்த இரண்டு மாதங்களில்....

நான்கு முக்கிய நிகழ்வுகள் நடந்தேறின,

1. கிருஷ்ணா மன்னார் இலங்கை வங்கிக் கிளையின் உதவி முகாமையாளராய் தனது பொறுப்பை ஏற்றுக் கொண்டான்.

2. சோதி சுவாதி திருமண நிச்சயதார்த்தம்.

3.கிருஷ்ணா ராதாதிருமண நிச்சயதார்த்தம்

4. சோதியின் புதிய கராஜ் ஆண்டாங்குளத்து சந்தியில் பெரிய இடத்தில் இடம் மாறியதுடன். சோதிக்காக புதிய வீடும் ஜெயாமில்லுக்கு அருகில் கட்ட அத்திவாரம் இடப் பட்டது.
அது கட்டி முடிக்கும் வரை புதிய கராஜ் அருகில் ஒரு சிறிய வாடகை வீடு தற்காலிகமாக சோதியின் வீடாக மாறியது.
கிருஷ்ணாவுக்கு மன்னாரில் குவாட்டர்ஸ் ஒதுக்கப் பட்டமையினால் அம்மாவுடன் மன்னாருக்கே வந்து விட்டான்.
எது எப்படி மாறினாலும் இப்பவும் இருவரும் வெள்ளி தோறும் கேதீச்சரம் செல்வதை விடவில்லை.
கிருஷ்ணா தனக்கு தரப்பட்ட வங்கி வாகனத்திலேயே வருவான். வரும் போது மறக்காமல் ராதாவையும் அழைத்து வருவான்.
சோதி ஒரு ஸ்கூட்டி ஒன்று வாங்கி வைத்துக் கொண்டான். அதில் சுவாதியையும் அழைத்து வந்து விடுவான்.
கிருஷ்ணா கேதீச்சரத்து சாப்பாட்டுக் கடையை சித்தப்பாவை பார்க்கச் சொன்னதால் , வெள்ளி தோறும் நண்பர்கள் தமது வருங்காலத் துணைவியருடன் அந்தக் கடையில் தோசையோ இடியப்பமோ சாப்பிட்டுவிட்டு 9.00– 10.00 மணி வரை ஒன்று கூடிப் பேசுவதை வழக்கமாக்கிக் கொண்டனர்.

## 8

தற்போதைய கால கட்டத்தில் நமக்கு செல்வவளங்களை வழங்குவதற்கும் நம்மை நல்லவிதமாக வழிகாட்டி வாழவைப்பதற்கும் பைரவர் வழிபாடு மிக முக்கியமானது. தேய்பிறை அஷ்டமியில் இவரை வணங்குவது மிகச் சாலச் சிறந்தது. ஏனெனில் தேய்பிறை அஷ்டமி அன்று அஷ்டலட்சுமிகளும் காலபைரவரை வணங்கி தங்களுக்கு தேவையான சக்தியை பெற்று மக்களுக்கு மற்ற எல்லா நாட்களும் செல்வங்கள் வழங்கி வருகின்றனர் என்பது ஆன்றோர்கள் மற்றும் சித்தர்களின் நம்பிக்கை.அதனாலேயே அன்று அவரை வணங்குபவருக்கு அனைத்து நலன்களும் கிட்டும் என்பதில் எள்ளளவும் சந்தேகம் கொள்ளத் தேவையில்லை. நாமும் அதே தேய்பிறை அஷ்டமியன்று பைரவரை வழிபட,அஷ்ட லட்சுமிகளின் ஆசியும், பைரவரின் வரங்களும் ஒருங்கிணைந்து கிடைத்துவிடும். நேர்மையான வழியில் செல்வச் செழிப்பை அடைய உதவுவதே ஸ்ரீஸ்ரீஸ்ரீசொர்ண ஆகர்ஷணபைரவர் வழிபாடு ஆகும். ஒவ்வொரு தமிழ் மாதமும் வரும் தேய்பிறை அஷ்டமி நாளன்று நம் ஒவ்வொருவருக்கும் செல்வச் செழிப்பை அள்ளித்தரும் அஷ்ட லட்சுமிகளும் பூமியில் இருக்கும் ஸ்ரீசொர்ண ஆகர்ஷண பைரவர் சன்னதிக்கு வந்து அவரை வழிபடுகின்றனர்.

***கேதீச்சரம்.***

*வெள்ளிக் கிழமை.*

*அர்த்த சாம பூஜை முடிந்து சோதியும் சுவாதியும் புறப்பட்டனர். அன்று கிருஷ்ணாவுக்கு வேலைப்பளு சற்று அதிகமானதால் சுவாதியும் சோதியும் மட்டுமே வந்தனர்.*

“சுவாதி கொஞ்ச நேரம் நாம் பாலாவிப் பிள்ளையார் கோவில் மண்டபத்தருகில் இருந்துட்டுப் போவோமா?”

“நானும் அதைத்தான் சொல்ல இருந்தேன் சோதி...”

பாலாவிப் பிள்ளையார் கோவில் மண்டபத்தில் இருவரும் அமர்ந்து கொண்டனர். மேலே வானம் தெளிவாய் இருக்க வளர்பிறை நிலாவின் வெளிச்சம் பரவி இருக்க, சில்லென்ற காற்று மேனியைத்தழுவ... ஒரு பரவசமான நிலை மனதில் தோன்றியது.

“சோதி!.. கராஜில் சில புதுமையான மாற்ற கொண்டு வந்தால் நல்லாயிருக்கும் என்று நான் நினைக்கிறேன்..”

“நானும் அதைப்பற்றி சிலவேளைகளில் யோசிப்பதுண்டு சுவாதி. ஆனால் எப்படி என்றுதான் புரியவில்லை. உனக்கு ஏதாவது புரியுதா?”

“ஓம் அதைத்தான் சொல்ல வந்தேன். எனக்கு சில ஐடியாக்கள் தோன்றுகின்றன..

“சொல்லும்மா சுவாதி, இந்தப் பிள்ளையார் நல்ல வழிகாட்டுவார் என்று எனக்கும் நம்பிக்கை வ்ந்திட்டுது..”

“ஓம் சோதி கொஞ்சம் பணம் செலவழியும் தான் என்றாலும் நல்ல ரிசல்ட் கிடைக்கும் என்று நம்புகிறேன்”.

“சுவாதி பணத்தைப்பற்றி பிரச்சினை இல்லை. ஒரு நாள் கிருஷ்ணாவும் சொன்னான், தேவை என்றால் வியாபார அபிவிருத்திக்கு தேவையான பணம் லோனாக வங்கி கொடுக்கும் என்று.”

“சோதி கடன் எடுக்க வேண்டிய அவசியம் வராது. அப்பா தேவையான பணம் தர முன் வருவார். அப்புறம்

நாம் அவருக்குத் திருப்பி செலுத்திவிடலாம் வட்டியில்லாத கடன்.

"சுவாதி மாமாவிடம் பணம் வாங்க எனக்கு மனம் ஒப்பவில்லையடா. நீ சொல்லுவதுபோல் வட்டியில்லாத கடனாக வாங்கினாலும் நாளைக்கு ஊர் என்ன சொல்லும் மாமனாரிடம் பணம் வாங்கி வியாபாரம் செய்கிறான் என்று.."

"சோதி நீங்கள் ஏன் அப்படி நினைக்கிறீங்க. உங்க மாமனார் உங்களுக்கு தகப்பன் ஸ்தானம் தானே"

"சரி சம்மதிக்கிறேன் சொல்லு என்ன ஐடியா என்று..?"

"கராஜை செமி ஆட்டோமெட்டிக் ஆக்கிவிடுவோம். அப்படி என்றால்... கம்பியூட்டர் ஸ்கான் செய்து பிழைகளை சீக்கிரம் கண்டு பிடித்து, கைகளால் செய்யும் வேலைகள் சில நுணுக்கமான வேலைகளைக் கூட ஆட்டோ மெட்டிக் மெஷின்ஸ் செய்துவிடும். உதாரணத்துக்கு கடைச்சல் வேலைகள், நுணுக்கமான துளைச்சல் வேலைகளை செய்யலாம். அதுக்காக புதிதாக சில வடிவமைப்புச் செய்யவும், கணனிகள், குளிரூட்டிகள் என செலவு ஏற்படும். ஆனாலும் உற்பத்தித் திறன் அதிகரித்தால் நமக்கு வேலைகளும் கூட கிடைக்கும். எதற்கும் டிராகட்ர் கம்பனியின் பதிவு பெற்ற ஒரு நிறுவனமாக நமது நிறுவனம் இருந்து விட்டால் மிகவும் பாதுகாப்பே. வருமானவரி கட்டும் நிறுவனமாக ஒரு ஐம்பது அறுபது பேருக்கு சம்பளம் கொடுக்கும் பெரிய கொம்பனியாக மாற்றுவோம். நமது ஊராட்களும் நம்ம சந்தியினரும் இதனால் நல்லா இருக்க வழி கிடைக்கும்.."

“என்னென்னமோ சொல்லுறாய் கொஞ்சம் புரியுது. கொஞ்சம் புரியவில்லை..”

“நீங்க ஏன் கவலைப் படுறீங்க நான் இருக்கிறேன் அல்லவா…”

அப்போது தட தடவென யாரோ ஓடும் சத்தம் அருகில் கேட்டது.

“என்ன சத்தம் சோதி யாரோ ஓடிய சத்தம் கேட்டது அல்லவா?”

ஓம் சுவாதி.. எனக்கும் கேட்டது” என்று சொல்லும் போது…

ஒரு கறுப்பு நாய் திடீரென அவனருகில்.. ‘க்கும் க்கும்’ என முனங்கிக் கொண்டே அவன் காற்சட்டையை இழுத்தது.

“யார் நாய் இது? இவ்வளவு நெருக்கமா கொஞ்சுது.”

“இது வைரவர்… என்னமோ சொல்ல வாரார்.. வா பார்ப்பொம்.” – அந்த நாய் முன்னே போக அவர்களும் தொடர்ந்தார்கள். ஸ்கூட்டி நிறுத்தப் பட்டு இருந்த இடத்திற்கு அது கூட்டிப் போனது.

அங்கே இருவர் வாயைத் திறந்த படி அருண்டவர்கள் மாதிரி போஸ் கொடுத்துக் கொண்டு ஸ்கூட்டி அருகில் நின்று கொண்டிருந்தனர்.

அவர்கள் அருகே போனார்கள். அப்போ அந்த நாயைக்காணோம்.

“சோதி.. நாயைக் காணோம்?”

“அதுவா.. வைரவர் காட்டிட்டு போய் விட்டார்.”

“யாரடா நீங்க?” என்று அந்த இருவரையும் கேட்க ஒரு பதிலும் அவர்களிடமிருந்து வரவில்லை..

சோதி இருவரையும் உலுக்கினான்.

அவர்கள் ஏதோ அப்பதான் உணர்வு பெற்றவர்களாக..
"நாய்.. அந்த பெரிய கறுப்பு நாய்.. ..இங்கே உறுமுதே" என்று பயந்தவண்ணம் சொல்லிக் கொண்டு இருந்தார்கள்.
"அது உங்க பின்னாடிதான் கழுத்தைக் குறி பார்த்து நிற்குது. நாம சொன்னாத்தான் பாயும். சொல்லுங்க யார் நீங்க?"
"அண்ணே ..நான் முத்து…இவன் நாடன்.. உங்க புது கராஜுக்குப் பக்கத்தில் இருக்கிற அமல நாதன்தான் அனுப்பினார்."
"எதுக்கு..?"
"உங்களுக்கு வெடிகுண்டு வைக்கத்தான்.. வந்தோம். அதற்குள் உங்க நாய் பார்த்து விட்டது. அதைப் போகச் சொல்லுங்கண்ணே.. உங்க வழிக்கே வரமாட்டோம்…எங்களை மன்னிச்சு விட்டுடுங்க அண்ணே…"
"ஓ விஷயம் இப்படிப் போகுதா? சுவாதி இவங்களை இப்படியே மன்னிச்சு விட்டுறலாமா? என்ன?"
"வைரவரிடம் விட்டு விடுங்க அவர் பார்த்து தண்டனை கொடுத்து விடுவார்"
"அண்ணே அண்ணே மன்னிச்சுடுங்க .. வைரவரிடம் சொல்லி எங்களைப் போக விடச் சொல்லுங்கண்ணே.."
"ஓடிப் போங்கடா இனிமே நம்ம கண்ணிலேயே படக் கூடாது.."
பிடரியில் கால் பட ஓடோ ஓடுன்னு ஓடினாங்க..
"சோதி எனக்கு ஆச்சரியமாய் இருக்கு. வைரவர் எப்படி…?"

“ஓம் சுவாதி..உனக்கு அந்தக் கதைகள் சொன்னாத்தான் தெரியும்.”
வைரவர் தனக்கு ஜோதி மயமாய் காட்சி கொடுத்தது... அப்புறம்.. அவள் வந்த போது அவர் குடும்பத்தையும் சுவாதியையும் தன் வாழ்க்கையில் சந்திக்க வைத்தது... கட்டுக்கரை குளத்து புல்டோசரில் வைரவ சூலம் கிடைத்தது .. எல்லாத்தையும் சொன்னபோது சுவாதி வியப்புடன் கேட்டுக் கொண்டிருந்தாள்
“சோதி உங்களுக்கு வைரவர் எல்லா வெற்றியையும் தருவார் என்னும் நம்பிக்கை இப்போ எனக்கும் வந்து விட்டது நாளையில் இருந்து உங்க இல்லை.. நம்ம புது கராஜ் கம்பனிக்கு புது பெயர் தேடி நல்ல நேரத்தில் பதிவு செய்து வேலையை ஆரம்பிக்கிறோம்.. அப்பாவிடமும் சொல்லலாமா சோதி..”
“கட்டாயம் சுவாதி அவரால் தானே நீ எனக்கு கிடைத்திருக்கிறாய்...” சுவாதி ஆனந்தத்தில் அவனை இறுக அணைத்துக் கொண்டாள்...
“போகலாமா சுவாதி..?”
“உம்..” என்றவள் அவன் அணைப்பில் இருந்து விடுபட விரும்பாமல் கிளம்பினாள்..ர்கள்..
அடுத்த வாரத்திலேயே வேலைகள் மள மளவென தொடங்கி வேகமாய் நடக்க ஆரம்பித்தன.
“சுவாதி லிமிடட்” என்ற பெயரில் ஒரு ட்ராக்டர் கராஜ் அங்கு உருவாகிக் கொண்டது. சுவாதியும் சோதியும் மனேஜிங் டைரக்டரானார்கள். கூடவே ஜெயதாசன் தம்பதிகளும், ஞானமும், சோதி அப்பா அம்மா, மற்றும் ராதா கிருஷ்ணா இவர்கள் அனைவரும் டைரக்டர்களாக பதிவு செய்து கொள்ளப் பட்டனர்.

வைரவர் வேலையால் அமல நாதன் தானாக முன்வந்து தனது இடத்தையும் இவர்களுக்கு கொடுத்து விட்டு சோதி கொடுத்த பண உதவியால் இன்னொரு நல்ல இடத்தை வாங்கிக் கொண்டான்.
கொழும்பில் இருந்து கம்பியூட்டர் எஞ்ஜினியர்கள், மெக்கானிக் இஞ்ஜினியர்கள் வந்து சுறு சுறுப்பாக வேலை செய்து கொண்டு இருந்தார்கள். ஜெர்மனியில் இருந்து ஸ்கேனர் மெஷினுடன் அதை இயக்க பழக்கவென பொறியியளாளர்களும் வந்தனர். சோதியும் சுவாதியின் தம்பி ஞானமும் அவற்றை இயக்கப் பழகினர்.
அடுத்த ஆனி மாதமே நல்ல நாளில் கொம்பனி இயங்க ஆரம்பித்தது.
நவீன முறையில் கராஜ் இயங்குவதைப் பார்க்க மாவட்டத்தின் பாடசாலைகளில் இருந்தும் மாணவர்களை ஆசிரியர்கள் அழைத்து வரத் தொடங்கினர்.
மளமளவென டிராக்டர்கள் மட்டுமல்லாது அனைத்து வாகனங்களும் திருத்தத்துக்காக வரத் தொடங்கின.. தொழிலாளர்கள் நாற்பது பேருடன் வேலைகள் நடந்து கொண்டிருந்தன.
கொம்பியூட்டர் முறையில் பெயிண்ட் மிக்சிங் பெயிண்டிங் ஸ்டிக்கர் பிரிண்டிங் என தொழில் தேவைக்கு ஏற்ற வாறு விரிவடைய ஆரம்பித்தது. அந்த வட்டாரத்து இளஞர்களுக்கும் படித்த யுவதி யுவன் களுக்கும் வேலைகள் கிடைத்தன. மூன்று மாதங்களில் சுவாதி சோதியின் அயராத உழைப்பினால் சுவாதி

கம்பனி நன்கு வளர்ச்சியும் சுற்று வட்டாரங்களிலேயே நல்ல பெயருடனும் மதிப்புடனும் நிமிரத் தொடங்கியது. பரந்தாமனுக்கு தனது மகளும் மருமகனும் சுவாதி கம்பனி ஓனர் என்று சொல்லிக் கொள்வதில் மிகவும் பெருமை கொண்டாலும் கம்பனி ஆரம்ப நாளுக்குப் போனவர், அதன் பின் அங்கு போகவேயில்லை. மில் வரையும் வந்து சோதி அப்பா அம்மா ஜெயதாசன் தம்பதியிடம் பேசிக் கொண்டிருந்துவிட்டுப் போவார். எப்பவாவது சோதியும் சுவாதியும் வீட்டுக்கு வருகையில் அவர்களை பார்ப்பதுடன் சரி.

மற்றபடி கிருஷ்ணாவும், ராதாவும், வெள்ளிக் கிழமை மாலையில் கேதீச்சரம் வந்து சுவாதி சோதியுடன் இங்கு வந்து விடுவர் சனிக்கிழமை அரை நாள் கம்பனியில் இருந்து கிருஷ்ணா கம்பனிக்கணக்குகளையும் வங்கிக் கணக்குகளையும் சரி பார்ப்பான். ராதா சுவாதியுடன் உட்கார்ந்து கம்பியூட்டரில் வேலைகள் நடை பெறுவதை கண்காணிப்பாள்.

சோதி தொழிலாளர்களுடன் சேர்ந்து வேலைகளை சரி பார்த்து பிழைகளைத் திருத்திக் கொண்டு இருப்பான். சமயத்தில் வாகனங்களுக்கு வர்ணம் பூசும் பகுதிக்குப் போவான். மெஷின்கள் சரியாக இயங்குகின்றனவா என கவனிப்பான்.

ஞானம் மதியம் வரை கம்பனியில் அக்கா மாமாவுக்கு உதவியாக இருந்து விட்டு, மதியத்தின் பின் மில் வேலையை கவனிக்கப் போய் விடுவான்.

சனிக்கிழமை அரைநாள் மட்டும் வேலை. ஞாயிற்றுக் கிழமை விடுமுறை.

மூன்று மாதங்கள் வேகமாகக் கரைந்தன..
வெகு விமரிசையாக இரு திருமணங்களும் நிறைவேறின.
கம்பனிக்கு இரு வாரங்கள் விடுமுறை கொடுத்து விட்டார்கள் சுவாதியும் சோதியும்.
அதுபோல் இருவார விடுமுறை எடுத்துக் கொண்டான் கிருஷ்ணா. ராதா கிருஷ்ணா ஜோடியும் சுவாதி சோதி ஜோடியும் கண்டி நுவரெலியாவுக்கு தேனிலவு போய்ட்டு வந்தனர்.
ஃபெப்ருவரி 22ம் திகதி காலை 8.30மணி.
"சுவாதி ரெடியா?.."
வெண்ணிற வேஷ்டி கரு நீலத்தில் ஷல்வார் சேர்ட்டில் மிக எடுப்பாக இருந்தான் சோதி..
சுவாதி மரூண் சிவப்புப் பட்டுப்புடவையில் தேவதையாக இருந்தாள்.
அவளை பெருமிதத்தோடு மனதில் இரசித்துக் கொண்டே,
"என் தேவதையே!
கலியாணமாகி முதல் முதல் நாம் ரெண்டு பேரும் வீட்டுக்குள் வந்தது போல இன்று நாம் ரெண்டு பேரும் ஒன்றாக கம்பனிக்குள் காலடி வைக்கப் போகிறோம் எங்களை வரவேற்க நம்ம கம்பனிஆட்கள் வேறு தயாராக இருக்கிறார்கள். போகலாம் வா. மாமா மாமி, அப்பா அம்மா பரம் அங்கிள் எல்லோரும் அங்கே காத்துக் கொண்டு இருப்பாங்க. கிருஷ்ணாவும் ராதாவும் இப்போ வந்து கொண்டே இருக்காங்களாம்.."

சொல்லிக் கொண்டே இருக்கும் போது வாசலில் கார் வந்து நிற்கும் சத்தம் கேட்டது.
அதிலிருந்து ராதா கிருஷ்ணா இறங்கி வந்தனர். பட்டுச்சேலையில் ராதா அழகு தேவதையாக மிதந்து வந்து கொண்டிருந்தாள்.
கிருஷ்ணா பட்டுவெஷ்டி சட்டையில் மிடுக்காக இருந்தான்
"சரி போகலாமா சோதி நாங்களும் ரெடி"
சோதியின் காரிலேயே நால்வரும் ஏறிக் கொண்டனர்.
'சுவாதி கொம்பனி' வாசல் வாழை தோரணத்துடன் அலங்கரிக்கப் பட்டிருக்க, தொழிலாளர்கள் அனைவரும் மாலைகள் பூங்கொத்துடன் வரவேற்க தயாராய் இருந்தனர்.
பெரிய கேட் வாசல் சாத்தியபடி இருந்தது. இவர்கள் கார் வரவும் ஞானம் பெரிய கதவை ரிமோட்டினால் திறந்தான்,
சற்று தூரத்தில் காரை நிறுத்திவிட்டு புதிய ஜோடிகள் இறங்கி வர பட்டாசுகளை வெடிக்கவைத்தனர் தொழிலாளர்கள்.
அவர்கள் வரிசையாக நின்று இவர்களுக்கு மாலைகள் அணிவித்து பூங்கொத்துக்களை வழங்கினர்.
கேட் வாசலைக் கடந்து உள்ளே நுழைந்தனர்.
ஞானமும் இன்னும் இரு பெண்மணிகளும் ஆரத்தி எடுக்க என்று இவர்கள் முன்னே கம்பனி வாசலுக்கு சென்றனர்.
சென்ற மூவரும் பரபரப்பாய் ஓடி வந்தனர்.

“அக்கா அத்தான்.. அங்கே வாசலில் மூன்று பேர் விழுந்து கிடக்கின்றனர். பக்கத்தில்...மண்ணெய்க் கேன் கவிழ்ந்து மண்ணெய் கொட்டிச் சிதறி இருக்கு”

“என்ன சொல்லுகிறாய் ஞானம். யார் விழுந்து கிடப்பது...?”

கேட்டபடியே கிருஷ்ணாவும் சோதி விறு விறுவென அந்த இடத்தை நோக்கிப் போயினர்.

அங்கே...வாசல் பகுதியில் முன்று பேர் விழுந்து கிடந்தனர்.

கை கால்களில் சிறிது அசைவுகள் இருப்பதை அவதானித்த சோதி,

“ஞானம் தண்ணீர் கொண்டுவா,, யாரோ தண்ணீர் கொண்டு வந்து தர, விழுந்து கிடந்தவர்களின் முகத்தில் தெளித்தான் .

திடுக்கிட்டவர்களாய் எழுந்து கொண்டனர் மூவரும்..எழுந்து கொண்ட மூவரும்..

“நாய்கள்.. நாய்கள்.. ஐயோ.. கடித்துக் குதற வருதே....” என்று கையை நீட்டி எங்கேயோ காட்டிக் கொண்டே அரற்றினர்.

“நாயா எங்கே?...” அவர்கள் கைகாட்டிய பக்கம் பார்த்தார்கள்.

அங்கு ... நாய் எதுவும் காணவில்லை..

“சோதி சொன்னான், பயப்படாதீங்க என்னோட நாய்கள்தான். ஒண்ணும் செய்யாது. நான் பார்த்துக் கொள்ளுகிறேன்.. அதுசரி...நீங்க யார் எப்படி இங்கே வந்து விழுந்து கிடக்குறீங்க?”

“ஐயா, நாங்க பாலைக் குளி ஆட்கள். அமல நாதன் ஐயாதான் எங்களை உங்க கம்பனியை எரிக்கச் சொல்லி அனுப்பினார்”

“யாரு அமலநாதனா? ... ஜெய தாசன் கேட்டவாறே அங்கு வந்தார்,

“ஓம் ஐயா .. நாங்க காலையில் மூன்று மணிக்கு உள்ளே பாய்ந்து இறங்கிட்டு, மண்ணெய்யை கதவிலும் கூரைகள் மேலேயும் ஊற்ற கேனைத் திறந்தோம்.... அப்போ ..மூன்று பெரிய கறுப்பு நாய்கள் எங்கள் மீது பாய்ந்தது தான் தெரியும் .. என்ன நடந்தது என்றே தெரியவில்லை. இப்ப நீங்க தண்ணியைத் தெளிக்கத்தான் முழிச்சோம்...அதோ அதோ... அந்த நாய்கள்தான்.. எங்களைக் காப்பாத்துங்க...”– சோதிக்கு முன்னால் கவிழ்ந்து படுத்துட்டாங்க. மூன்று பேரும்... அவர்கள் கை காட்டிய பக்கம் சோதி கிருஷ்ணா சுவாதி எல்லோரும் பார்த்தார்கள்.

அங்கே நாய்கள் எதுவும் .. இல்லை..

சோதியும் சுவாதியும் கிருஷ்ணாவும் ஒருவரை ஒருவர் பார்த்து அர்த்தம் தொனிக்க புன்னகைத்துக் கொண்டனர்.

“சரி.. சரி எழும்புங்க. நாய்கள் கிட்ட வந்தா பரவாயில்லை நாங்க நிற்கிறோம். பயப்படாம எழும்புங்க..”

“மாப்பிள்ளை இப்பவே இவன்களை பொலிசில கொண்டு போய் கொடுப்போம்.அல்லது அவர்கள கூப்பிடுவோம்.”

“வேண்டாம் மாமா.. இன்றைக்குத்தான் ஆரம்பிக்கிறோம் புது வாழ்க்கையை. இப்ப போய்

போலிஸ் அப்படி இப்படி என்று எதுவும் வேண்டாம். பார்த்துக் கொள்ளுவோம்."

"ஓம் அப்பா இவன்கள் வெறும் அம்புதான். வில்லையும், வில்லை வைத்திருப்பவனையும் கண்டுபிடித்து ஆக வேண்டியதை பார்ப்போம்."

"அத்தான் இவன்களுடைய அடையாள அட்டைகளை வாங்கிக் கொள்ளுவோம். போன்களையும் எடுத்துடுங்க. அவுங்க வீட்டு ஆளுங்களை வந்து கூட்டிப் போகச் சொல்லுவோம். அவுங்க வராட்டி பொலிஸிலே கொடுப்போம்."

"சரி சுவாதி.."

"அதுவரை இவன்களை ஸ்டோர் அறையிலே இருக்க விட்டு விடுங்க."

சுவாதி சொல்ல ..ஞானம் அவனுடைய நண்பர்களுடன் இந்த மூன்று பேரையும் தனியாக அழைத்துச் சென்றான்.

சோதியும் கிருஷ்ணாவும் தமது துணைவியர்களுடன் பேசிக் கொண்டார்கள்.

"புது அத்தியாயம் ஆரம்பம்"

"ஆமாம் வாங்க உள்ளே போவோம்."

ராதாம்மாவும் கற்பகம் அம்மாவும் ஆரத்தி எடுக்க ஜெயதாசனும், பரந்தாமனும் மாலை போட்டு உள்ளே அழைத்துச் சென்றனர்..தொழிலாளர்களுடன் சேர்ந்து அனவரும் காலை விருந்து உண்டு மகிழ்வோடு

தமது புது வாழ்வின் அத்தியாயத்தை அன்று ஆரம்பித்தனர்.

சோதியின் அலுவலக அறையில் கதிரைகள் போடப் பட்டு, நடுநாயகமான இருக்கைகளில் சுவாதி சோதி

ஜோடியும் ராதா கிருஷ்ணா ஜோடியும் அமர்ந்திருக்க, ஜெயதாசன் ராதாம்மாளும், ராஜநாயகம் கற்பகாம்மாவும், பரந்தாமன் பவித்திராவும் கிருஷ்ணாவின் அம்மாவும் அமர்ந்திருந்தார்கள்
சோதி சொன்னான்.

"நான் முதலில் இறைவனுக்கு நன்றி சொல்கிறேன். ஏனென்றால் எனது அருமையான அம்மா அப்பாவுக்குப் பிறகு கிருஷ்ணாவை நட்பைத் தந்தான். இன்று என் தாய் தந்தைக்கு நிகராக, என் நட்புக்கு நிகராக என் சுவாதியைத் தந்துள்ளார். சுவாதியின் யோசனயால் தான் இந்த அளவுக்கு வளர்ச்சிக்கு வரமுடிந்தது. என் தங்கை ராதா கிருஷ்ணா தம்பதிக்கு எமது மனப்பூர்வமான வாழ்த்துக்கள். அவர்களுக்காக அடம்பன் வாமதேவபுரத்தில் கிருஷ்ணா இல்லத்தை பரிசாக இப்போது வழங்குகிறோம்." என்று சொன்னான்.

சோதியும் சுவாதியும் அந்த வீட்டுக்கு உரிய பத்திரங்களை ராதா கிருஷ்ணாவிடம் வழங்கினார்கள். அனைவரும் தம் கைகளை தட்டி மகிழ்ச்சியைத் தெரிவித்தனர்,

"மிகவும் நன்றி சோதி சுவாதி..எமக்கு இறைவன் அனைத்தையும் நல்லதையே தருகின்றான். தருவான் .. என்பது அசைக்க முடியாத நம்பிக்கை. என் அம்மாவின் அன்பினால் இதுவரை வாழ்ந்து வந்த எனக்கு இப்போ ராதாவின் அளவிலா அன்பும் சேர்ந்து இருக்க எம் வாழ்க்கையில் சோதியும் சுவாதியும் கூட எம்முடன் பயணிப்பதில் மட்டற்ற மகிழ்ச்சியுடன் ஆண்டவனுக்கு நன்றி சொல்கிறோம்."

தம் கைகளை தட்டி மகிழ்ச்சியைத் தெரிவித்தனர் அனைவரும்.
அப்போ அங்கே ஞானம் வரவும்,
சுவாதி அவனிடம்,
"ஞானம் , அவன்களை பத்திரமாகவனிக்க ஏற்பாடு பண்ணிட்டியா? அப்புறம், இன்று நம்மாட்கள் எல்லோருக்கும் மதிய விருந்தை முடித்தபின் வீட்டுக்குப் போகச் சொல். நாளையிலிருந்து வேலைகள் வழமை போல் இருக்கும் என்பதை அறிவித்து விடு. மனேஜர் மயில்வாகனனிடம் அறிவிக்கச் சொல்லிவிடு".
குடும்பத்தினரின் வரவேற்புக் கூட்டம் முடியும் தறுவாயில் ,
"இனிமேல் தான் எனது வேட்டையும் ஆரம்பம்" சுவாதி, கிருஷ்ணாவிடம் கிசுகிசுத்தான் சோதி.
அப்போது போன் மணி ஒலிக்க கிருஷ்ணாதான் எடுத்தான்.
"ஹலோ வணக்கம்.. மம கிருஷ்ணா..மாஹ்த்யா கௌத கத்தக் கரண்ண? ...இன்னவா இன்னவா.. சோதி.. உனக்குத்தான்... எஸ்.பி சரத் என்று சொன்னார்..
கொண்டா கொண்டா..
குட் மோர்னிங்க் சேர்..
"............"
தாங்க் யூ சேர்... ஓம் சேர்.. உங்களுக்கு எப்படி நியூஸ் தெரியும்....
"................"
ஓகே சேர் நானே கூப்பிட்டு உக்களிடம் பேசனும் என்று இருந்தேன்.
"................"

"வாங்க சேர் கட்டாயம் வாங்க"
"ப்ளீஸ் சேர்"
போனை,வைத்து விட்டு, கிருஷ்ணாவிடம்,
கிருஷ்ணா இங்கே வந்த போட்டோகிராபர் மன்னாரில் இருந்து புறப்படும் போதே எஸ்.பி கண்டாராம். எதேச்சையா பேசும் போது, நாம இங்கே வரவேற்பு விழா வைத்ததைப் பற்றி சொன்னானாம். அவரிடம் காலையில் சோதி கொம்பனிக்கு படம் எடுக்க போவதாகச் சொன்னானாம். இப்ப அவர் அடம்பனுக்கு ஒரு வேலையாக வருகின்றார் அப்படியே எங்களையும் பார்க்க வருகிறாராம்."

"அப்படீன்னா அவரிடம் காலையில் நடந்த விஷயத்தைச் சொல்லி என்ன செய்யலாம் என்று கேட்போம்.."

"அதை நான் ஏற்கெனவே தீர்மானித்து விட்டேன் நான் அவரிடம் இது பற்றி பேச யோசித்தேன், அவரே வாறார் நல்லதாய் போச்சு."

"ஞானம்!, அந்த ஆளுங்களோட சொந்தக் காரங்க யாரும் வர்ராங்களா?"

"ஒரு ஆளோட அப்பாவும், ஒருத்தனோட அண்ணனும், மற்றவனோட அம்மாவும் வந்திருக்காங்க. உட்கார வைத்துள்ளேன்"

சரி அவுங்களுக்கு சாப்பாடு கொடுத்து கவனிக்கச் சொல்லு, 2.00மணிக்கு சந்திப்போம்.
சரி அத்தான்.

**1.00 மணி.**

எஸ்.பி வந்தார், அனைவரும் வரவேற்று உபசரித்தனர்.

அவருடன் சேர்ந்து மதிய உணவை எடுத்துக் கொண்டனர்.
தமது பெற்றோர்களையும் மாமனார் மாமியாரையும் சோதியும் கிருஷ்ணாவும் அவருக்கு அறிமுகம் செய்து வைத்தனர்.
2.00 மணிபோல்,
எஸ்.பி சோதியிடம்,
"சோதி அவன்களைப் பார்ப்பமா.?"
"வாங்க சேர்"என்றவாறு அவரை ஸ்டோர் அறைக்கு அழைத்துச் சென்றான்.
அந்த அறையில், திரு திருவென முழித்தவண்ணம் அந்த மூவரும் அவர்களுடன் ஒரு வயதானவரும், 50 வயது மதிக்கத்தக்க பெண்மணியும், 45 வயதில் இன்னொருவருமாக அழுது வீங்கிய முகத்தோடு காணப் பட்டனர்.
இன்ஸ்பெகடர் வருவதைப் பார்த்ததும் பயந்தபடியே விருக்கென எழுந்து கொண்டனர்.
எஸ்.பியைப் பார்த்தவுடன் அந்த அம்மணி அரற்றத் தொடங்கினாள்.
"அய்யா. இவனுக்கு நான் எத்தனயோ தரம் புத்திமதி சொல்லிட்டன். நாய்கள் அப்படியே இவனைக் கடிச்சு இருக்கனும் அப்பதான் புத்தி வந்து இருக்கும். நீங்க கூட்டிப்போய் நல்லா உதையுங்க அய்யா.."
மற்ற இருவரும் இவள் சொன்னதைப் போலவே ஆமோதிப்பது போல் சொல்லிக் கேவிக் கேவி அழ ஆரம்பித்தனர்.
அந்த மூவரைப் பார்த்து அவர்கள் பெயரைக் கேட்டார்.
"உன்ர பேர் என்ன?"

“மாரிமுத்து அய்யா”
“நீ?”
“நான் தருமு அய்யா”
“இம்மானுவல் அய்யா”
“யார் உங்களை நெருப்பு வைக்கச் சொன்னது?”
“அது…அது…”
“சொல்லுடா..”
“அமல நாதன் தான் அய்யா..”
“அவன் எங்கே?”
“அவர் இப்போ கொழும்பிலை அய்யா”
“பொய் சொல்லாதே. கொழும்பில் இருந்து உங்களை அனுப்பினானா அந்த ஆளு”
“இல்லை அய்யா அவர் இங்கே தாமரைக்குளத்தில் தான் வீடு. நேற்று முத்தாநாள் எங்களிட்ட வந்து காசு கொடுத்துவிட்டு இப்ப கொழும்புக்குப் போறன். சொன்ன வேலையை முடியுங்க. நா ரெண்டு நாள்ள வந்து மிச்சக் காசு தாறன் என்று சொல்லிட்டுப் போனார் அய்யா”
“அவன் போன் நம்பர் ஏதும் இருக்கா?”
“அந்த மூவரும் ஒருவரை ஒருவர் பார்த்து முழித்தனர்”
“இல்லை அய்யா”
அப்போ எஸ்.பி போன் ஒலிக்க.அதைக் காதில் கொடுத்து,
“கீயண்ட?”
“……………”
“ஒவ் ஒவ்”
எஸ்.பி சோதி பக்கம் திரும்பி…

“ஸ்டேஷன்லேர்ந்து ஜீப்பில் கொன்ஸ்டபிள் இப்ப இங்க வாரது.. இவன்களை ஸ்டேஷன் கூட்டிப் போறார். ஈவ்னிங்க் நீங்க வந்து ஒரு கொம்ப்ளயிண்ட் கொடுங்க. சரிதானே ...?” என்று சொல்லிவிட்டு
“வாங்க, சோதி,”
சோதியைக் கூட்டிப் போய் தனியாகச் சொன்னார்.
“சோதி இப்ப நம்ம ஃப்ரண்ட்ஸ். கொண்ஸ்டபிள்தான் அவுங்க மப்டியில் வராங்க. இவனுகளிடம் தனித்தனியாக எழுதி வாங்கி விட்டு விடுவாங்க. ஆனால் அவர்களை நாங்க மொனிடர் பண்ணுவம். உண்மையிலே அமலநாதனை இப்பவே அரஸ்ட் பண்ணிவிடலாம். நீங்க சொல்றதுக்காக கொஞ்சம் விட்டுப் பிடிக்கிறேன். ஆனால் அமலநாதன் நடவிடிக்கைகளை நாங்க கனிச்சுக் கொண்டுதான் இருப்போம். சரிதானே சோதி”
அவர் சொல்லிமுடிக்கவும், அந்த இருகொண்டபிள்களும் அங்கு வந்தனர்.
எஸ்.பி அந்த் மூன்றுபேரையும் காட்டி விட்டுச் சொன்னார் .
“மங் யன்னங். ஒயா எவரகரல இன்ஃபோர்ம் கரண்ட..”
“ஹரி சேர்”
“சரி சோதி , கிருஷ்ணா, எல்லோருக்கும் வணக்கம் . நான் இப்போ போறது. பொறகு பார்க்கிறது.”
எஸ்.பியை வழியனுப்பிய பின் சோதி, கிருஷ்ணா, சுவாதி ராதா இவர்கள் மட்டும் கொம்பனியில் இருக்க மற்ற எல்லோரையும் ஜெயதாசன் வீட்டுக்கு அழைத்துப் போனார்.

"ஞானம்"
"அத்தான்.."
"மணியைக் கூப்பிடு."
சிறிது நேரத்தில் மணி வந்தான்.
"மணி. நீ சாப்பிட்டாச்சா?"
"ஓமண்ணே.."
"நாங்க சாப்பிட்டுக் கொண்டு இருக்கும்போது, நீ அப்போது என்னமோ சொல்ல வந்தாய்? என்ன விஷயம்?"
"ஓம் அண்ணே. ரெண்டு கிழமைக்கு முதல் உங்கட கலியாணவீட்டு லீவுக்காக நாங்க கராஜை பூட்டுற நேரம் விளாத்திகுளத்துலேருந்து விநாசிதம்பியண்ணன் றக்டரை பெட்டியோட கொண்டு வந்து விட்டு விட்டுப்போனார்"
"ஓம் தெரியும் எனக்குப் போன் பண்ணினார். நான் இங்க விட்டுவிடுங்க கலியாண வீடு முடிய செய்து தரலாம் என்று சொன்னேன். அவருக்கு அவசரம் இல்லை என்றுதான் சொன்னார். நாளைக்கு முதல் வேலையாக அதைப் பார்க்கனும்."
"அண்ணே. நான் என்ன சொல்லுறன் எண்டால்.. அந்தப் பெட்டியை நான் சும்மா கிட்டப்போய் இன்றைக்குப் பார்த்தன். அப்போ அதில் கைட்ரோலிக் பைப் மாட்ட்ற இடத்திலே ஒரு பொருள் செருகி இருந்தது, தனியா எடுத்து வச்சிருக்கேன்."
"என்ன அது? கொண்டுவா பார்ப்போம்."
மணி போய் திரும்பி வந்த போது அவன் கையில்....
ஒரு திரி சூலம்!

ஆச்சரியத்தோடு வாங்கிப் பார்த்த சோதி சற்றுப் பரவசப் பட்டவனாக ...
கிருஷ்ணாவிடம் கொடுத்தான்.
"பார் கிருஷ்ணா.. நம்ம வைரவர் நம்மைத்தேடி வந்து விட்டார்"என்றவாறு, கிருஷ்ணாவிடம்கொடுத்தான்.
ஆச்சரியதோடு அதை வாங்கிப் பார்த்தவன்..
"ஓமோம் சோதி இது அவர் சூலமேதான் அந்த ஆலமரத்தின் கீழ் இருந்ததுதனே. இதைத்தானெ தேடி னோம். அதிசயமாக இருக்கு சோதி .. நீங்களும் பாருங்க" என்று சுவாதி – ராதா பார்ப்பதற்க்காக சுவாதி கையில் தந்தான்.
"கிருஷ்ணா வைரவசாமியோட அருள்தான். அவரே இங்கே வந்து நம்மைக் காப்பாற்றியுள்ளார்"
"சோதி சின்னதாக ஒரு கோவில் வைத்து இவரை கும்பிட ஏற்பாடு செய்வோம்"
"நீ சொல்றது சரிதான் கிருஷ்ணா.. ஆனால் அதற்கு முதல் முக்கியமான ஆளைக் கூப்பிட்டுக் கதைத்து விடுவோம்."
"மணி!"
"என்னண்ணே"
அந்த டிராக்டர் ஓனர் விநாசித்தம்பியின் நம்பர் கொப்பில இருக்கும்.அதை எடுத்துக் கொண்டு வா.
மணி கொண்டு வந்து தந்த கொப்பியில் விநாசித்தம்பியின் நம்பரை பார்த்து அழைத்தான்.
" ஆ.. ஹலோ வினாசித்தம்பி! இங்கே சோதி"
" ......................:

“வணக்கம் வினாசித்தம்பி. இன்றுதான் கொம்பனியைத் திறந்தோம். நாளைக்கு உங்க றக்டர்தான் முதல் வேலை.”

“.........................”

“சரி வினாசித்தம்பி. ட்ரெய்லர் முழுக்க சேர்விஸ் மண்ணி பெயிண்டும் பண்ணுறேன். ஆஹ்.. வினாசித்தம்பி. ஒரு சந்தேகம். உங்க ட்ரெயிலரில் ஒரு சூலம் இருந்தது , அது உங்களுடையதா?”

“.......................................”

“ஓ அப்படியா , அப்போ நான் அதை எடுக்கிறேன் என்னிடம் இருக்கட்டும்”

“...........................”

மிக்க நன்றி வினாசித்தம்பி...

போனை அணைத்து விட்டு,

“கிருஷ்ணா! அந்த ட்ராக்டரை வினாசித்தம்பி பழைய இரும்பு வியாபாரியிட்ட வாங்கினானாம். அவருக்கே தெரியாதாம் அது இருப்பது. எங்களை எடுக்கச் சொல்லி விட்டார். பார்த்தியா கிருஷ்ணா அந்த வைரவர் சுற்றி சுற்றி இங்கேயே வந்துவிட்டார்”

“அத்தான் நம்ம வீட்டடியிலேயே ஒரு அரசும் வேம்பும் ஒன்றாய் பிண்ணி பிணைந்து ஒரே மரமாய் இருப்பதைப் பார்த்தீங்கதானே. அங்கேயே வைரவர் கோவிலை வைப்போமா?”

“நல்ல யோசனை சுவாதி. மாமா மாமி அப்பா அம்மா எல்லாரிடமும் சொல்லுவம்”.

அப்போது அந்த இரண்டு கொண்ஸ்டபிள்களும் மூவரையும் அழைத்துக் கொண்டு வந்தனர். கூடவே உறவினர்கள் மூவரும் வந்தனர்.

"சோதி மாத்தயா. அப்பி ஒக்கம கரல எவராய் அப்பி யனவா. மே கட்டியட்ட யண்ட கீயன்னத?"

"ஓம் நீங்க போய்ட்டு வாங்க. இவங்களை நான் திருப்பி அனுப்புறன்."

"மூன்று பேரும் இங்கே வாங்க.."

"இப்போ வீட்டுக்குப் போங்க பிறகு நாங்க தேவையென்றால் ஸ்டேசனுக்கு வரணும் சரியா."

"சரியண்ணே. சரியண்ணே.. எங்களுக்கு இப்ப புத்தி வந்துட்டுது. இனி இந்த மாதிரி செய்ய மாட்டோம்."

"ஞானம் .."

"அத்தான்"

"சரி அனுப்பி விடு. கொமனி ஆட்கள் எல்லோரும் போய்ட்டாங்களா?"

" எல்லோரும் ரெண்டு மணிக்கே போய்ட்டாங்க.."

"சரி நாங்களும் புறப்படுவம். மணியும் நீயுமா பூட்டிட்டு வாங்க"

"சரி அத்தான்."

சோதி சுவாதி வீட்டில்,

சோதி சுவாதி ராதா கிருஷ்ணா, இவர்களின் பெற்றோர்கள் ..

நடுவில் ஒரு சிறு மேசையில் அந்த சூலம்.

ராஜ நாயகம் சொல்லத் தொடங்கினார்,.

"எங்கட குலதெய்வம் ஞானவைரவர், இப்படி திரிசூல வடிவிலதான் இருக்கிறார். இப்ப அவரே இங்கே எங்களோட இருக்கிறதத்தான் உணர்கிறேன்."

“எங்கட குல தெய்வமும் நீராவியடி வைரவர்தான். இங்கு வந்த பிறகு ரெண்டு தரம்தான் போய்ட்டு வந்தோம் குடும்பதோடு. அந்த தெய்வம் தான் இங்கு எமக்கு அதிசயம் காட்டி இருக்கார்.”

கிருஷ்ணாவின் அம்மாவும் தமது குலதெய்வம் வைரவர்தான் அச்சுவேலியில் தங்கள் வீட்டருகில் இருக்கிறதையும். போய் நாற்பது வருஷத்துக்கு மேலாகுது என்றும் சொன்னாள்.

எல்லோருக்கும் சந்தோஷம்

சுவாதி வீட்டருகில் இருக்கும் அரசு வேம்படியிலேயே வைத்து வழிபடத் தீர்மானித்தார்கள்

சோதியின் அப்பா,

“நாம் குருக்களைப் பார்த்து கோவில் கட்டி வைரவரை வைக்க நாள் பார்க்க, நாளைக்கே நான் கேதீச்சரம் போகிறேன்”

“நானும் வருகிறேன். எனக்குத் தெரிந்த மேசன் இருக்கார் அவர் இப்படிக் கோவில் வேலை எல்லாம் வடிவாச் செய்வார்...”என்று பரந்தாமனும் சொல்ல

“அங்கிள்.. அப்படியே அப்பாவும் அம்மாவும் நீங்களும் மாமியுமாக சேர்ந்து போய் கிருஷ்ணாவின் புது வீடு குடி புகுதலுக்கும் நாள் பார்த்து விட்டு வாருங்கள்”

“சரி தம்பி சோதி. நல்ல விடயம் சொன்னீங்கள்”

“அப்போ ஜெயதாசன், உங்களோடு நானும் கீதாவும் வாறம் ” என்றார்.

“சரி இப்போதைக்கு வேம்படியில் மெழுகிவிட்டு சூலத்தை வைப்போமா?”

“அப்படியே ஒரு பொங்கலும் வைத்து விடுவோம்” என்று கீதாவும் சொன்னாள்

எல்லோரும் அதற்கான வேலைகளில் இறங்கினர்.
அடுத்த ஒரு மணி நேரத்தில் அரசு வேம்படி கூட்டி மெழுகினார்கள். திரி சூலத்தை மரத்தடி நிலத்தில் சோதி நாட்டினான். ராதாவும் சுவாதியும் விளக்கேற்றி, பொங்கல் செய்ய ஆரம்பித்தனர்.
மாலை ஆறுமணிக்குள் பொங்கி முடித்து வைரவர் வழிபாடு செய்தனர்.
மாலை மணி 7.30.
அனைவரும் இரவு உணவு எடுத்தபின்பு,
பரந்தாமன் தம்பதியினர் கிருஷ்ணா ராதாவுடன் விடைபெற்றுக் கொள்ள , ஜெயதாசனும் கீதாவும் தாமும் கூடவே வந்து மன்னாருக்கு கிளம்பிப் போக சுவாதி சோதியுடன் கிருஷ்ணா அம்மாவும், சோதி அப்பா அம்மாவும் வீட்டில் இருந்தனர்.
சுவாதி சோதி இருவரும் அறையில் கட்டிலில் எதிர் எதிராக அமர்ந்திருந்தனர்.
"அத்தான்! எனக்கு நல்ல சந்தோஷம் . அதுக்கு மேலே ஒரே வியப்பாயும் இருக்கு. வைரவர் மட்டும் வரவில்லை என்றால் நம்ம கொம்பனியை நாசம் பண்ணி இருப்பாங்க."
"அது சரி அத்தான் இந்த அமலநாதனை அரெஸ்ட் பண்ணுவாங்களா?"
"சுவாதி. அவனை அரெஸ்ட் பண்ணுவதை விட அவனுக்கு தகுந்த பாடம் படிப்பிக்க வேணும்."
"அப்படி என்றால்.."
"அப்படி என்றால்.....? அது இனிமேல் தான் வேட்டை ஆரம்பம்".
"புரியும் படியாகச் சொல்லுங்கத்தான்".

"சுவாதி.. அவன் ஏன் இப்படிச் செய்கிறான் என்று உனக்கு நான் சில சம்பவங்களைப் பற்றி சொல்ல வேண்டும்.

"நீ ரஞ்சியைப் பற்றி என்னிடம் ஒரு விஷயம் சொன்னாய் ஞாபகம் இருக்கா?"

"ஓமோம் இப்போ மயிலிட்டி மனநல ஆஸ்பத்திரியில் இருக்கிறாள் அவள்"

"அவளேதான்... அவள் இப்படி ஆனதுக்குக் காரணமே இந்த அமலநாதன் தான்."

"என்ன சொல்றீங்க"

"தவிரவும் இன்னொரு சம்பவம்"

"என்ன?"

"ஓம் சுவாதி. நம்ம கல்யாணத்துக்கு 15 நாள் முன்னதாக மன்னார் ரோஸ்லின் பிரைடல் ஸ்டூடியோவுக்கு என்னை அழைத்துப் போனாய் அல்லவா..?"

## 9

சிவபெருமான் எடுத்த 64 அவதாரங்களில் மிகவும் சக்தி வாய்ந்ததாக போற்றப்படுவது பைரவ அம்சமே. ஸ்ரீ மஹா கால பைரவ பெருமான் அனைவரது வாழ்க்கைக்கும் துணை நின்றார். அவரை வந்து வணங்கும் அனைத்து பக்தர்களுக்கும் சகல விதமான வெற்றிக்கும் வாழ்க்கைக்கும் வழியமைத்து கொடுத்து அருளுபவர். அஷ்டமி வழிபாடு ஆபத்திலிருந்து காக்கும் வழிபாடு ஆகும். அஷ்டமி வழிபாடு பைரவருக்கு இஷ்டமானது. அதிலும் தேய்பிறை அஷ்டமி என்பது மரண பயத்தை நீக்கும் அற்புதமான வழிபாடு. எட்டு தேய்பிறை அஷ்டமி நாட்களில் பைரவ வழிபாடு செய்தால் எந்தத் துன்பமானாலும் விலகி வாழ்க்கையில் சுபிட்சம் உண்டாகும் என்பது ஆன்றோர்கள்

வாக்கு.

*அன்று..*

***மன்னார் ரோஸ்லின் பிரைடல் ஸ்டூடியோ...***

*காரில் கிருஷ்ணாவும், சோதியும் ராதாவும் சுவாதியும். காரை ஸ்டூடியோ வாசலில் சோதி நிறுத்தி விட்டு,*

*"நீங்க ரெண்டு பேரும் போய்ட்டு விசாரியுங்க. இதோ நாங்க வாரோம் இப்போ.."*

*அவர்களை அனுப்பி விட்டு,..*

*கிருஷ்ணாவிடம் திரும்பி,*

*"அந்தப் பொண்ணுகளைப் பார்த்தியா கிருஷ்ணா?"*

*"கவனித்தேன்.... ஏன் இப்படி அழுதுகொண்டு போகுதுகள்?"*

*"தெரியவில்லையே...."*

*"அந்த பெண்கள் யாரென்றும் தெரியவில்லை. நிச்சயமாக அடம்பனோ மன்னாரோ சேர்ந்தவர்களாக தெரியவில்லை."*

*"நாம் போய்க் கேட்டுப் பார்ப்பமா? சோதி?"*

*"பொறு.. நாம் போய் கேட்க அவர்கள் நமக்குத் தெரிந்தவர்களாக இருக்க வேண்டும்."*

*அந்தப் பெண்கள் தண்ணீர் தாங்கி ரோடுக்குக் கிட்ட போயிருக்கமாட்டாங்க.. போஸ்ட் ஒஃப்ஃபிஸ் பக்கத்தில் இருந்து இரண்டு பொடியன்கள் மோட்டார் சைக்கிளில் வந்து அவர்கள் அருகில் நிறுத்தி விட்டு, தமது போனைக் காட்டிக் காட்டி ஏதோ சொல்ல அதைப் பறிப்பதற்கு அந்தப் பெண்கள் எத்தனித்தார்கள். ஆனால் அவர்கள் வெடுக்கென தமது பாக்கெட்டில் போட்டு விட்டு விரைந்து சென்றனர்.*

“யாரு கிருஷ்ணா அவன்கள்?”
“அவன்களில் ஒருத்தன் அமலநாதனோட மகன் நேசன். மற்றவன் அவன் நண்பன் பாலா .”
“ஏதோ விள்ளங்கம் கொடுத்து விட்டுப் போறான்கள் என்ன வென்று பார்ப்போமா கிருஷ்ணா?”
கேட்டுக் கொண்டு இருக்கும் போதே ராதாவும் சுவாதியும் வந்தார்கள்
“என்ன திரும்பி வந்து விட்டீர்கள்?”
“ரோஸ்லின் ஏதோ மூட் அப்செட்டாக இருக்கிறாளாம். நாளைக்கு வரமுடியுமா என்று சொல்ல நாங்க வந்து விட்டோம்.” – ராதா சொன்னாள்
“பரவாயில்லை. எனக்கும் ஏதோ இங்கு வேண்டாம் என்றுதான் தோன்றுகின்றது.”
சுவாதியும் அதையே சொன்னாள்.
“ராதா கேட்குறா. நாங்க தங்கம் பிரைடல் சலூனுக்குப் போகலாமா? என்று.”
“நல்லதென்றால் போவோம்”
தலை மன்னார் வீதியில் இருக்கும் அந்த இடத்துக்குப் போனார்கள்..

“இதுதான் சுவாதி அன்று நடந்தது, அது மட்டுமல்ல நாங்க நுவரெலியாவில் இருந்து ஹோட்டல் ரூம் காலி பண்ணிவிட்டு வரும் போது அங்கு மனேஜர் ரூமில் அன்றைய தினசரி அவர் மேஜையில் மூன்றாவது பக்கம் விரித்தபடி இருந்தது. அதில் ஒரு பெண்ணின் படம் பிரசுரமாகி.. – ‘புதுமணப் பெண் தற்கொலை காரணம் அறியப் படவில்ல’ – என்ற செய்தியும் எதேச்சையாக என் கண்ணில் பட்டது. அந்தப் பெண்ணின் படத்தைப்

பார்த்ததும் எனக்கு அதிர்ச்சியாகப் போய் விட்டது. அந்தப் பெண் வேறு யாருமில்லை.. அன்று ரோஸ்லின் ஸ்டூடியோவில் இருந்து அழுத வண்ணம் போனார்களே இரு பெண்கள் அவர்களில் ஒருத்திதான் அந்த செய்தியில் இருந்தாள்.

நான் அந்தப் பேப்பரை எடுத்துப் பார்த்தேன். –உயிலங்குளத்தில் அந்தப் பெண்ணுக்கு திருமண ஏற்பாடுகள் நடைபெற்றதும் மறுநாள் திருமணம் என்றும், முதல் நாள் பொலிடோல் குடித்து தற்கொலை செய்து விட்டதாயும் தற்கொலைக்கான காரணம் தெரியவில்லை என்றும், போலீஸ் விசாரணை தொடர்வதாயும்– செய்தி வெளியாகி இருந்தது. இது விடயம் கிருஷ்ணாவுக்கு மட்டுமே சொன்னேன். ராதாவுக்கும் உனக்கும் சொல்ல எமது மனம் விரும்பவில்லை.

இன்று கூட இது பற்றி உன்னிடம் சொல்லி மனம் கவலைப் படுத்த விருப்பமில்லை. ஆனாலும் நாளையில் இருந்து நான் சில வேலைகள் இது சம்பந்தமாக செய்ய வேண்டியுள்ளது. நீ எனக்கு ஒத்துழைப்புத் தருவாயா சுவாதி?"

"கண்டிப்பா அத்தான். நானும் ராதாவும் ஞானமும் கம்பனியைப் பார்த்துக் கொள்ளுறம்."

" நல்லது சுவாதி . நான் நாளை யேசுதாசனுடைய ட்ராக்டரை சோதித்து விட்டு மணிக்கும் ஞானத்துக்கும் என்ன செய்ய வேண்டும் என்று சொல்லி விடுகிறேன். நாளை மதியம் நான் எஸ்.பியை சந்தித்து விட்டு அப்புறம் என்ன செய்ய வேண்டியுள்ளது என்று சொல்லுகிறேன்.சரிதானே?"

“சரி அத்தான் நான் போய் சுக்கு போட்டு பால் எடுத்து வரட்டுமா?”
“சரி சுவாதி”

**மறுநாள் மதியம் மன்னாரில்..**
எஸ்.பி அலுவலகத்தில் அவர் முன்னே கதிரையில் அமர்ந்திருந்தான் சோதி.
சோதி ரோஸ்லின் பிரைடல் ஸ்டூடியோவில் இருந்து வெளியேறிய பெண்கள் குறித்தும் அவர்களை இடையில் சந்தித்து போனைக்காட்டி மிரட்டிய பாலா, நேசனைப் பற்றியும் நுவரெலியாவில் தான் பார்க்க நேர்ந்த பத்திரிகைச் செய்தி பற்றியும் சொன்னான்.
“சோதி அந்த கேர்ளின் சூசைட் பற்றி நான்தான் விசாரிக்கிறேன். இது வரை எந்தத் துப்பும் கிடைக்கவில்லை. இப்ப நீங்க சொன்ன டீடெய்ல்ஸ் இந்தக் கேஸ் பற்றி விசாரிக்க மிச்சம் ஹெல்ப்தானே”
“சொறி சேர் இது பற்றி நான் நுவரெலியாவில் இருந்து வந்ததும் சொல்லனும் என்று இருந்தேன், ஆனால் எங்கடை வரவேற்பு வேலைகளினால் வந்து உங்களிடம் பேச முடியவில்லை.
அது பரவாயில்லை. இப்ப நீங்க சொன்னதே பெரிய உதவி. என்றார் எஸ்.பி…
“எஸ்.பி..சேர் எனக்கு இந்தக் கேஸில் தனிப்பட்ட முறையில் நானும் ஈடுபட விருப்பம். நீங்கள் எனக்கு அனுமதி தருவீர்களா?”
“கட்டாயம் நான் பெர்மிசன் தாறன் என்ன செய்கிறீர்கள் என்பதை அப்பப்ப எனக்கு இன்ஃபோர்ம்

பண்ணுங்க. எங்க பொலிஸ் டிப்பார்ட் மெண்ட் கட்டாயம் உதவும்"

"தாங்க்ஸ் சேர். நான் உயிலங்குளம் போய் அந்தப் பெண்வீட்டில் சில விஷயங்களை கேட்டுத் தெரிந்து கொள்ளனும்."

"சோதி மிச்சம் நல்லது நீங்க போய்ட்டு பேசிட்டு ஏதும் ஹெல்ப்புக்கு கூப்பிடுங்க"

"சரி சேர். தாங்க்யூ வெரி மச்"

சோதி கிளம்பினான். அவன் காரில் தான் வந்திருந்தான். வீட்டுக்குப் போய்ட்டு காரை விட வேண்டும். ஏனென்றால் சோதி அப்பா அம்மா ஜெயதாசன் சீதாமாமி நால்வரும் கேதீச்சரம் போக இருப்பதால், ஸ்கூட்டி எடுத்துக்கொண்டு உயிலங்குளம் போக நினைத்தான்.

வீட்டுக்கு வந்த சோதிக்கு சுவாதி சாப்பாடு பரிமாறிக் கொண்டிருந்தாள்.

"அத்தான். கவனமாகப் போய் விட்டு வாருங்கள் அப்பப்ப எனக்கு போன் பண்ணிட்டு இருங்க.. நானா தேவை என்றால் மட்டும் எடுக்கிறேன். சரிதானே?"

"சரி சுவாதி மாமா மாமி அப்பா அம்மா புறப்பட்ட பிறகு குறுந்தகவல் தா."

"சோதி கை கழுவிவிட்டு துடைத்துக் கொண்டிருக்கும் போது சுவாதியின் போன் அடித்தது. ராதாதான் கூப்பிட்டிருந்தாள்..

"ராதா சொல்லு.."

" ......................"

"நான் இதோ இப்பவே வாரன். அத்தானை அனுப்பிட்டு வாரன்"

"....................."

"என்ன சொல்கிறாய் ராதா?............சரி மணிட்ட அந்த பேப்பரை கொடுத்துவிடு..பார்க்கிறோம்"

"அத்தான் இன்றைய பேப்பரில் ஒரு பெண்ணின் படத்தோடு ஒரு செய்தி வந்துள்ளது. ராதா தான் பார்த்துவிட்டு இப்போ போன் பண்ணினாள் . மணி பேப்பரைக் கொண்டு வருகிறான். பார்ப்போம்"

மணி கொண்டு வந்த"ஆதவனொளி" பத்திரிகையின்3 ம் பக்கத்தில் இளம்பெண்ணின் படத்துடன் அந்த செய்தி வெளியாகி இருந்தது

'–பெரிய மடுவில் சிறுத்தைப் புலி தாக்கி இளம் பெண் பலி. நானாட்டானைச் சேர்ந்த இளம் பெண் ஸ்கூட்டியில் பெரியமடுவில் பயணித்த வேளை சிறுத்தைப் புலிதாக்கி பலியாகிய சம்பவம் நேற்று இரவு இடம் பெற்றுள்ளது. சம்பவம் தொடர்பாக மன்னார் பொலிஸ் விசாரித்து வருகின்றனர்.–'

"அத்தான் படத்தில் இருக்கும் இந்தப் பெண்ணை நானும் ராதாவும் பார்த்திருக்கோம்." சொல்லிக் கொண்டு இருக்கும் போதே ராதாவும் அங்கு வந்தாள்.

"ஓம் அண்ணா நாங்க அன்னிக்கு ரோஸ்லின் பிரைடல் ஸ்டூடியோவுக்குப் போனோம் அல்லவா? அங்கு தான் இவளுடைய போட்டோவையும் பார்த்தோம்."

"என்ன போட்டோவிலா? அப்போ இது யார் என்று உங்களுக்குத் தெரியாது?"

"இல்லை அண்ணா. ஆனால் அழகாக அலங்காரம் பண்ணி போஸ்கொடுத்து இருக்கும் இவள் போட்டோவை அங்கு டிஸ்ப்ளே பண்ணியிருந்ததைக்

காட்டி பிரைடல் அலங்காரத்தைப் பற்றி பெருமையாக அங்குள்ள ஒரு உதவியாளரான பெண் சொல்லிக் கொண்டு இருந்தாள். அதுதான் ஞாபகம் வந்தது.”

“ஓ அப்படியா?” என்று கேட்டு விட்டு சிந்தனையில் ஆழ்ந்தான் சோதி.

“என்ன அத்தான் யோசிக்கிறீங்க?”

“ஒண்ணுமில்லை. சரி நான் புறப்படுகிறேன். இந்த பேப்பரை நான் வைத்துக் கொள்கிறேன்” –என்று சொல்லியபடி அதை சுவாதி கையில் இருந்து வாங்கிக் கொண்டான்.

உயிலங்குளம்.

மன்னார் வீதி சந்தியில் இருந்து –

பாலைக் குளி அடம்பன் வீதியில் மூன்றாவது வீடு . வெள்ளைக் கொடிகளும் தோரணமும் கட்டி அந்த வீடு சோகத்தின் கூடாரமாகக் காட்சியளித்தது கடந்த வாரம் வரை திருமணம் நடைபெறப் போகும் ஒரு வசந்த விழா வீடாக அமர்க்களப் பட்டுக் கொண்டிருந்த இடம். இப்போது சோகத்தில் தோய்ந்து நெஞ்சைப் பிளிந்தது. செம்மண் வீதி ஓரத்து பாலை மரத்து நிழலில் ஸ்கூட்டியை நிறுத்தி விட்டு வீட்டு முற்ற கூடாரத்துக்குள் நுழைந்தான். அவன் யாருடைய வரவேற்பையும் எதிர்பார்க்கவில்லை ஆனால் அழுது அழுது வீங்கிய நாலுநாள் நரர்த்தாடி முளைக்க ஆரம்பித்த ஒரு பெரியவர் இவனை அடையாளம் கண்டுகொண்டார்.

“சோதித்தம்பி..!” என்று ஓவென அழுதவண்ணம்,

“பார்த்தீங்களா தம்பி இப்படியாப் போச்சே. மகள் கலியாண வீடு இப்படி செத்தவீடாப் போச்சே நாம

என்ன பாவம் பண்ணினோம். கடவுளே ஏன் இப்படி எங்களைச் சோதிக்கிறாய்?"

அவர் பின்னாலேயே ஒரு அம்மாளும் 'ஓவென' கதறியவண்ணம் இவனைக் கட்டிக் கொண்டு அழ ஆரம்பித்தாள்.

சோதி அந்தப் பெரியவரின் முதுகை சற்று ஆறுதலாகத் தடவிக் கொண்டிருந்தான். எதுவும் பேசமுடியவில்லை. கண்களில் நீர் பனித்தன.

பத்து நிமிடங்கள் செல்ல மெதுவாக ஆசுவாசமாகினர் அந்த வயதான தம்பதிகள்.

பெரியவர் உள்ளே திரும்பி, "மாலா தம்பி சோதிக்கு சோடா கொண்டு வா மகளே".

"இல்லை ஐயா.. பரவாயில்லை..அவன் மறுத்தாலும் மாலா என்று அழைக்கப் பட்ட ஒரு பெண் கையில் ஓரேஞ் பார்லியுடன் அங்கு வந்தாள்

அவளைப் பார்த்ததும் சோதிக்கு சற்று வியப்பானது. ஆனாலும் அதைக் காட்டிக் கொள்ளாது..

"வேண்டாம் தங்கச்சி இருக்கட்டும். நீங்க அவங்க தங்கச்சியா?"

"இல்லை அண்ணே நான் சுந்தரியோட ஃப்ரண்ட்.."

"ஓ அப்படியா? நான் உங்க கிட்ட கொஞ்சம் கதைக்கலாமா"

"மாலா சுந்தரியைப் பற்றித்தான் அண்ணே பேசவேண்டும் என்று நினைக்கிறார். பேசும்மா.."– பெரியவர் சொல்லவும்,

"சரி மாமா" என்று அந்த பெரியவரிடம் சொல்லிவிட்டு ஒரு கதிரையை இழுத்துப் போட்டு எதிரில் இருந்தாள்.

சுற்றி வர கவனித்தான் சோதி, சற்றுத்தள்ளி ஒரு வயதானவரைத்தவிர பக்கத்திலே யாரும் இல்லை.

"ஒரு நிமிஷம் மாலா". என்ற சோதி மெசேஜ் ஒன்றை வாசிப்பது போல் போனை எடுத்துப் பார்த்துவிட்டு யாருக்கோ டயல் செய்தான் .

யாரும் அழைப்பினை எடுக்காததால் போனை சட்டையின் பொக்கட்டில் வைத்து விட்டான்.

"மாலா நான் நேரிடையாகவே கேட்கிறேன் நீங்க ஒளிவு மறைவு இல்லாமல் பதில் சொல்லுவீங்களா?".

"அண்ணே நீங்க கேட்பதைப் பார்த்தால் ஏதோ என்னை விசாரிக்க வந்த மாதிரி இருக்கு"

"விசாரணை மாதிரிதான். ஏனென்றால் நீங்கள் கூறும் பதில்கள்தான் ஏன் உங்க ஃப்ரண்டு செத்துப் போனாங்க என்பது தெரியும். ஏதும் மறைக்க முயன்றீங்க என்றால் தேவையில்லாமல் போலீஸ் உங்களைத் தொந்தரவு செய்யப் பார்ப்பாங்க"

மாலா சற்றுப் பயந்தவள் போன்று அவர்களைச் சுற்றி ஒரு நோட்டம் விட்டாள்.

"என்ன அண்ணே பயமுறுத்துறீங்க."

"பயப்படாதே மாலா. உனக்கும் இந்தக் குடும்பத்துக்கும் உதவிசெய்யத்தான் நான் வந்தேன்"

"16.05.2018 அன்று பகல் 1.00 மணியளவில் ரோஸ்லின் பிரைடல் ஸ்டுடியோவுக்கு சுந்தரியும் நீயும் போனீங்களா?"

மாலா மிரண்டவளாய்..

"ஆ...ஆ..ஆமாம் அண்ணே. அங்கேதான் அக்கா மேக்கப்புக்குப் போய் இருந்தாங்க போய் ஃபேஷியலும்,

தலை முடி ஸ்ட்ரெய்ட்டும் பண்ணி விட்டு 'மாதிரி மேக்கப்' ஒன்றும் செய்யப் போனோம்.

"ஒரு நிமிஷம் மாலா அது அன்றைக்கு செஞ்சீங்களா?"

"இல்லை ஒரு கிழமைக்கு முன்னால் செய்தோம். அன்றைக்கு அது பற்றி கொன்ஃபோர்ம் பண்ணப் போனோம்."

"அப்படியென்றால். ஏன் ரெண்டுபேரும் அழுது கொண்டே அங்கிருந்து வெளியே வந்தீங்க?"

"இல்லையே அண்ணே அழாமல் தானே வந்தோம்"

"இல்லை பொய் சொல்லாதீங்க. நீங்க அழுது கொண்டே டாங்க் ரோட்டிலே போனீங்கதானே அப்போ ரெண்டு பேர் மோட்டார் சைக்கிளில் வந்து உங்களை வழிமறித்து போனைக்காட்டி காட்டி எதோ பேசினான்கள். நீங்க அந்தப் போனைப் பறிக்கப் பார்த்தீங்க. அவன்கள் அதை உங்களிடம் தராமல் போய்ட்டாங்க. என்ன நடந்தது? என்று மறைக்காம சொல்லுவியாம்மா?"

மாலாவின் முகம் பயத்தில் இருண்டே போய் விட்டது.

"பயப்படாதே மாலா என்ன நடந்தது என்று சொல்லு, அண்ணே நான் இருக்கேன். உங்களுக்கு உதவி செய்ய என்னிடம் உண்மை என்ன வென்று சொல்லுவியா?"

இரண்டு நிமிடங்கள் யோசித்த மாலா,,

"அண்ணே உங்களிடம் தனியாகப்பேசனும்.

பரவாயில்லை இங்கே இப்போ யாருமில்லை.சொல்லு,"

"அண்ணே என்ன நடந்தது என்றால்—

—மே மாதம் 12ம் திகதி,

சுந்தரியும் நானும் சுந்தரியின் திருமணத்துக்காக மேக்கப் செய்ய புக் பண்ண என மன்னார் ரோஸ்லின் ஸ்டூடியோ போனோம்.
அங்கு மொடல் மாதிரி அவளை அலங்காரம் பண்ணியபின் அவளை நான்கைந்து போட்டொ எடுத்தா ரோஸ்லின். படம் பிரிண்ட் போட்டு பிறகு கல்யாணத்தின் போது கொண்டு வருவதாக சொல்லவே நாங்களும் வந்து விட்டோம்.
அப்புறம் அன்று இரவு.. 9.00 மணி இருக்கும் சுந்தரி எங்க வீட்டுக்கு வந்தாள். அதோ அந்த பக்கத்து வீடு எங்களோட வீடு.
சுந்தரி என்னைத் தனியாக அழைத்து, தன்னோட வாட்ஸ் அப்பில் ஒரு வீடியோவைக் காட்டினாள். 'அதில்… அதில்…' மனசே பதறுது அண்ணே. சுந்தரியை ஆடைகள் இல்லாமல் ஒரு வீடியொவை ஒருவன் அனுப்பி வைத்து விட்டு, 'அதைப் பார்.. நான் இன்னும் 10 நிமிடத்தில் உன்னை அழைப்பேன்' என்று தகவலையும் டைப் பண்ணி அனுப்பியுள்ளான்.
9.15 போல் கோல் ஒன்று வந்தது. சுந்தரியின் இயர் போனை இருவரும் ஒரே நேரம் காதுகளில் போட்டு அவன் பேசியதைக் கேட்டோம்.
'ஏய் சுந்தரி.. உனக்குக் கலியாணம் 22ம் திகதி என்று தெரியும். அதற்கு முதல் நீ என்னோடு கண்டிக்கு வரோனும்.. நான் சொல்றபடி செய்யாவிட்டால் இந்த வீடியோ வாட்ஸ் அப் ஃபேஸ்புக் என்று பறக்கும். இன்னும் அஞ்சு நிமிடத்தில் கூப்பிடுவன் நல்ல பதிலாகச் சொன்னால் உன் கலியாணம் அமோகமாக நடக்கும் விளங்குதா?'

‘டேய் நீ யாருடா? ஏன் இப்படி செய்யுறாய்?’
‘அதுதான் விளக்கமா சொல்லிட்டேனே.’
போனைக் கட் பண்ணிட்டான். சுந்தரி சத்தமில்லாம பொங்கி பொங்கி அழுதாள்
“ஏன் மாலா நாம எந்தப் படமும் எடுக்கவில்லையே. அதுவும் போக என் நம்பர் எப்படி இவனுக்கு கிடைத்தது?”
“சுந்தரி இன்று நாம் போனோமே ரோஸ்லின் ஸ்டுடியோ. அங்கு உன் நம்பரும் அட்ரஸூம் கொடுத்தோம் தானே. அங்கு தான் ஏதோ விஷயம் நடந்திருக்கு..நாளைக்குப் போய் விசாரித்தால் தெரியும்.”
“சரி இப்போ அவன் கூப்பிடுவானே. என்ன செய்வது? மாலா?”
“பேசாம ஐயா அம்மாட்ட சொல்லுவோமா?”
“வேணாண்டி அவன் உடனே வாட்ஸ் அப், ஃபேஸ்புக்கிலே போட்டு விட்டான் என்றால் நான் உயிரை விடுவதைத் தவிர வேறு வழியில்லை..என்னோடு என் ஐயா அம்மாவும் உயிரை விட்டுருவாங்கடி… ”சொல்லிட்டு ‘ஓ’ன்னு அழுதாள்..
“சரி அழாதே யாராவது பார்த்தாங்கன்னா வெவகாரமாகப் போகும்.அவன் கூப்பிட்டால் இன்னும் ரெண்டு மூணுநாள் போகட்டும் என்று சொல்லு.அதற்குள் ஏதாவது வழி கிடைக்கும்.இந்த வீடியோவை அழிச்சிடு முதலில். நாங்க ரோஸ்லினைப் பார்க்க நாளைக்குப் போவோம்”
அப்ப,.. மீண்டும் அவன் போனில் கூப்பிட்டான். நடுங்கிய படியே ஹெட் போனைக் காதில் வைத்துக் கொண்டோம்..

'சுந்தரி.. என்ன முடிவு பண்ணி இருக்காய்..? நாளைக்கு ரெடியா இரு. எப்படி எங்கே நாம சந்தித்து போவது என்று சொல்லுறேன்..'

"நாளைக்கு வேணாம் இன்னும் ரெண்டு நாள் போகட்டும் . அப்பாவுக்கு சுகமில்லை."

'இங்கே பார் சுந்தரி.. பொய் ஏதும் சொல்லி என்னை சமாளிக்கப் பார்க்காதே. நீ சொல்ற மாதிரி சனிக்கிழமை காலையிலே நாங்க கண்டிப்பா கண்டிக்குப் போறோம். நான் நாளைக்குக் காலையிலே 9.00மணிக்கு கோல் பண்ணி எங்கே எப்படி சந்தித்துப் போகிறோம் என்று சொல்லுறேன்' சொல்லிட்டு போனைக் கட் பண்ணிட்டான்.

–இரவு முழுக்க நாங்க இரண்டு பேருமே தூங்கவில்லை. அடுத்த நாள் 9.00 மணிக்குக் கூப்பிட்டான்.

சனிக்கிழமை காலை 8.00மணிக்கு உயிலங்குளம் மில்லுக்குக் கிட்ட வெயிட் பண்ணவேண்டும் என்றும் தான் வந்து கூட்டிப் போவதாகச் சொல்லி விட்டு போனைக் கட் பண்ணிவிட்டான்.

சுந்தரி பாவம். மௌனமாய் அழுது கொண்டே இருந்தாள்.

நானும் அவளும் 12.00 மணி பஸ்ஸில் மன்னார் ரோஸ்லின் ஸ்டூடியோ சென்றோம். ரோஸ்லினைப் பார்த்து,

சுந்தரி கேட்டாள்.

"என்னை போட்டோ எடுத்தீங்களா.. வீடியோ எடுத்தீங்களா?

"ஏன் இப்படி விசாரிக்கிறீங்க? போட்டோதான் எடுத்தோம். வீடியோ தேவையில்லையே"

“இல்லை கேட்டேன் வீடியோ எடுத்திருந்தால் அதிலும் ஒரு பிரதி எடுக்கலாமே என்றுதான் கேட்டேன்.”

“எடுத்திருந்தால் சொல்லுவேனே?”

“என்ன மிஸ் ரஃப்ஃபா பேசுறீங்க?”

“நான் ஒன்றும் ரஃப்ஃபா பேசவில்லை. நீங்கதான் வந்து என் வேலையை குழப்புறீங்க. உங்களுக்கு மேக்கப் பண்ணுற அன்னிக்கு வரும் போது பிரிண்டு போட்டுக் கொண்டு வாறன் இப்போ கிளம்புங்க..”

அந்த மிஸ் பக்கம் ‘ஏதோ தப்பு நடக்குது’ என்று புரிந்து கொண்டோம். அங்கு வைத்து எதுவும் பேசாமல் சுந்தரியை நான் வெளியே அழைத்துக் கொண்டு வந்து விட்டேன்.

அவள் அழுது கொண்டே வெளியில் என்னுடன் வந்ததைத்தான் நீங்க பார்த்திருக்கீங்க. நாங்க டாங்க் ரோடுக்குக் கிட்ட போகும்போது இரண்டு பேர் மோட்டார் சைக்கிளில் வந்து நிற்பாட்டி,

‘என்ன விசாரணைகள் பண்ணிக் கொண்டு இருக்கீங்களோ? இந்த விசாரிக்கிற வேலை ஏதும் செய்தாலோ அல்லது போலீசுக்குப் போனாலோ அப்புறம் இந்த போன் தான் பேசும்’ என்று போனைக்காட்டி காட்டி பேசினதைத்தான் நீங்களும் பார்த்தீங்க...

வீட்டுக்கு வந்த சுந்தரி மறுநாள் இந்த உலகத்தை விட்டே போவாள் என்று நான் எதிர் பார்க்கவே இல்லை அண்ணே..–

இவ்வளவும் சொல்லி விட்டு மாலா அழத் தொடங்கி விட்டாள்.

"மாலா அழுகையை நிற்பாட்டு. சீக்கிரமே அந்த காமாந்தகன் சிக்குவான். அதற்குத்தான் நான் தனிப்பட்ட முறையில் விசாரிக்கிறேன்"

"சரி அய்யாவிடம் நான் புறப்பட்டு விட்டேன் என்று சொல்லிவிடு"

வெளியே வந்த சோதி போனை அணைத்தான். அணைக்கவும் சுவாதியின் மிஸ்டு.கோல் மெசேஜ் வரவே. அவளை அழைத்தான்.

"அத்தான்.. உங்களுக்கு எடுத்தேன் என்கேஜ்டாகவே இருந்தது."

"ஓம் சுவாதி.. நான் இன்ஸ்பெக்டருடன் வீடியோ கோலில் இருந்தேன். என்ன விஷயம் சுவாதி?"

"அத்தான்.. உங்களிடம் இருக்கும் அந்தப் பேப்பரில் 5ம் பக்கத்தை ஒருக்கா பாருங்கள்."

"ஏன்? என்ன விஷயம்? சுவாதி.."

"அத்தான் நீங்க அதைப்பார்த்து விட்டு கூப்பிடுங்கோ, சரி நீங்க போன விஷயம் எப்படி?"

"சுவாதி உனக்கு ஒரு வீடியோ அனுப்புகிறேன் பார்த்துக்கோ. மிச்சம் பிறகு கதைக்கிறேன்"

சோதி போனை அணைத்து விட்டு பேப்பரை ஸ்கூட்டி பேக்கில் இருந்து பேப்பரை எடுத்துப்பிரித்தான். 5ம் பக்கம் ஒரு பெண்ணின் படத்தைப் போட்டு கீழ்க்கண்டவாறு செய்தி இருந்தது,

– 'இம்மாதம் 21ம் திகதியில் இருந்து அஞ்சலா வேலுமணி என்ற பெண்ணைக் காணவில்லை. மன்னார் போவதாகச் சொல்லிவிட்டுப் போன இவர் கடைசியாக சிவப்பு கறுப்பு கலந்த சுரிதார் அணிந்திருந்தார் எனத் தகவல் தெரிவிக்கப் பட்டுள்ளது. இவர் பற்றிய தகவல்

தெரிந்தவர்கள் அருகில் உள்ள போலீஸ் நிலையத்திலோ அல்லது கீழுள்ள தொலை பேசி இலக்கங்களுடன் தொடர்பு கொண்டு தெரிவிக்கவும்'—
—வேலுமணி குடும்பத்தினர்.—
சுந்தரி இறந்து மூன்று நாட்களில் ஒரு பெண்ணை சிறுத்தைப்புலி அடிச்சிருக்கு, அஞ்சலாவைக் காணோம். இரண்டும் ஒரேநாளில் நடந்திருக்கு. ..
உம் எதற்கும் எஸ்.பியை கூப்பிடுவோம்.'—எஸ்.பியைக் கூப்பிட்டான்
"ஹலோ சேர் ..வீடியோ பார்த்தீங்களா"
"எக்ஸலண்ட் வெட சோதி.. அந்தப்பொடியன்கள் யாரென்று முதலில் கண்டு பிடிக்கிறேன்.."
"சேர்.. இன்னும் இரண்டு விஷயம் . ஒன்று பெரிய மடுவிலே சிறுத்தை அடித்து ஒரு பெண் சாவு. என்ற செய்தியும், அஞ்சலா என்ற பெண் காணவில்லை என்ற செய்தியும் வந்திருக்கே. அந்தக் கேஸ்கள் உங்க ஸ்டேசனுக்கா வந்திருக்கு?"
"ஔவ் ஔவ் சோதி,, பெரிய மடுவிலே செத்த பெண்ணின் பிரேத பரிசோதனை செய்ய வேண்டும். அப்புறம் அஞ்சலாவின் பேரண்ட்ஸ் இங்கே வந்து கொம்ப்ளையிண்ட் போட்டு இருக்காங்க. விசாரிச்சுக் கிட்டு இருக்கோம்."
"சேர் எனக்கு ஒரு தகவல் தருவீங்களா?"
"வாட் சோதி?
"அந்த சிறுத்தை அடித்த இடம் எது என்று சொல்லுவீங்களா?"
"அது பெரியமடு குளத்துக்குப் பக்கம் இருக்கும் புளியமரக் காட்டில்தான் அந்த பொடி கிடைச்சது"

"தாங்க் யூ சேர்"
"சோதி நீங்க இப்போ அங்கேதான் போறதா? போறது என்றால் சொல்லுங்க நான் உதவிக்கு யாரையும் அனுப்புறன்"
"வேண்டாம் சேர் . நான் அங்கு போய்ட்டு கூப்பிடுகிறேன்"
சோதி பெரிய மடுவுக்கு ஸ்கூட்டியில் போக விரும்பவில்லை. எனவே கிருஷ்ணாவைக் கூப்பிட்டான்.
"கிருஷ்ணா நீ வேலையில் இருக்கிறாயா?"
"......................."
"அப்படி என்றால் நல்லதாகப் போய் விட்டது. நான் இங்கே உயிலங்குளத்தில் தான் நிற்கிறேன். நான் அங்கு வருகிறேனே. பத்து நிமிஷத்திலே வந்து விடுகிறேனே"
"......................"
சுவாதிக்கு போன் பண்ணிச் சொல்லிவிட்டு, புறப்பட்டான்.
முருங்கன் வங்கி வாசலில் கிருஷ்ணாவின் அலுவலக கார் அருகே கிருஷ்ணாவும் டிரைவரும் காத்து நின்றனர். கிருஷ்ணா டிரைவர் கண்ணனிடம் சோதி வந்த ஸ்கூட்டியை எடுத்துக் கொண்டு ஆண்டான் குளத்துக்குப் போய் சோதியின் வீட்டில் காத்து நிற்கச் சொல்லிவிட்டு, சோதியும் அவனுமாய் காரில் பெரிய மடுவை நோக்கிப் பயணித்தனர். கிருஷ்ணா காரை ஓட்டிச் செல்ல சோதி நடந்தவற்றை எல்லாம் அவனிடம் விபரித்துவிட்டு வீடியோவையும் காட்டினான்.
பெரிய மடுக் குளத்தை அடையும் போது மணி நான்கு.

குளத்துக்கு அருகில் இருந்த தேனீர் கடையருகில் காரை நிறுத்தி விட்டு இருவரும் தேனீர் அருந்த இறங்கினர். பன்னும் வாழைப்பழமும் வாங்கிச் சாப்பிட்டுக் கொண்டே டீக்கடைக்காரர்கிட்ட பேச்சுக் கொடுத்தான் சோதி.

"அண்ணே, இவர் மன்னார் வங்கி மனேஜர். நான் ஆண்டான்குளத்தில் கராஜ் வைத்திருக்கிறேன். நான் இந்தப் பக்கம் ஒரு காணி ஒன்று வாங்க இருக்கிறேன். தரகர் இங்கே புளியந்தோப்பு நாலாங்கட்டையில் ஒரு 5 ஏக்கர் இருக்கிறது என்றார். அந்த இடம் எங்கே இருக்கு என்று சொல்லறீங்களா அண்ணே.?"

"ஓ அதுவா இங்கே இருந்து நடந்து போனால் கால் மைல் தான். சுற்றிப் போவதாய் இருந்தால் நாலரை மைலுக்கு போகனும். நீங்க குளக்கட்டுக்கு அருகில் காரை விட்டு விட்டு குளக்கட்டால் போய் புளியந்தோப்புக்குள் இறங்கி கொஞ்ச தூரம் கிழக்காலேயே போனிங்க என்றால் பெரிய வெளி புதர்களாக இருக்கும். நீங்க சொல்ற காணி அதுவாகத்தான் இருக்கும்"

"அண்ணே அந்த புளியந்தோப்புப் பக்கம் சிறுத்தைப் புலி நடமாட்டம் இருப்பதாக சொல்றாங்களே.. அப்ப அந்தக் காணிப் பக்கம் பயம் இல்லையா. அதனால்தான் காணியை விற்கிறாங்களோ?"

"அப்படி எல்லாம் சிறுத்தைப் புலி எல்லாம் இந்தப் பக்கம் வருவதாக யாரும் சொன்னதில்லை. சும்மா வெறுங் காணிகளுக்குள் கொட்டில் போட்டு தண்ணி அடிக்கிறவங்க அவிழ்க்கிற கட்டுக்கதை. யானைகூட ஊருக்குள் வராது"

"அப்படியா அண்ணே அப்போ தைரியமா காணி வாங்கலாம் என்கிறீங்க.. நன்றி அண்ணே.."
"அட சும்மா காணியைப் பற்றிக் கேட்க உண்மையாகவே அங்கு காணி இருக்கு என்று சொல்றானே!" – காதுக்குள் கிசு கிசுத்தான் கிருஷ்ணா, தேனீர் அருந்திவிட்டு காரில் குளக்கட்டு வரை சென்று, காரை அங்கே விட்டுவிட்டு குளக்கரையில் ஏறிச் சென்று புளியந்தோப்பில் இறங்கினர். புளியந்தோப்பில் ஐம்பது மீற்றர் தூரம் நடந்து முடிய வெட்ட வெளி தென்பட்டது.
"சோதி கொஞ்சம் இரு. வா அந்த மரத்துக்குப் பின்னால் மறைந்து கொள்வோம். டக்கென வா."
"சோதி மெதுவா அங்கே பார். ரெண்டுபேர் மோட்டார் சைக்கிளில் வருவதை."
தூரத்தில் வெட்ட வெளியில் தெரியும் ஒற்றையடிப் பாதையில் இருவர் மோட்டார் சைக்கிளில் வந்து கொண்டிருந்தனர்.
"கிருஷ்ணா கவனிச்சியா. அது நேசனும் அவன் நண்பனும் தானே. அன்றைக்கு சுந்தரி மாலாகிட்ட வம்பு பண்ணினவன்கள் தானே?"
"ஓம் அவன்களேதான். சோதி முடிஞ்சா ரெண்டுபேரையும் வீடியோ பண்ணு. நானும் பண்ணுறேன்"
இருவரும் புளியமரத்தில் ஏறி ஒரு கிளையில் பதுங்கிக் கொண்டே அவர்கள் வருவதை போனில் வீடியோ எடுத்தனர். சோதி எஸ்.பிக்கு வீடியோ கோல் எடுத்துவிட்டு வீடியோ பண்ணத் தொடங்கினான்.

அந்த இருவரும் மெதுவாகவே மோட்டார் சைக்கிளில் வந்தனர். இருவரும் சுற்று முற்றும் பார்த்துக் கொண்டே வந்தனர்.

இவர்கள் இருந்த மரத்துக்கு வந்து பைக்கை நிறுத்திவிட்டு இறங்கினர்

“காணோமேடா.. அவள் லேசில இங்கிருந்து வெளியே போக வாய்ப்பில்லை. அவள் செத்துட்டா என்று நினைத்து அங்கேயே அவளைப் போட்டுட்டு வந்தது தாண்டா பிழை. செத்திருந்தா கட்டாயம் பொலிஸுக்கு தெரிஞ்சிருக்கும்”

“யாரும் காப்பாத்தி இருந்தாலும் தெரிஞ்சிருக்குமே இத்தனைக்கும்”

“நீ அடிச்ச அடி அவளை கட்டாயம் சாகடிச்சிருக்கும். பிழைக்க வழியில்லையடா” நேசன்.

“புதர்கள் எல்லாம் பார்த்தாச்சு. எதுக்கும் தோப்புக்கு ரெண்டுபக்கமும் பார்த்துட்டுப் போவோம்”

அவன்கள் திரும்பவும் பைக்கில் ஏறி தோப்பைச் சுற்றித்தேடப் போனார்கள். அவர்கள் தேடிப் போய் எதுவும் காணாமல் மீண்டும் ஒற்றையடிக்கு வந்து குளக்கட்டை நோக்கிப் போனார்கள்.

சிறிது நேரம் காத்திருந்து விட்டு மரத்தில் இருந்து கீழ் இறங்கினார்கள் சோதியும் ,கிருஷ்ணாவும்.

“கிருஷ்ணா நாம ஒருக்கா அந்த வெட்ட வெளிப்பக்கம் பார்த்துவிட்டு வருவமா?”

“வா போகலாம்”

இருவரும் ஒற்றையடியால் புதர்களை கடந்து சென்று கொண்டிருந்தனர். சற்று தூரத்தில் குளக்கட்டு அழகாகக் காட்சி தந்தது. பறவைகள் சந்தோஷமாக

*கூவிக் கொண்டே பறந்து கொண்டிருந்தன. சிலவற்றின் வாயிலும் கால்கள் இடுக்கிலும் மீன்கள் மாலைச் சூரிய ஒளி பட்டு பறக்கும் நட்சத்திரங்களாக மின்னின.*

*"கிருஷ்ணா கவனிச்சியா அங்கே அவன்கள் பைக்கில் போவது தெரிகிறது . எதற்கும் சற்று புதர்கள் மறைவிலேயே போவோம்."*

*அவர்கள் கண்பார்வைக்கு எட்டாத தூரதுக்குப் போனபின் அவர்கள் சற்று அவதானமாகப் புதர்களையும் புதர் ஓரங்களையும் பார்த்துக் கொண்டே போனார்கள். அப்போது கறுப்பு குட்டி நாயொன்று அவர்களை நோக்கி ஓடி வந்தது. அது வந்து, சோதியின் காலுக்குக் கிட்ட நின்று அவனை அண்ணாந்து பார்த்து விட்டு, காலை நக்கியது. சோதி அதைத் தடவிக்கொடுத்தான். அது சட்டென நழுவி அவர்களுக்கு முன்னே ஓடியது. இவர்களுக்கும் புரிந்துவிட்டது. பைரவர்தான். அதைத் தொடர்ந்து பின்னாலேயே போனார்கள்.*

*சிறிது தொலைவில் கொட்டில் ஒன்று தெரிந்தது. அதன் அருகே போனதும் குட்டி நாய் சற்று நிதானித்து ஓரமாய் நின்றது.*

*கொட்டிலுக்குள்–*

*ஒரு பெரிய சரளைக்கல். பக்கத்தில் நிறைய காலியான சாராயப் போத்தில்கள்.*

*"கிருஷ்ணா இங்கே வரைக்கும் வந்திருக்கோம். எதுவும் சம்பவம் நடந்ததற்கான ஆதாரங்களையே காணோம். ஆறு மணியாச்சு இன்னும் கொஞ்சத்திலே இருட்டி விடும்"*

“ஓமடா சோதி.. இங்கே பாரு சோதி. ஏதோ இரத்தக் கறை..”
கொட்டில் ஓரத்தில் இருந்து இரத்தம் கோடு போல கொட்டிலின் மறு பக்கம் வரை திட்டுத் திட்டாக தெரிந்தது. எறும்புகள் மொய்த்துக் கொண்டு இருந்தது. அந்தக் கோடு கொட்டிலுக்குள் இருக்கும் கல்லின் மறு பக்கத்தில் இருந்து தொடங்கியது போல் இருந்தது.
“சோதி அப்போ இங்கே தான் சம்பவம் நடந்திருக்கு. எதுக்கும் எஸ்.பிக்கு அறிவிப்போம்”
எஸ்.பிக்கு கோல் பண்ணினான்.
நடந்தை எல்லாம் சொன்னான்.
“நாங்க இங்கேயே இருக்கோம் வாங்க”
“என்னவாம் சோதி?”
“நாங்க புளியந்தோப்பிலே இருந்து வீடியோ அனுப்பின உடனேயே அவர் கிளம்பி விட்டார் இன்னும் கொஞ்ச நேரத்தில் வந்து விடுவார்”
சரி அதுவரை ஏதாவது கிடைக்கிறதான்னு பார்க்கலாம். கொட்டிலுக்கு மறுபக்கம் இரத்தம் வழிந்த கோட்டைப் பின்பற்றி போனான் கிருஷ்ணா. ஒரு எட்டடி தூரத்துக்குத் தான் தொடர்ந்தது அது. அப்புறம் உடல் ஒன்று தேய்ந்து தேய்ந்து சென்றது போல் அடையாளம் காணப் பட்டது. பக்கத்தில் இரண்டு சோடி செருப்பு அடையாளங்கள் போல் தெரிந்தது. சோதியைக் கூப்பிட்டு காண்பித்தான். குட்டி நாய் சற்றுத் தள்ளி இருந்த புதரின் அருகே நின்று இவர்களைப் பார்த்து குரைத்தது.

அந்த இடத்திற்கு முன்னேறினார்கள். அங்கு போவற்குள் குட்டி நாயைக் காணோம் அதற்குள் மறைந்து விட்டது.
அப்போது புதருக்குள் யாரோ முனகுவதுபோல் சத்தம் கேட்டது.
"கிருஷ்ணா யாரோ முனகுவது போல் கேட்டதா?"
கிருஷ்ணா மூச்சை சற்று அடக்கி காது கொடுக்கலானான்.
"தண்ணி...அம்...மா",
"சோதி யாரொ ஒரு பெண்ணின் குரல்...
"தண்ணி கேட்குறா"
நெஞ்சு பட படக்க அருகில் இருந்த இரு புதர்களையும் தேடியபோது..
உடைகள் கிழிந்து இரத்த விளாராக ஒரு பெண் முகம் குப்புற கிடந்தாள்
இருவரும் உடனேயே செயல் பட்டனர்.
"கிருஷ்ணா தண்ணீர் எடுத்து வரவில்லையே நாம்"
"இவளைத் தூக்குகிறேன் வந்து தூக்கி என் தோள்மீது கிடத்தி விடு காருக்குக் கொண்டு போவோம் உடனே"
கிருஷ்ணா கால் பக்கம் பிடிக்க சோதி மெதுவாக அவளைத் தாங்கி தோளில் கிடத்தினான்.
"பயப்படாதேம்மா.காருக்கு போகிறோம்.இனி உனக்கு ஆபத்தில்லை பயப்படாதே தங்கச்சி"
"கிருஷ்ணா நீ உடனே அம்புலன்ஸுக்கு போன் பண்ணு. அப்படியே எஸ்.பிக்கும் தகவல் சொல்லு. நாங்கள் காரில் கூட்டிப் போவோம் இடையில் அம்புலன்ஸை மறித்து ஏற்றி விடலாம்"

அடுத்த 15வது நிமிடம் காரடிக்கு வந்து காரில் அவளைக் கிடத்தினார்கள். கிருஷ்ணா காரில் இருந்த தனது கோர்ட்டை எடுத்து அவள் மீது போர்த்தினான். கொஞ்சம் தண்ணீர் பருக்கினார்கள். அவள் இரண்டு வாய் குடித்து விட்டு மயக்கமாகி விட்டாள்.
அப்போ எஸ்.பி கூப்பிட்டார். சோதி ஸ்பீக்கரில் போட்டான்
“ஹலோ சோதி. இப்ப கேர்லுக்கு எப்படி இருக்கு என்ன ஃபெர்ஸ்ட் எய்ட் பண்ணியிருக்கீங்க? ஆம்புலன்ஸ் வருது. நான் கன்ஃபோர்ம் பண்ணிட்டேன். சோதி நீங்க மன்னார் ரோட்டில் வாங்க.. அம்புலன்ஸ் வரும்போது ஸ்டோப் பண்ணி கேர்லை அதுல அனுப்புங்க. நீங்கள் திரும்பி வாங்க. நாங்க ஸ்போட்டுக்கு போறோம்.”
“சரி சேர்...”
ஆம்புலன்ஸுக்கு அந்தப் பெண்ணை மாற்றி அனுப்பி விட்டு, கிருஷ்ணாவும் சோதியும் மீண்டும் குளக் கட்டுக்கு வந்தார்கள் . அங்கே நிறைய போலீஸ்காரர்களுடனும் மோப்ப நாயுடனும் ரேகை ஆய்வாளர்களுடனும் எஸ்.பி காத்திருந்தார். நேரம் 7.00 மணியாகி விட்டபோதும். டோர்ச்லைட்டுகள் சோலார் லாம்புகளுடன் ஒரு படையே கிளம்பிவந்திருந்தது. முன்னால் கிருஷ்ணா சோதி எஸ்.பி போக, கொட்டிலை அடைந்தது.
சோதி இரத்த அடையாளங்கள் இருக்கும் இடத்தை எல்லாம் காட்டினான். முடிந்த அளவு எல்லோரும் மீண்டும் வேறு தடயங்களைத் தேடிக் கொண்டு இருந்தனர்,

அப்போது போலிஸ் நாய் வாயில் ஒரு பொருளைக் கவ்வியது, இன்ச்பெக்டர் அதை நாயின் வாயில் இருந்து கிளவுஸ்போட்டிருந்த கையால் வாங்கி வெளிச்சத்தில் பார்த்தார்.

அது. செடிகள் இருக்கும் பாத்தியை நோண்டும் முள்ளுக் கரண்டி. ஐந்து இரும்பு நுனிகளுடனான ஒரு அடி நீளமுள்ள பிக்கான். அதன் நுனியில் இரத்த துணிக்கைகளுடனான சதைத் துண்டுகள் காணப் பட்டன,

அங்கு கிடைத்துள்ள போத்தல்களிலும் கல்லிலும் கொட்டில் தூண்களிலும் காணப் பட்ட அத்தனை ரேகைகளையும் சேகரித்துக் கொண்டனர்.

நேரம் பத்தாகி விட்டது. தடயம் தேடும் பணி நிறைவடைந்த நிலையில் ஐந்து கொன்ஸ்டபிள்களைக் காவலுக்கு வைத்துவிட்டு போலிஸ் படை திரும்பியது.

ஜீப்பருகில் வந்த எஸ்.பி கிருஷ்ணாவிடமும்ம் சோதியிடமும்,

“நாளை சந்திப்போம்” என்று விடை பெற்றுக் கொண்டார்.

“சேர் அந்த கேர்ல் ஹொஸ்பிடலில் எப்படி இருக்கா என்று எனக்கு நாளைக்குச் சொல்லுங்க சேர். நான் மதிய வேளை உங்களை வந்து பார்க்கிறேன்”

“ஓகே சோதி அண்ட் கிருஷ்ணா நீங்க போய் ரெஸ்ட் பண்ணுங்க. நாளைக்கு பார்ப்பம்”

சோதியும் கிருஷ்ணாவும் வீட்டுக்கு வரும் போது 11.30 ஆகி விட்டது.

இருவரின் கோலத்தையும் பார்த்த ராதாவும் சுவாதியும் குடும்பத்தினரும் கலவரப் பட்டுவிட்டனர். ஏற்கெனவே

நடந்தவற்றை வரும் போதே சொல்லி விட்டமையால் இருவரும் வந்தவுடன் நன்கு குளித்து சாப்பிட்டனர். பின் கிருஷ்ணாவும் ராதாவும் ட்ரைவருடன் மன்னாருக்கு கிளம்பினர்.

"கிருஷ்ணா வீட்டுக்குப் போனதும் போன் பண்ணு"

"சரி சோதி– சுவாதி, மாமா – மாமி குட் நைட்.."

சுவாதியும் சோதியும் தூக்கம் வராமல் அன்றைய நிகழ்வுகளை ஆராய்ந்து பேசிய வண்ணம் இருக்கும் போது.

கிருஷ்ணாவிடம் இருந்து அழைப்பு வந்தது, வீட்டுக்குப் போய்விட்டதாக.

அதன் பின்னரே இருவரும் தூங்கினர்.

மறுநாள் கராஜுக்குப் போய் வேலைகளை அவதானித்து விட்டு மாமாவும் அவனுமாய் காரில் மன்னாருக்குக் கிளம்பினர்.

"மாப்பிள்ளை.. நேற்று நாங்க குருக்களைப் பார்த்துப் பேசினோம். வைரவருக்கு சின்னதாக தூபி வைத்தே கோவில் கட்டினால் நல்லது என்றார். மேசனார் வேலுப் பிள்ளையையும் அவரிடம் கூட்டி வந்து பேசினோம். அடுத்த வாரமே வேலையைத் துவங்கினால் ஒரு கிழமைக்குள் முடித்து விடலாம். இந்த பங்குனி மாதம் தமிழுக்கு பதினைந்தாம் திகதி நல்ல நாள் இருக்கு என்றார்"

"அப்புறம் கிருஷ்ணா ராதாவுக்கும் வீடு குடிபுக நாளும் குறிச்சாச்சு. மே மாதம் பதினெட்டு. புதன் கிழமை. கிருஷ்ணாவை லீவு எடுக்கச் சொல்லவேணும்"

"சரி மாமா. ஒரு மாதிரி வைரவர் அருளால் எல்லாம் நல்லதே நடக்கும் என்று நம்பிக்கை இருக்கு"

“ஆ. அப்புறம் ஒரு முக்கிய விஷயம். உங்களுக்காக நீங்க விரும்பின மகேந்திரா ஜீப் நாளைக்கு வந்து விடும்.”

“ஏன் மாமா எங்கட அவசர தேவை என்றால் உங்கட கார் இருக்குதானே..” .

“நல்லாச் சொன்னீங்க மாப்பிள்ளை எங்கட அன்புப் பரிசு அது உங்களுக்கு”

“சரி மாமா. சுவாதிக்கு ஓகே என்றால் எனக்கும் ஓகே”

“நேற்று நல்லாவே நீங்களும் கிருஷ்ணாவும் சிரமப் பட்டு இந்த கேஸை நகர்த்தி இருக்கீங்க”

“ஆஸ்பத்திரியிலே அந்தப் பெண் சுகமாகி எழும்பி விட்டால் நிறைய விஷயங்கள் தெளிவாகும் மாமா”

“ஓம் மாப்பிள்ளை.. சரிதான் அவள் குணமாகிடுவாள். நீங்கள் மன்னாரில் பாங்கில் என்னை இறக்கி விட்டுட்டு போங்க. நான் வேலைகளை முடிச்சிட்டு உங்களுக்கு கோல் பண்ணுறன்”

“சரி மாமா”

மாமாவை இறக்கிவிட்டு சோதி போலிஸ் ஸ்டேஷன் போனான். அவன் போகவும் எஸ்.பி வெளியே வரவும் சரியாய் இருந்தது,

“குட் மோர்னிங் சேர்”

“குட் மோர்னிங் சோதி. ஹொஸ்பிட்டல் போவமா?”

“ஓகே சேர் . காரில் வருகிறீர்களா?”

“வாறன்” கான்ஸ்டபிளை ஜீப்பில் பின்னுக்கு வரச் சொல்லி விட்டு சோதியின் காரில் ஏறிக் கொண்டார்.

“சோதி, நீங்க சொன்ன மாதிரி புலி அடிச்சு அந்த கேர்ல் செத்தது என்பது பொய் என்று புரூஃப் ஆகிவிட்டது. இப்பதான் ரிப்போர்ட் வந்தது. நான்

நினைக்கிறேன் நேற்று 'டோக்' எடுத்து தந்த அந்த பிக்கானால்தான் குத்தி குத்தி மேர்டர் பண்ணியிருப்பான்கள். அந்த ஆயுதமும் ப்ளட்டும் இப்போ சோதனைக்கு போய் இருக்கு"

"சேர்.அந்தப் பெடியன்களை யார் என்று தெரிஞ்சதா?"

"இல்லை சோதி நாம போய் அந்த கேர்லை விசாரிச்சா ஏதும் தெரியுந்தானே?"

"போவோம் போய்ப் பார்ப்போம். பின்னால் ரைட்டரும் வீடியோகாரரும் வாராங்க"

மன்னார் ஆஸ்பத்திரி

காரில் இருந்து இறங்கி, அந்தப் பெண் இருக்கும், வார்டை நோக்கிப் போனார்கள்.

வார்டுக்கு வெளியே இரண்டு கொன்ஸ்டபிள்கள் காவல் நின்றார்கள் எஸ்.பியைக் கண்டதும் விறைப்பாக சல்யூட் வைத்தனர்.உள்ளே அந்தப் டொக்டரும் இரண்டு நேர்ஸ்களும் அந்தப் பெண்ணுக்கு சிகிச்சை அளித்துக் கொண்டிருந்தனர்.

"டொக்டர்.. எப்படி ட்ரீட்மெண்ட் ஓகேயா?"

"எஸ்பி சேர் ப்ளட் நிறைய லொஸ் ஆகியிருக்கு. பின் மண்டையில் அடி பட்டிருக்கு. டூ பைந்த் ப்ளட் ஏற்றியிருக்கு. இன்னும் 10 அல்லது 15 நிமிஷத்திலே கண் முழிக்க சான்சஸ் இருக்கு"

"எஸ்.பி சேர் ப்ளீஸ் வாங்க என் ஓஃப்ஃபிஸ்க்கு.."

அவரும் சோதியும் டொக்டருடன் அவர் ஓஃப்ஃபிஸ் போனார்கள்.

அங்கு அவருடன் பேசிக் கொண்டு இருக்கும் போதே டாக்டரின் போன் அடித்தது.

ரெசீவரை காதில் கொடுத்தார்.

" ஹலோ"
"....................."
"யெஸ் எஸ்.பி சேர் இங்கேதான் இருக்கார்"
ரிசீவரை எஸ். பியிடம் கொடுத்தார் டாக்டர்.
" ஹலோ "
"........................."
"வெரி குட். இங்கே எடுத்து வாங்க"
"டொக்டர். ப்ளட் போயிட்டு சொன்னீங்க. பிரச்சினை ஒன்றும் இல்லையே?"
"இல்லை சேர். ஸ்கேன் பண்ணிப் பார்த்தோம். நல்ல வேளை. மூளைக்கு பாதிப்பு ஒன்றும் இல்லை."
அப்போது, வெள்ளைக் கோர்ட்டுடன் நபர் ஒருவர் வந்தார்.
"இருங்க டொக்டர் ராஜு.."
"சேர் இவர் டொக்டர் ராஜு."
எஸ் பியும் வந்த டொக்டரும் கைகளைக் குலுக்கிக் கொண்டபின், டொக்டர் ராஜு கொடுத்த ஃபைலைப வாங்கிப் பார்த்தார் எஸ்.பி.
" அப்ப, காயங்கள் புலி அடித்தது இல்லை, ஏதோ ஷார்ப்பான வெப்பன் குத்தி இருக்கு. அப்படித்தானே"
" எஸ் சேர். கேர்ல் மூச்சு போகவிடாம வாயையும் மூக்கையும் பொத்தியதால்தான் மரணம் ஏற்பட்டிருக்கு. செத்த பிறகுதான் ஒரு கூர் வெப்பனால் கீறிக் கீறி பொடியில் கீறல் காயங்கள் இருக்கு. இறப்பதற்கு முன்னாலேயே இரண்டு பேர் கற்பழித்த தடயங்கள் பொடியில் இருக்கு"

“இதோ இந்த பொலித்தீனில் சுற்றி வைத்திருக்கேன்” என்றவாறு சிறிய காற்றுப் புகாத பொலித்தீன் பையொன்றை அவர் கையில் கொடுத்தார்.

அதற்குள் நாலைந்து ரோமங்களும் ஒரு நகத்துணிக்கைபோல் எதோ ஒன்றும் காணப் பட்டன.

“ரோமங்கள் இரு ஆண்களுடையது. நகத் துணிக்கை ஒரு ஆணுடையது. அதை நீங்க தான் கண்டு பிடிக்க வேண்டும்”

“தாங்க்யூ டொக்டர். தாங்க்யூ ஃபோர் யுவர் இன்ஃபோர்மேஷன்ஸ்”

“ஆ.. டொக்டர்.. எனக்கு ஒரு ரிப்போர்ட் வேண்டும். இந்த தடயங்களின் பயோ ரிபோர்ட் கிடைக்குமா?”

“சேர் அந்த ரிப்போர்ட்டும் இந்த ஃபைலிலேயே இருக்கு”

“ஓ அப்படியா.. தாங்க்யூ டொக்டர்”

அப்போ ஒரு நேர்ஸ் உள்ளே ஓடி வந்து..

“டொக்டர்.. பேர்ஷண்ட் கண்ணு துறந்துட்டா” – என்று சொல்லவும்

எஸ்.பி, சோதி, இருவரும் டொக்டரை தொடர்ந்து, அஞ்சலாவின் அறைக்குள் சென்றனர்.

அஞ்சலா எழுந்திருக்க முயன்றாள்.

சோதி படுத்திருக்கும் படி கையைக் காட்டி சொன்னான்.

டொக்டர் அவளைப் பரிசோதித்தார்.

“உங்க பெயர் என்ன?”

“அஞ்சலாதேவி”

“ஊர் என்ன?”

“நானாட்டான்”

“அப்பா அம்மா பெயர்?”
“அப்பா மார்க்கண்டு, அம்மா சிந்தாமணி”
“எக்ஷலண்ட் அஞ்சலாதேவி. நீங்க இப்போ நல்ல குணம் ஆகி இருக்கீங்க. குட்”
“டாக்டர் இவங்களிட்ட நான் பேசட்டுமா?”
“ஓ எஸ் சேர். நல்ல சுகமாயுள்ளாள். நீங்க பேசலாம்.”
“தாங்க் யூ டொக்டர்”
“சேர் ரெண்டு நிமிஷம் தாங்க இந்த இஞ்ஜெக்ஷன் போட்டு விடுகிறேன்”
“ஓகே ஓகே”
வெளியே எட்டிப் பார்த்தார் எஸ்.பி. அங்கு ரைட்டரும் வீடியோகாரரும் இருப்பதைப் பார்த்து டாக்டர் போனதும் அவர்களை உள்ளே வரச்சொன்னார்.
ஊசி போட்டு விட்டு டொக்டர் போனதும் அவர்களும் உள்ளே வந்தனர்.
எஸ்.பி அங்குள்ள கதிரையில் அமர்ந்து கொண்டார்.
“உன் பெயர் என்ன?”
“அஞ்சலா தேவி”
“அப்பா அம்மா இருக்காங்களா?”
“இருக்காங்க. அப்பா மார்க்கண்டு ரிடைர்ட் பிரின்சிபல். அம்மா சிந்தாமணி ரிடைர்ட் டீச்சர்.”
“ஊர் எது?”
“நானாட்டான் சேர் நானும் சகுந்தலாவும் ஃப்ரண்ட்ஸ் சேர்”
“யார் சகுந்தலா?”
“அவள்தான்....” கண்ணீருகுத்தாள் “அவளை அவளை… என் கண்ணுக்கு முன்னாலேயே ......... சீரழிச்சு…. கொன்னுட்டாங்களே சேர்”–அழுதாள்

“அழாமல் பதில் சொல்லுங்க உங்களை யார் கடத்தினார்கள்?”
“சேர். நானும் சகுந்தலாவும் மன்னாருக்கு நெடுக வருவோம். அப்போ தான் அவன்கள் ரெண்டு பேரும் பழக்கமானான்கள்”
“யார் அவர்கள்?”
“நேசனும் பாலாவும் சேர்”
“அவன்கள் இவன்களா..? என்று பார்த்துச் சொல்”
சோதியை ஜாடைகாட்டவே, அவன் தனது போனில் நேற்று பண்ணின வீடியோவில் அந்த இரண்டு பேரையும் காட்டினான்.
“இவன்கள்தான் சேர் இவன்கள் தான். எங்கள் இரண்டு பேரையும் ஏமாற்றிக் கூட்டிப் போனான்கள்”
“சொல்லு”
“சேர் மடுக் கோவில் திருவிழாவுக்கு காரில் வந்த இவன்கள் எங்களுக்கு நானாட்டான் வரை லிப்ட் தந்து எங்களோடு பழகினான்கள்”
“என்ன நம்பிக்கையில் இவன்கள் காரில் ஏறினீங்க?”
“எங்களோடு வந்த செல்லம்மா மாமிக்கு இவன்களோட பழக்கம்”
“செல்லம்மா மாமி யார்?”
“எங்கள் வீடுகளுக்குப் பக்கத்து வீடு. நல்ல மாதிரிதான் அந்த மாமி. அவுங்களுக்கு அடம்பனில் சொந்தக் காரங்க இருக்காங்க. அவங்க மூலம் மாமிக்கும் இவன்கள் எங்களோடும் பழக்கம்
“சரி நீங்களும் அவன்கள் காரில் வர உங்களுக்கு, பழக்கம் ஆகிட்டான்கள்”
“அப்படித்தானே”

“ஓம் சேர்”
“ஒரு கட்டத்தில் நேசனுடன் சகுந்தலாவும் நான் பாலாவுடனும் நெருங்கிப் பழகத் தொடங்கி விட்டோம்”
“போன வியாழக் கிழமை 19ம் திகதி சகுந்தலா சொன்னாள் ‘நேசனின் பேர்த் டே 21ம் திகதி வருது. அன்னிக்கு நாங்கள் நாலு பேரும் மடுவுக்குப் போக நேசன் திட்டம் போட்டு இருக்காரென்றும் அங்கு கோவில் அறை எடுத்து சமைத்து சாப்பிடுவது’ என்றும் சொன்னாள்.
21ம் திகதி நானாட்டான் முருங்கன் ரோட்டுச் சந்தியில் நாங்கள் காத்து இருந்தோம். அப்போ ஒரு வேனில் இருவரும் வந்து எங்களை அழைத்துச் சென்றார்கள்.
எஸ்பி குறுக்கிட்டார்
“வீட்டில் இது எல்லாம் தெரியுமா?”
“தெரியாது சேர்.... நாங்க மன்னாருக்குப் போய்ட்டு வருவதாக தனித்தனியாக சொல்லிவிட்டுத்தான் வெளிக்கிட்டு வந்து வேனில் ஏறினோம்”
“ஓகே அப்புறம் சொல்லு..”
“வேனில் முருங்கன் தாண்டி போய் ஒரு சாப்பாட்டுக் கடையில் நின்றது. ‘உங்களுக்கு சாப்பிட ஏதாவது வேண்டுமா?’ என்று கேட்டார்கள். நாங்கள் ‘பசிக்கவில்லை’ என்று சொன்னதும் ‘சரி டீ குடிக்கிறீங்களா?’ என்று கேட்டார்கள்.
‘சரி’ என்று சொல்லி வேனில் இருந்து இறங்கும் போது,
‘நீங்கள் இறங்க வேண்டாம், நாங்க டீயை கொண்டு வாறம் வேனில் இருந்தே டீ குடிங்க’ என்று சொன்னார்கள்.

சரி என்று வேனில் இருந்து இறங்கவில்லை. அவர்கள் டீ கொண்டு வந்தாங்க. வாங்கிக் குடிச்சோம் இரண்டு பேரும். கொஞ்சநேரத்தில் கண்கள் இருட்டிக் கொண்டுவரவே வேனிலேயே ஒருவர்மேல் ஒருவர் சரிஞ்சுட்டோம். கண் முழிச்சுப் பார்த்தபோது, எங்கோ ஒரு கொட்டிலில் நாம் இருவரும் இருப்பதை உணர்ந்து சுற்று முற்றும் பார்த்து எழுந்திருக்கும் போது,

பாலா என் கைகளை பின்னால் சேர்த்து கொட்டில் தூணுடன் கட்டத் தொடங்கியிருந்தான்.

'ஏன் பாலா இப்படிச் செய்கிறாய்?' என்று கோபத்துடன் கேட்க, கன்னத்தில் அறைந்தான்.

'நடக்கிறதை பார்க்கத்தானே போகிறாய்'. என்று கத்தினான்.

நேசன் சகுந்தலாவையும் பின்னால் கைகளை கட்டிவிட்டு அவள் வாயில் வேஞ்சித் துணியை அடைத்து கீழே கீழே படுக்கத் தள்ளியிருந்தான். சகுந்தலா கத்தமுடியாமல் திமிரத் திமிர,, சீரழிக்கத் தொடங்கி விட்டான்.

அவன் குரூரப் புன்னகையோடு எழுந்து கொண்டே பாலாவை அழைத்தான்.

பாலா தன் முறைக்கு சகுந்தலாவை அனுபவிக்க ஆரம்பித்து விட்டான்.

நான் ஒரு மாதிரி பின்னால் கட்டி இருந்த கைகளை விடுவித்துக் கொண்டே அருகில் இருந்த விறகுக் கட்டையை எடுத்து முதலில் நேசனின் தலையில் அடிக்க ஓங்கினேன். அதற்குள் திரும்பி என்னைப் பார்த்துவிட்டான்.

என் கன்னத்தில் ஓங்கி அறைந்து பின் புறமாய்த் தள்ளி விட்டான். நான் அருகில் இருந்த பெரிய கல்லில் தலை அடிபட விழுந்து விட்டேன்.
கண்கள் இருட்டிக் கொண்டு வர விழுந்தேன். கண்களைத் திறக்க முடியவில்லை. ஆனாலும் காதுகளில் அவர்கள் பேசுவது விழுந்தது. திடீரென சகுந்தலா கத்துவது கேட்டது.
“பாலா அவள் வாயில் துணி வெளியில் வந்து விட்டது. வாயைப் பொத்தி அடக்கு”
“பாலா அஞ்சலாவின் சத்தத்தைக் காணோம்”
“அவள் தலை கல்லில் மோதி மயங்கிட்டா”
“அப்படியா.. கொஞ்சம் முழிக்கட்டும் அவள். அவளையும் ஒரு கை பார்த்துட்டுப் போகலாம்”
“சரிடா. இப்போ உன் வேலை முடிஞ்சுதா”
“முடிஞ்சிதுடா. டேய் நேசன் என்னடா சகுந்தலாவுடைய அசைவே இல்லையே”
“என்னடா சொல்லுராய் பாலா?”
“டேய் இவள் செத்துட்டா போல. மூச்சே வரக் காணோம்”
“பாலா. இப்ப என்னடா செய்யுறது?”
“பேசாம இவளைப் புளியந்தோப்புக்குள்ளே போட்டு விடலாம்”
“அஞ்சலா வேலையும் முடிந்தவுடன் அவளையும் முடிச்சிட்டு அங்கேயே போட்டு விடலாம்”
“சரி நேசன்”
என் மூக்கில் கையை வைக்கும் உணர்வு ஏற்பட்டது. சிகரட்டுப் புகை வாசத்திலிருந்து பாலாவாகத்தான்

இருக்கும் தெரிந்து கொண்டேன் டக்குனு மூச்சுவிடுவதை மெதுவா அடக்கினேன்.

'டேய் இவள் மூச்சையும் காணோம்டா. நேசன் பார் இவள் தலையில் இருந்து எவ்வளவு ரத்தம் வருது என்று.இப்ப என்னடா பாலா செய்யுறது?'

"ஆ...அங்க பார் ஒரு அஞ்சு கூரு புல்லுக் குத்துக் கரண்டி இருக்கு. அதை எடு"

"இதால் என்னடா செய்றது?"

"புளியந் தோப்புக்குள் கொண்டு போய் அங்கே இங்கே என்று உடம்புல கீறி விட்டால் சிறுத்தைப் புலி விராண்டி செத்துட்டான்னு நினைப்பாங்க."

"சரி பிடி கால் பக்கம்"

இருவரும் சகுந்தலாவைத் தூக்கிப் போகிறார்கள் என்று நினைத்தேன். மெதுவாகக் கண்களைத் திறந்து பார்த்தேன் அவர்கள் சகுந்தலாவைத் தூக்கிக் கொண்டு போவதைப் பார்த்தேன். என்னால் எழுந்திருக்கவே முடியவில்லை. தலையை அசைக்கவே முடியவில்லை.

இருந்தாலும் உடம்பை மெதுவாக இழுத்து இழுத்து பக்கத்தில் உள்ள புதர்களை நோக்கி நகர்ந்தேன். நான் நகர்ந்த அடையாளம் தெரியாமல் இருக்க எனது சல்வார் துண்டால் மண்ணை அழித்துக் கொண்டே நகர்ந்தேன். புதர்களுக்குள் மறைவில் படுத்துக் கொண்டேன்.

அப்போ யாரோ அஞ்சாறு பேர் அந்தப் பக்கம் பேசிக் கொண்டே போவதுபோல் புரிந்தது. உதவி என்று கத்த வாயைத் திறந்தேன் சத்தமே வராமல் மயங்கி விட்டேன்.

மறுபடி கண் முழிப்பு வர ஒரே தாகமாய் இருந்தது.

திரும்பவும் அந்த வெறியன்கள் வரும் பேச்சுக்குரல் கேட்கவே இருந்து காதை மட்டும் கூர்மையாக வைத்து கொண்டே இருந்தேன்.

"டேய் நேசன்– எங்கடா இந்த அஞ்சலா? யாரும் காப்பாத்தி கூட்டிப் போய் இருப்பங்களோ. இங்கேயே இருந்திருந்தால் ரெத்தம் போய் செத்திருப்பாளே. அவள் இங்கிருந்து தானாகப் போய் இருந்தாலும் இரத்தம் வழிந்த மாதிரி அடையாளமே காணவில்லை. என்னடா நடந்திருக்கும்?"

–அப்பத்தான் புரிந்தது, நான் மயங்கி ஒரு நாள் போய்ட்டு என்று–.

"பாலா நேற்றே உடனே வந்து நல்லாப் பார்த்திருந்தால் இங்கு எங்கேயாச்சும் ஒளிஞ்சிருந்தா அகப்பட்டிருப்பா"

ஆனால் அதற்குள்தான் ஆட்கள் யாரோ வந்துட்டாங்களே.

அப்ப அவங்க கப்பாத்தி கொண்டுபோய் இருப்பாங்களோ?

"அப்படி இருந்திருந்தால் இப்போ பரபரப்பா செய்தி வந்திருக்குமே. காலையிலே வந்திருக்கலாம். ஆனால் அதுதான் சகுந்தலையை புலி அடிச்சதுன்னு பொடியை எடுக்க பெரிய பொலீஸ் படையே வந்துச்சே. எப்படி வாரது?"

"சரி வா போவோம்"

கணநேரம் எவரும் வரவே இல்லை. எனக்கோ மயக்கமும் தாகமும் கூடிப்போச்சு. அப்பதான் யாரோ ரெண்டு பேர் சத்தம் கேட்டது.
அது வேறு யாரோன்னு தெரிஞ்சி தண்ணீ தண்ணின்னு கேட்டேன். அப்பதான் யாரோ என்னைத்தூக்கிக் கொண்டு போவதையும் காருக்குள் கிடத்தியதையும் தண்ணி தந்ததையும் உணர்ந்தேன் அதற்குப் பிறகு முழிப்பு வந்து பார்த்தா ஆசுபத்திரியிலே இருக்கிறேன்–'. இவ்வளவும் சொல்லி அவள் களைத்துப் போனாள்.
"உன்னைக் காப்பாத்தினது இந்த பிரதர்தான்". ..என்று கூறி சோதியைக் காட்டினார் எஸ்.பி.
"நன்றி அண்ணே.."
"பரவாயில்லை தங்கச்சி நீ பிழைச்சிட்டாய். அதுவே மகிழ்ச்சி".
எஸ்பி கொன்ஸ்டபிளைக் கூப்பிட்டு,
"இவங்கட பேரண்ட்ஸ்க்கு இன்ஃபோர்ம் கரண்ட. அப்புறம் இந்த செய்தி வெளியிலே இப்போ போகக் கூடாது. நான் சொல்லும் வரை நோ பிரஸ் மீடியா. சோதி இவங்க பேரண்ட்ஸைக் கூப்பிட்டு ரகசியமாக இங்க வரச்சொல்லுங்க"
"சரி சேர்..."
"அஞ்சலா! வீட்டில் அம்மாவுக்கு போன் இருந்தா நம்பர் தா"
சோதி நம்பரை வாங்கி டயல் பண்ணி அஞ்சலா அப்பாவுக்கு கோல் பண்ணினான்
"ஹலோ. ஐயா வணக்கம். நான் இங்கே சோதி பேசுறேன். பதட்டப் படாமல் நான் சொல்றதைக் கேளுங்க. உங்க மகள் பத்திரமா கிடைச்சுட்டா..

“……………………..”

“சத்தமா பேசாதீங்க அய்யா. இது இரகசியமா இருக்கனும். எஸ்பி. அய்யாவோட நான் இங்கே மன்னார் ஆசுப்பத்திரியில் அஞ்சலா பக்கத்தில் இருக்கிறோம். நீங்க யாருக்கும் எந்த விபரமும் சொல்லாமல் இருங்க. எஸ்.பி அய்யா ஜீப் அனுப்புவார். அதில் நேரா எஸ்பி அய்யா அலுவலகம் வாங்க. சரியா?”

இரண்டு கொன்ஸ்டபிள்களை மப்டியில் காவலுக்கு வைத்து விட்டு எஸ்பி புறப்பட்டார். கூடவே சோதியும்.

“சோதி வாங்க. ரோஸ்லின் ஸ்டூடியோ பக்கமாகப் போவோம்”

ரோஸ்லின் ஸ்டூடியோ…. பூட்டி வாசலில் பூட்டு தொங்கியது

“சேர்…ஸ்டூடியோ பூட்டி இருக்கு”

“யெஸ் நான் தான் இன்று காலை ரோஸ்லினை போலிஸ் ஸ்டேஷன் வரச்சொல்லி இருக்கேன். இப்போ ஸ்டேஷன்ல தான் இருப்பா என்று நினைக்கிறேன்.”

எஸ்பி ஸ்டேஷனுக்கு வாக்கி டோக்கியில்கூப்பிட்டார்.

“அந்த பொம்பிளை அங்கதான் இருக்கா”

## 10

நவக்கிரக தோஷங்கள் நீங்க சதுர்கால பைரவருக்கு செவ்வரளி பூவால் 9 வாரங்கள் ஸ்கஸ்ரநாமா அர்ச்சனை செய்ய வேண்டும். குழந்தைப்பேறு கிட்ட தம்பதியர் ஆறு தேய்பிறை அஷ்டமிகளில் விரதம் இருந்து சிவப்பு நிறப் பூக்களால் ஸ்கஸ்ரநாமா அர்ச்சனை செய்ய வேண்டும்.

வறுமை நீங்க வளர்பிறை அஷ்டமிகளில் மாலை நேரத்தில் வில்வம்

மற்றும் வாசனை மலர்களால் அர்ச்சனை செய்து 11 பைரவ தீபங்கள் ஏற்ற வேண்டும். அஷ்டமிகளில் தொடர்ந்து வழிபடவேண்டும். சனி தோஷம் நீங்க பைரவருக்கு 9 சனிக்கிழமைகள் விரதம் இருந்து சிவப்பு நிறப் பூக்களால் அர்ச்சனை செய்து 4 பைரவ தீபங்கள் ஏற்ற வேண்டும்.

**போலிஸ் ஸ்டேஷன்.**

*எஸ் பி அலுவலகம்*

*எஸ்.பி அலுவலகத்தில் சோதி எஸ்பியுடன் முன்னால் அமர்ந்திருந்தான்.*

*எஸ்.பி மேசை பெல் அடித்து கான்ஸ்டபிளைக் கூப்பிட்டு ரோஸ்லினை உள்ளே வரச் சொன்னார்.*

*"சேர் நான் போய்ட்டு அப்புறமா வருகிறேனே."*

*"சோதி நீங்க இருங்க, நோ ப்ரோப்ளம்."*

*ரோஸ்லின் உள்ளே வந்தாள்.*

*"குட் மோர்னிங் சேர்"*

*"குட் மோர்னிங்.. ப்ளீஸ் சிட்"*

*சோதியைப் பார்த்தவள்... அமரத் தயங்கினாள்.*

*"இவர் மிஸ்டர் சோதி. இவர் ஃப்ரண்டுக்கும் என்னுடைய நீஸூக்கும் வெடிங் ஃபிக்ஸ் பண்ணினது. வெடிங் இங்கே சேர்ச் சில்தான் அடுத்த மாதம். உங்க மேக்கப் பத்தி நல்லாச் சொல்றதனால உங்ககிட்ட கேட்கத்தான் கூப்பிட்டேன்"*

*"சேர் வெடிங் எந்த திகதி சேர்?"*

*"ஜூலை டுவெண்டி ஃபிப்த்."*

*"அடுத்தமாதம் 25ம் திகதி வேறு புக்கிங் இல்லை சேர். நான் வந்து நல்லா செய்து தாறன் சேர்."*

*"வெரி குட் உங்க நம்பரை கொடுத்துட்டு போங்க போன் பண்ணிட்டு வறோம். ஆல்பம் ஏதும் இருக்கா?"*

“இருக்கு சேர் கொண்டு வரவில்லை. நான் இப்ப போய் எடுத்துட்டு வரவா?”
“நோ நோ. இப்ப வேண்டாம். நானும் சோதியும் ஈவினிங் 3.00 மணிக்கு வாறது. என்ன சோதி .... ஓகேயா”
“ஓகே ஓகே நான் ஃப்ரீதான் போகலாம் சேர்”
“சரி சேர் நீங்க வாங்க எல்லா அல்பமும் எடுத்து வைக்கிறேன். நான் போய்ட்டு வாரன் சேர்”
“ஓகே மிஸ்ஸிஸ் ரோஸ்லின். சொறி உங்களை கூப்பிட்டு டிஸ்டர்ப் பண்ணிட்டன்”
“அதெல்லாம் ஒண்ணுமில்லை சேர். அப்ப நீங்க ஸ்டூடியோ வாங்க. வாறன் சேர். மிஸ்டர் சோதி வாறன்”
“ஓமோம். நாங்க வந்து சந்திக்கிறோம்”
ரோஸ்லின் போன பின்னர், சோதியை பார்த்து அர்த்தத்தோடு சிரித்தார். சோதியும் பதிலுக்கு புன்னகைத்தான்.
அப்போ கொன்ஸ்டபிள் ஒருவர் வந்து சல்யூட் பண்ணி விட்டு,
“சேர் மார்க்கண்டுவும் அவர் மனைவியும் வந்து விட்டார்கள்”
“வரச் சொல்”
ஒரு 55 வயதுள்ள மனிதரும், 45 வயது மதிக்கத்தக்க ஒரு அம்மாவும் வந்தார்கள்.
“வாங்க. உங்க டோட்டர் கிடைச்சுட்டாங்க ஹொஸ்பிட்டலில் ட்ரீட் மெண்ட் நடக்குது. நீங்க போய் பார்க்கலாம். நீங்க வந்தது, மகள் கிடைச்சுட்டாள் என்று யாருக்கும் சொன்னீர்களா?”

“இல்லை அய்யா ஒருவருக்கும் தெரியாது”.
“குட். இப்ப நீங்க– சோதியைக் காட்டி – இவரோட ஹொஸ்பிடல் போங்க. வெளியிலே உட்காருங்க இவர் வந்து கூட்டிக் கொண்டு போவார்”
“சரி ஐயா”
“அப்புறம், ஒரு ரிக்வெஸ்ட். உங்க டோட்டர்..சோதி ஐயா வீட்டில் கொஞ்சநாள் இருக்கட்டும். காரில் போகும் போது இவர் விபரம் சொல்லுவார்”
“சரி ஐயா நீங்க என்ன சொல்லுறீங்களோ அப்படியே செய்கிறோம்”
“சரி போய் உட்காருங்க. இவர் வருவார்” என்று சொல்லியபடி மேஜை பெல்லை அடித்தார். கொன்ஸ்டபிள் வந்தார்,
வெளியே யாரும் வெயிட் பண்றாங்களா?
இல்லை சேர்.
பிறகு சோதியின் பக்கம் திரும்பி,
“சோதி உங்களுக்கு எந்த ப்ரோப்ளமும் இல்லையே, அவுங்க உங்களோடு இருப்பது ஓகேயா”
“இல்லை சேர். அந்த அஞ்சலாவைக் கொஞ்சநாள் யார் கண்ணிலும் படாமல் இருக்க, என் வீட்டில தங்க வைக்கவேண்டும் என்று நானே உங்களிட்ட சொல்ல இருந்தேன்”
“வெரி குட் சோதி . கொஞ்சம் இருங்க.”
எஸ்பி போனை எடுத்து ‘ஐ.டி.’ செக்ஷன் அதிகாரியை வரச் சொன்னார்.
வந்து சல்யூட் போட்டு நின்ற அந்த அதிகாரியிடம்
“மிஸ்டர் அமிர். இந்த நம்பரை ட்ராக் பண்ணுங்க என்னென்ன நம்பர்களுக்கு கூப்பிட்டு யாரிடம்

பேசினாலும் ரெக்கோர்ட் பண்ணுங்க. சந்தேகப் படுற நம்பர்களானால் அதையும் ட்ராக் பண்ணுங்க ரெக்கோர்ட் பண்ணுங்க"

"ஓகே சேர்" சல்யூட் வைத்துவிட்டு அவர் போனபின்,

"சோதி நீங்க போய்ட்டு லன்ச் எடுத்துட்டு டூ தேர்ட்டிக்கு வாங்க"

நேரம் பகல் 12.00.மணி.

காரில் சோதியுடன் அஞ்சலாவின் பெற்றோர்.

சோதி மாமாவுக்கு அழைப்பு ஏற்படுத்தினான்.

"மாமா. எங்கே இருக்கீங்க. நான் இங்கே ராதாவின் வீட்டில் இருக்கிறேன்"

"மாமா நான் மீண்டும் ஆஸ்பத்திரிக்குத்தான் போகிறேன். கொஞ்சம் லேட்டாகும். நீங்க காரில் போங்க. அரை மணி நேரத்தில் வந்து காரை விடுகிறேன்"

"பரவாயில்லை மாப்பிள்ளை. இங்கே பரந்தாமனோடு அவர் வேனில் போகிறேன். அவர் அடம்பனில் வேலை இருக்காம்..அது சரி உங்க லஞ்ச் என்ன மாதிரி?"

"நான் சமாளிச்சுக்கிறேன். நீங்க போய்ட்டு வாங்க.

சோதி போனை அணைத்து விட்டு, பெரியவரிடம் பேச்சுக் கொடுக்க ஆரம்பித்தான்

"அய்யா, கவலைப் படாதீங்க. உங்க மகள் நல்லா பேச முடியுது.. இன்னிக்கே டிஸ்சார்ஜ் பண்ணினாலும் பண்ணுவாங்க. நான் கூட்டிக் கொண்டு போய் எங்க வீட்டில் தங்க வைக்கிறேன். என் அப்பா அம்மா மாமா மாமி என் மனைவி எல்லோரும் நல்லாப்பார்த்துக் கொள்ளுவாங்க.

“தம்பி நீங்க யார் என்று சொல்லவில்லையே. நீங்க போலீஸா?”
“இல்லை ஐயா, நான் கராஜ் ராசநாயகத்தோட மகன் சோதி. ஆண்டாங்குளத்தில் நம்ம கராஜ் இருக்கு. என் மாமா மில்முதலாளி”
“தம்பி ராசனோட மகன் சோதியா நீங்க. உங்களைப் பற்றி நிறைய கேள்விப் பட்டிருக்கோம்”
“என்ன கேள்விப் பட்டீங்க?”
“நீங்க கை வைச்சா ஓடாத டிராக்டரும் ஓடும் என்று சொல்லுவாங்க. மன்னாரிலே கராஜ் வைச்சிருந்தீங்களே”
“இப்போ ஆண்டாங்குளத்தில் இருக்கிறோம்”
சோதி சுருக்கமாக அஞ்சலா சகுந்தலா கதையைச் சொல்லி அஞ்சலாவைக் காப்பாற்றிய விதத்தையும் சொல்லி முடித்தான்.
அதைக்கேட்ட தாய் அழத் தொடங்கினாள்.
“அடிப்பாவி. இவ்வளவு கமுக்கமாய் இருத்திருக்காளே. நீங்க கடவுள் போல் மகளைக் காப்பாற்றி தந்து இருக்கீங்க. உங்க குடும்பம் நல்லா இருக்கனும்”
“அம்மா அழாதீங்க, மகளைப் பார்த்ததும் கோபத்தையும் அழுகையையும் காட்டாமல் தயவு செய்து ஆதரவாக அவளுடன் பேசுங்க”
“சரிங்க தம்பி”
ஆஸ்பத்திரிக்கு வந்தனர்.
“வாங்கம்மா. அழுது பிரண்டு ஆர்ப்பாட்டம் பண்ணாமல் இயல்பா வாங்க”
“தாயையும் தகப்பனையும் கண்டதும் அஞ்சலா “ஓ” வென அழ ஆரம்பித்து விட்டாள்.

“அம்மா என்னை மன்னித்து விடுங்கள் அப்பா என்னை மன்னித்து விடுங்கள். நான் தப்பு செய்துவிட்டேன்”

மார்க்கண்டு சொன்னார்.

“அஞ்சலா அழாதே ... எது நடக்க இருக்கோ அதுதான் நடக்கும். இதில் யாரும் யாரையும் தப்பு சொல்லி ஏதும் நடக்கப் போவதில்லை.”

“ஓம் அஞ்சலா அப்பா சொல்லுறதுதான் சரி. நீ ஏன் மகளே அழனும். அதுதான் ஆண்டவன் உன்னைப் பத்திரமா கொண்டு வந்து சேர்த்திருக்காரே. இந்த அண்ணனை ஆண்டவன் அனுப்பி உன்னைக் காப்பாத்த வச்சிருக்காரே”

சோதி அவர்களை இருக்கச் சொல்லி விட்டு, டொக்டரைப் பார்க்க அவர் அறைக்குப் போனான்.

“வாங்க மிஸ்டர் சோதி. எஸ் பி சேர் வந்திருக்காரா?”

“இல்லை டொக்டர் ஏன் டொக்டர்?”

“இப்பவே நீங்கள் அஞ்சலாவைக் கூட்டிப் போகலாம் .

“ஓ! அப்படியா நல்லது டொக்டர்.அஞ்சலாவுடைய பெற்றோரும் வந்திருட்டாங்க. ஆனால் டொக்டர் பின்னேரம் அழைத்துப் போக நீங்க டிஸ்சார்ஜ் ஷீட் கொடுக்க ஏற்பாடு பண்ணுங்க. நான் எஸ்.பி சேகரிடம் சொல்லி உங்களிடம் பேசச் சொல்கிறேன்”

“அதுக்கென்ன சோதி.அப்படியே செய்யலாம்”

“டொக்டர் உங்களிடம் ஒன்று கேட்டுக் கொள்ளலாமா?”

“என்ன மிஸ்டர் சோதி.. சொல்லுங்க”

“அஞ்சிலேருந்து ஆறுமணிக்குள்ள போறதுபற்றித்தான் யோசிக்கிறன். டொக்டர் நான் கொஞ்சம் இருட்ட

ஆரம்பிக்க 8.00 மணிபோல் அஞ்சலாவை அழைத்துப் போக அனுமதி கொடுப்பீங்களா?"

"நிச்சயமாக அரேஞ் செய்றன். நீங்க 8.00 மணிக்கு வாங்க"

"தாங்க் யூ டொக்டர்.."

சோதி மீண்டும் அஞ்சலா படுத்திருக்கும் அறைக்குச் சென்று, அவள் அப்பாவிடம்

"அய்யா நீங்க ரெண்டுபேரும் சாப்பிட ஏதும் வாங்கிட்டு வாறன். சாப்பிட்டு இருங்க. சரியா"

அஞ்சலாவைப் பார்த்து.

"என்ன அஞ்சலா? சந்தோஷமா? நீ சாப்பிட ஏதும் கொண்டு வரட்டுமா?"

"வேண்டாம் அண்ணே. நான் சாப்பிட்டு விட்டேன்"

சோதி அவர்களுக்கு சாப்பாடு வாங்கிக் கொடுத்து விட்டு ராதா வீட்டுக்குப் போனான்.

மாமாவைப் பார்க்க ராதா வீட்டுக்குக் கிளம்பினான். போகிற வழியிலேயே சுவாதியை அழைத்து நடந்த எல்லாவற்றையும் சொல்லி விட்டு இரவு அஞ்சலாவை அழைத்து வரப் போவதைப்பற்றியும் சொன்னான்.

சுவாதி – "அத்தான் சாப்பிட்டீங்களா?"

"நான் லைட்டா பிஸ்கட்டும் பழமும் சாப்பிட்டேன். பரம் அங்கிள் வீட்டில போய்,மாமாவைப் பார்க்கப் போகிறேன். போய்ட்டு சாப்பிட்டு விட்டு மீண்டும் எஸ்.பியைப் பார்க்கப் போகனும்"

சுவாதி – "சரி அத்தான் பார்த்து கவனமா அஞ்சலாவைக்கூட்டி வாங்க. அப்படியே அவள் அப்பா அம்மாவையும் கூட்டி வாங்க. இங்கே அவுங்க கொஞ்ச நாள் தங்கிட்டு நானாட்டான் போகட்டும்"

"சரி சுவாதி பிறகு கூப்பிடுகிறேன்"

பரம் அங்கிள்வீட்டில் மாமாவைப் பார்த்து நடந்தவற்றைச் சுருக்கமாகச் சொல்லி முடித்துவிட்டு,

"மாமா பரம் அங்கிள் எங்கே?"

"அவர் டவுன் பக்கம் போய் இருக்கார் அவர் வந்தவுடன் ரெண்டு பேரும் வீட்டுக்குக் கிளம்பி விடுவோம்"

அப்போ பரந்தாமன் மனைவி அங்கு வந்தாள்

"அட.. சோதித்தம்பி.. வாங்க சாப்பிட்டுக் கிளம்புங்க"

"பரவாயில்லை அன்ரி...கொஞ்சம் ஏர்ஜண்ட் வேலை இருக்கு, பிறகு ஆறுதலாக வந்து சாப்பிடுறேனே. அங்கிள்ட்ட சொல்லுங்க அன்ரி"

மீண்டும் அவன் எஸ் பி அலுவலகம் சென்றான்.

"வாங்க சோதி. உங்களைத்தான் வெயிட் பண்ணிக் கொண்டு இருக்கன். சரி ஹொஸ்பிடலில் அந்த கேர்ல் எப்படி?".

"அவளை பின்னேரம் டிஸ்சார்ஜ் பண்ணலாம் என்று டொக்டர் சொன்னார்" .

"சேர் ஏதும் பொலீஸ் தரப்பு ஃபோர்மாலிடி ஏதும் இருக்கா டிஸ்சார்ஜ் பண்ண?"

"ஒண்டுமில்லை சோதி நீங்க கூட்டிப் போகலாம்.அப்புறம் சோதி ஒரு விஷயம்"

"என்ன சேர்.?"

"இதைக் கேளுங்க"– என்று விட்டு, கொம்பியூட்டரில் ஒன்றைக் க்ளிக் பண்ணிவிட்டு, ஸ்பீக்கரை ஆன் பண்ணினார்.

–'ரோஸ்லின் அக்கா. எங்கே ஸ்டூடியோ பூட்டிட்டு எங்கே போனீங்க"

—'நேசன்  நீ ஏன் தேடினாய். நான் பொலீஸ் ஸ்டேஷன் போய் இருந்தேன்'

—'ஏன் எங்களைக் காட்டிக் கொடுக்கவா?"

—'இல்லை நேசன். எஸ்.பி சேர் அவர் மருமகள் கலியாணத்துக்கு மேக்கப் விஷயமாய் வரச் சொல்லி இருந்தார்'

—'எப்பயாம் கலியாணம்?'

—'அடுத்தமாசம் இருபத்தைந்து. சரி நீ எதுக்கு என்னைத்தேடி வந்தாய்?'

—'நான் வரேல்லை. என்ர ஃப்ரண்டுதான் வந்தான் ஒரு போட்டோ வாங்க. மூன்று மணிக்கு வருவான் திரும்ப.,

—'மூன்று மணிக்கு நான் எஸ் பி சேர்  மேக்கப் அல்பம் பார்க்க ஸ்டூடியோ வரார். ஒரு மணிக்கு வரச் சொல்லு. சரியா?'

—'சரி அக்கா'—

வியப்பாக எஸ் பியின் முகத்தைப் பார்த்தான்.

"சோதி ரோஸ்லின் எங்களுக்கு தந்த நம்பரில இந்தக் கோல் வந்தில்லை. இது ரோஸ்லினின் இன்னொரு நம்பரில வந்தது. அந்த மனுசிட்ட என்னமோ தப்பு இருக்கு. அதுதான் எங்களுக்கு ஒரு நம்பர் கொடுத்திருக்கா, மற்ற நம்பரை நம்ம ஆட்கள் மோப்பம் பிடிச்சுட்டாங்க"

"அப்புறம் ஒரு மணிக்கு அங்கு வந்த பொடியனை நைஸா அமுக்கிட்டோம். விசாரிக்கச் சொல்லி இருக்கன். நாங்க எதுக்கும் ரோஸ்லினிட்ட போவம். கார் இங்கேயே ஸ்டேஷன்ல நிற்கட்டும் நம்ம ஜீப்பிலே போறம்"

"ஓகே சேர்"

3.00 மணி,
ரோஸ்லின் ஸ்டூடியோ.
ரோஸ்லின் பரபரப்பாக வரவேற்றாள்.
"மிஸ்ஸஸ் ரோஸ்லின் நீங்க அல்பங்களைக் கொண்டு வாங்க.."
எஸ் பி அல்பங்களை சோதியைப்பார்க்கச் சொல்லி விட்டு கண்ணைச் சிமிட்டினார்.
அவன் புரிந்தவன் போல் தலையாட்டிவிட்டு ஆல்பங்களைப் புரட்ட ஆரம்பித்தான்.
எஸ் பி தன் போனில் இருந்து ஒரு நம்பரை டயல் செய்யவே,
ரோஸ்லின் மேசையில் இருந்த போன் அடித்தது.
"ரோஸ்லின் உங்க போன் அடிக்குது எடுத்துப் பேசுங்க. நாங்க அல்பம் பார்க்கிறோம்"
ரோஸ்லின்–
"எக்ஸ்கியூஸ் மி சேர்" என்று சொல்லிக் கொண்டே போனுடன் இன்னொரு ரூமுக்குள் போனாள்.
"ஹலோ யார் நேசனா? எத்தன நம்பர்டா உனக்கு? பிரேம்ட்ட போட்டோ கொடுத்து விட்டேன். நேசன் கவனம்டா. எனக்கு உன்னோட பழைய ஷேர் இன்னும் பாக்கி இருக்கு. சீக்கிரம் செட்டில் பண்ணப் பார். சரி இப்போ எதுக்கு எடுத்தாய்?"
போன் கட்டாகி விட்டது.
ரூமை விட்டு வெளியே வர வாசலில்,– எஸ் பி வழியை மறித்துக் கொண்டு நிற்பதைப் பார்த்து,– வேர்த்து வியர்த்து விட்டாள்.

“என்ன மிஸ்ஸிஸ் ரோஸ்லின் போன் பேசியாச்சா?”
“ஓ.. ஓம்.. சேர்”
“மிச்சம் இம்போர்ட்டண்ட் கோலா?”
“ஓ... ஓம் சேர்”
“சரி வாங்க போட்டோ பார்த்தோம் செலக்ட் பண்ணியாச்சு”
“ஓகே சேர். காட்டுங்க”
சோதி சுந்தரியுடைய போட்டோவையும் அஞ்சலா சகுந்தலா போட்டோக்களையும் எடுத்து மேசையில் போட்டான். அவற்றைப் பார்த்ததும்.,
ரோஸ்லின் முகம் குப்பென வியர்க்க ஆரம்பித்தது..
“ஓகே ரோஸ்லின் இந்த நம்பர் யாரோடது?”– என்ற படியே அவர் டயல் பண்ணின நம்பரை போனில் காட்டினார்.
இன்னும் வியர்க்க ஆரம்பித்தது அவளுக்கு.
“இது….. இது யாரோடது தெரியவில்லை... சேர்”.
“அப்படியா?” என்று சொல்லிவிட்டு டயல் பட்டனை அமுக்கினார். ரோஸ்லின் கையில் இருந்த போன் அடிக்க ஆரம்பித்தது.
“உம்.. எடுத்துப் பேசுங்க...”
“சோதி கொன்ஸ்டபிள்களை கூப்பிடுங்க”
“சேர்.. .. சேர்.. எல்லாம் சொல்லி விடுகிறேன் சேர்”.
“சொல்லுங்க யார் நேசன்?”
“நேசன் .. என்னோட ஃப்ரண்ட் மகன் சேர்”
“உன் ஃப்ரண்ட் யார்?”
“அமலநாதன். அவனும் நானும் ஸ்கூல் லேர்ந்து ஒன்றாப் படிச்சோம்.

என் ஸ்டூடியோவில அவன்ர மகனுக்கு வேலை ஏதாவது போட்டுக் கொடுக்கச் சொன்னான்.
அவனுக்கு போட்டோக்ராஃபிக் கொம்பியூட்டர் டிசைன் எல்லாம் தெரியும் என்றான். நானும் என் ஸ்டூடியோவில் படம் பிடிக்கவும் போட்டோ சொப்பில் பேக் க்ரௌண்ட் டிசைன் போடவும் அவனுக்கு வேலை கொடுத்தேன். அதற்காக நிறைய செலவு செய்து நவீன கமரா கொம்பியூட்டர் என்று வாங்கிப் போட்டேன்.
நல்லா நாலு வருஷம் என்கூட வேலை செய்து கொண்டிருந்தான். எனக்கும் பிஸினஸ் நல்லாவே போனது. என் ஹஸ்பண்ட் பஹ்ரைனில் வேலை செய்து கொண்டிருந்ததார். போன வருடம் அவர் ஒரு அக்ஸிடெண்டில் செத்துப் போனார். அவர் போன பிறகு ரெண்டு மாசம் நான் எந்த மேக்கப்புக்கும் போக வில்லை.
ரெண்டு மாசத்துக்குப் பிறகு மேக்கப் ஸ்டூடியோவில் இருக்கும் கொம்பியூட்டரை ஓப்பின் பண்ணிய போது நான் அதிர்ச்சி அடைந்தேன். திரையில் என்படம் ... அதைப் பார்க்க நானே கூச்சப் பட்டேன். ஏனென்றால் அந்தப் படத்தில் நான் உடுப்பே இல்லாமல் இருந்தது எனக்குப் பேரதிர்ச்சி கொடுத்தது.
அப்போ நேசன் உள்ளே வரவே கம்பியூட்டர் திரையை அணைத்தேன். என் முகம் வேர்த்துப்போய் இருந்தது.
அப்போ நேசன் சொன்னது இன்னும் அதிர்ச்சியும் ஆத்திரமும் வந்தது.
–'என்ன ரோஸ்லின்..( அக்கா என்று அழைப்பவன்) ரோஸ்லின் என்ன படம் அழகாக இருக்கா?
டேய் இது உன் வேலையா?

“என் வேலையேதான். இன்னும் நிறைய படங்கள் இருக்குப் பார்க்கிறாயா?.. டேய் மரியாதையாக இந்த இடத்தை விட்டுப்போய் விடு. இனி உனக்கு இங்கே வேலை கிடையாது”.

“என்ன எனக்கு வேலை கிடையாதா? என்னை மட்டும் வெளியே அனுப்பிட்டு நீ நிம்மதியாய் இருப்பாயா? எங்கே அனுப்பு பாப்பம்? அப்புறம் அடுத்த செகண்டே உன் அழகான படங்கள் ஃபேஸ் புக் வாட்ஸ் அப் எல்லாத்திலேயும் ஒரு பட்டனில் அனுப்பி விடுகிறேன்.

–நான் இடிந்து போனேன்.

“ஏண்டா எனக்கு இப்படி துரோகம் பண்ணிட்டு எப்படிப் பேசுறாய்?”

“வேற எப்படி பேசுறது. உனக்கு இனி நான் தான் துணை. பொஸ்ஸும் நானே. உன் புருஷனும் இப்ப இல்லை. உன்னை யார் பார்க்க இருக்காங்க, இந்தாப் பார். ரேஸ்லின். நான் சொல்ற மாதிரி நடந்து கொண்டால் உன் படங்களை இப்பவே டெலீட் பண்ணிவிடுகிறேன். உனக்கும் லக்ஷக் கணக்கிலே காசு வரும்’–

அன்டைலிருந்து என்னைப் பயமுறுத்தி, பயமுறுத்தி என் ஸ்டூடியோவிற்கு வரும் அழகான பெண்களின் படங்களையும் வீடியோக்களையும் மாப்பிங் செய்து கொழும்பில் கொண்டு போய் லக்ஷக்கணக்கில் காசு கொண்டு வருவான்.

எனக்கும் ஒரு ஷேர் தரத் தொடங்கினான். நானும் நாளாக நாளாக பணத்தில் மோகம் கொண்டு விட்டேன்.

சில மாதங்களிலே நேசனும் பாலாவும் சேர்ந்து பெண்களை ஏமாற்றி அனுபவிக்கிற விதத்தில் நடந்து கொள்ள ஆரம்பித்து விட்டதோடல்லாமல் ஒன்றிரண்டு பெண்கள் அவமானத்துக்கு அஞ்சி தற்கொலையும் செய்து கொண்டதை கடந்த சில மாதங்களாக தெரிந்து கொண்டேன்.

சேர். என்னுடைய பணத்தாசையால் எனக்கே நான் குழி பறித்துக் கொண்டேன்.

நான் கோர்ட்டில் எல்லா உண்மைகளையும் சொல்லிவிடுகிறேன் சேர்."

"சரி . இப்போ நீ நான் சொல்வது போல் செய்"

"உன்னை நாங்க ஹௌஸ் அரெஸ்ட் பண்ணி விடுகிறேன். ஆனால் நீ நேசன் பாலாவின் இருப்பிடங்களை தெரியப்படுத்த உனக்கு அவன்களிட்ட இருந்து வரும் போன் கோல்கள் எங்களுக்கு, மிகவும் ஹெல்ப் ஆக இருக்கும் நீ எதுவும் நடக்காத மாதிரி அவன்களுக்குப் பேசனும். நீ பொலீஸுக்கு உதவி செய்தா உனக்கு தண்டனை இல்லை.

உன்னை இப்ப விட்டு விட்டுப் போகிறோம். நீ எங்கும் தப்பிச்சுப் போக நினைக்காதே. போலீஸ் உன்னை வாட்ச் பண்ணிக்கொண்டே இருக்கும் சரியா?"

"இல்லை சேர் நான் எங்கும் போக மாட்டேன் நேசனையும் பாலாவையும் பிடிக்க நான் உதவி செய்கிறேன் சேர்"

"அமலநாதனோட எல்லா கொண்டக்ட் நம்பர்களையும் கொடுக்கனும் இப்ப."

அவள் அமலநாதனோட போன் நம்பர்கள் மூன்றைக் கொடுத்தாள்.

“வாங்க சோதி நாங்க போவம்”
ஜீப்பில் சோதியிடம் எஸ் பி,
“சோதி பெரிய கேங்க்கே இருக்கு. கூண்டோடு பிடிக்கவேணும். இப்ப ரோஸ்லினுக்கு வரும் போன் கோல்கள் ட்ராக் பண்ணினால் அந்த குருப்புகளையே அமுக்கி விடலாம், சோதி நீங்க வீட்டுக்குப் போங்க நாளைக்கு நான் போன் பண்ணுறன்.”
“சரி சேர் சந்திப்போம்”

**இரவு 8.00 மணி**
ஆண்டாங்குளத்தில் சோதியின் வீட்டின் வாசல்.
காரில் இருந்து கிருஷ்ணா சோதியுடன் அஞ்சலா தேவியும் அவள் பெற்றோரும் இறங்கினர்.
மார்க்கண்டுவைப் பார்த்த ஜெயதாசன்., நல்லா உற்றுப் பார்த்துக் கொண்டிருந்தார்.
“நீர் மார்க்கண்டுதானே?” என்றார் அவரைப்பார்த்து.
“ஓமோம், மார்க்கண்டுதான். நீர் ....?”
“நான்தான் ஜெயதாசன்”.
“அடடடா... நம்ம ஜெயா... சா.. எவ்ளோ வருஷம். நாம சந்திச்சு. அப்ப சோதித் தம்பி...?”
“எங்க மருமகன் தான். நம்ம ராசநாயகத்தோட மகன் தானப்பா..வா மார்க்கண்டு... நீ இப்ப என்ன செய்யுறாய்”
“நான் யாழ்ப்பாணம் கிளிநொச்சி வவுனியா என்று பள்ளிக்கூட வாத்தியாரா இருந்து ப்ரமோஷன் கிடைச்சு நானாட்டான் ஸ்கூலிலேயே பத்து வருஷம் பிரின்ஸிபலாக இருந்து போன டிசம்பரிலதான் ரிடையர் பண்ணினேன்”

“ஓ அப்படியா சந்தோஷம் வாங்க .. முதலில் மூன்று பேரும் குளிச்சு சாப்பிடுங்க அப்புறம் பேசுவோம்”
கீதா அஞ்சலாவையும் அவள் அம்மாவையும் உள்ளே அழைத்துச் சென்றாள்.
வாசல் திண்ணையில் ஜெயதாசன் கிருஷ்ணா சோதி மார்க்கண்டு நால்வரும் பேசிக் கொண்டிருக்க
சுவாதி ராதா ஞானம் பரந்தாமன் அங்கிள் நால்வரும் வேனில் வந்து இறங்கினர்.
“என்ன ராதா இன்றைக்கு ஓவர் டைமா?”
“கிருஷ்ணா கிண்டலாகக் கேட்க”
“இல்லை அத்தான் நாங்க நாலு பேரும் நம்ம புது வீட்டுக்குப் போய்ட்டு வருகிறோம். இன்றைக்குப் பின்னேரம் அஞ்சு மணிக்கு மேல்தான் கிணற்றுக்கு மோட்டார் கனெக்ஷன் செய்து முடிச்சாங்க. போய் செக் பண்ணிட்டு அப்படியே கொஞ்சநேரம் பேசிட்டு வாறம்”
“ஓ அப்படியா சரி. வாங்க. எல்லோரும் சாப்பிடலாம். ஆங்.. பரம்.. நம்ம மார்க்கண்டுவை ஞாபகம் இருக்கா?”– ஜெயதாசன் மார்க்கண்டுவைக் காட்டிக் கேட்டார்.
“அட .. மார்க்கண்டே.... நீர் .. ஆள் அடையாளமே மாறிட்டு”
“நீர் மட்டும் என்ன? பரம் உமக்கும்தான் கிழடுதட்டி ஆளடையாளமே தெரியவில்லை. கடவுள் எங்களை மீண்டும் சந்திக்க வைத்திருக்கார்.அவருக்கு நன்றி”
“சரி சரி 9.00 மணியாகுது எல்லோரும் சாப்பிடலாம் வாங்க...” கீதா கூப்பிட்டாள்.

அன்று இரவு சுவாதியும் சோதியும் நீண்ட நேரம் பேசிக் கொண்டிருந்து விட்டு உறங்கினர்.

மறுநாள் காலை 9.00 மணி போல் கராஜுக்குப்போய் வேலைகளைக் கவனித்துக் கொண்டிருந்தான்.

நேரம் 10.00 மணி. அப்போது ஞானம் சோதியிடம் வந்தான்.

"அத்தான் உங்களையும் அக்காவையும் அப்பா கூட்டிக் கொண்டு வரச் சொன்னார்."

வீட்டின் வாசலில் புது கிரே கலர் ஜீப் ஒன்று நிறுத்தப் பட்டிருந்தது. ஜெயதாசன் கோர்ட் சூட்டுடன் காணப்பட்ட ஒருவரிடம் பேசிக் கொண்டிருந்தார்.

சோதியைக் காட்டி ,

"இவர் தான் சிவசோதி. இவருக்குத்தான் இந்த ஜீப் " – என்று அந்த ஆளிடம் சொல்லிக் கொண்டிருந்தார்.

அவர் சோதியின் கைகளைக் குலுக்கிக் கொண்டார் சுவாதியிடம் கைகளைக் கூப்பி வணக்கம் சொல்லிக் கொண்டார்.

"உங்களுக்கான லேட்டஸ்ட் மாடல் மகிந்திரா ஜீப் இது. இதோ கீ" என்று ஜீப்பிற்குரிய சாவி போன்ற ரிமோர்ட்டை கொடுத்தார்,

சோதி அதை வாங்கி சுவாதியின் கைகளில் கொடுத்தான்.

"ஓகே நான் புறப்படுகிறேன்" என்று அவர் புறப்பட்டார்.

சோதியும் சுவாதியும் சாவியை வைரவரிடம் சென்று அங்கு வைத்து கும்பிட்டு விட்டு, ஜெயதாசனிடம் வந்தனர்.

“மாமா கேதீச்சரம் போய்ட்டு ஜீப்புக்கு பூசை போட்டுக் கும்பிட்டு வருகிறோம்.”
“அத்தான் ராதாவையும் அழைத்துப் போவோமா?”
“ஞானம் நீயும் வா. போய்ட்டு வந்துவிட்டு நீ சகுந்தலாவின் அப்பா அம்மாவை அவர்கள் வீட்டில் விட்டு வரவேண்டும்”
“இல்லை மாப்பிள்ளை அவர்கள் இன்னும் கொஞ்ச நாள் நிற்பார்கள்.”
“அப்படியா. சரி மாமா”
அவர்கள் கேதீச்சரம் போன பிறகு ,
திண்ணையில் ஜெயதாசன், கீதா, ராசநாயகம், கற்பகாம்மாள், மார்க்கண்டு, சிந்தாமணி ஆகியோர் அமர்ந்திருந்தனர்.
அஞ்சலா உள்ளே தூங்கிக் கொண்டிருந்தாள்.
ஜெயதாசன் பேச ஆரம்பித்தார்,
“ராசாண்ணே இன்று நல்ல நாள். ராகுகாலம் முடிஞ்சிட்டா?”
“அது 12.00க்குப் பிறகுதான். நல்ல நேரம் தான் இப்போ. அதுவும் புதன் கிழமை..”
“ராசாண்ணே நீங்க சொல்லுங்க..”
“மார்க்கண்டண்ணே. உங்கட மகளை ஜெயதாசன் கீதா மகன் ஞானத்துக்கு கலியாணம் செய்து வைக்க வேண்டும் என்று நாங்க சொல்ல வருகிறோம்”
மார்க்கண்டு தம்பதிகள் முகத்தில் மலர்ச்சி.
“ராசாண்ணே, அவர்களோட விருப்பம்தான் எமக்கும் இரட்டிப்பு மகிழ்ச்சி. ஆனாலும் ஞானம் தம்பியின் விருப்பம் என்ன வென்று தெரிந்து கொள்ள வேண்டாமா?..”

“மார்க்கண்டு உங்க மகளிட்ட ஆறுதலாகக் கேட்டு சொல்லுங்க. எங்கட மகனிடம் விருப்பத்தைக் கேட்டுச் சொல்லுறோம் சரியா?”

அப்போ ஜெயாவின் போன் ஒலிக்கவே போனைப் பார்த்து, “மாப்பிள்ளை கூப்பிடுகிறார்” என்றார்.

காதில் போனை ஒட்டிக் கொண்டார்.

“சொல்லுங்க மாப்பிள்ளை”

“…………….”

“ஞானமே சொன்னானா?”

“……………….”

“கீதா , என்னங்க… ஞானம்…. ஸ்பீக்கரில்போடுங்க”

ஸ்பீக்கரை ஓன் பண்ணினார் ஜெயம்

“ மாமா.. கேட்குதா?”

“கேட்குது மாப்பிள்ளை சொல்லுங்க..”

“மாமா ஞானம் எங்களிடம் இப்பத்தான் ஒரு விஷயத்தை சொன்னான். அஞ்சலாவை தனக்கு கலியாணம் செய்து வைக்க அப்பாவிடம் பேசும்படி சொல்கிறான். அவனும் அஞ்சலாவும் மன்னார் சித்தி விநாயகர் கல்லூரியில் படிச்சிருக்காங்க. இவன் 9ம் வகுப்பு அஞ்சலா 7 வகுப்பும் படிச்சதாம். அதோடு என்னவோ அஞ்சலாவுக்குக் காலையிலே தலையில் பாண்டேஜ் ஞானம்தான் கட்டிவிட்டான். என்னமோ இவருக்கு அவுகளைப் பார்த்ததும் பிடிச்சுப் போச்சாம். அதான் அக்கா அத்தானிடம் பேசி அப்பாவிடமும் அம்மாவிடமும் சொல்லச் சொன்னார் உங்க செல்ல மகன்.”

“சரி மாப்பிள்ளை சொல்லீட்டிங்கதானே கேதீச்சரத்தானயும் கௌரியையும் நல்லாக் கும்பிட்டு

வரச் சொல்லுங்க. அப்பா அம்மா நல்ல செய்தி சொல்லுறம்."

"சரி மாமா. போய்ட்டு வந்து விடுகிறோம்"

"மார்க்கண்டு. இப்போ சந்தோஷம் தானே. எங்க மகன் விருப்பம் தெரிஞ்சு போச்சு. நாங்கள் இங்கே பேசும் போது அவனும் அக்கா அத்தானிடம் மனசு விட்டுப் பேசி இருக்கான். இது தெய்வத்தின் விருப்பம் மாதிரி எனக்குப் புரியுது. நீங்க உங்க மகளிடம் பிறகு பேசுங்க"

அப்போ உள்ளே கதவருகில் நிழலாட ஜெயதாசன் மார்க்கண்டுவிடம் கண் காட்டி ஜாடை பண்ணினார்.

உடனே மார்க்கண்டு தன் மனைவியிடம் உள்ளே போய்ப் பார்க்கச் சொன்னார்.

உள்ளே போன சிந்தாமணி சிறிது நேரத்தின் பின் திரும்பி வந்தாள்.

"என்னவாம் மகள்?" கேட்ட மார்க்கண்டுவிடம், சிந்தாமணி..

"இப்போ எதற்கு தனக்கு கலியாணப் பேச்சு, தான் அதிர்ச்சியில் இருந்து இன்னும் மீளவில்லையாம் ஒரு கிழமை கழித்து எங்கடை விருப்பம் எதுவோ அதன் படி பேசச் சொன்னா"

"அப்புறம் என்ன அடுத்தமாசமே நல்ல நாள் பார்த்து மார்க்கண்டு வீட்டுக்கு நாங்க வருகிறோமே. நீ என்ன சொல்லுறாய் கீதா"

"சரிங்க. அப்படியே செய்து விடுவோம்"

"ராசாண்ணே நீங்கதான் எல்லாத்தையும் நல்லா நடத்தித் தரணும்."

"கண்டிப்பா. எங்களுடைய பாக்கியம்"

“கீதா போய் பால் பாயசம் வைச்சு வடையும் சுட்டு விடு”

“நானும் வருகிறேன் கீதா” என்றபடியே கற்பகம்மாவும் கீதாவுடன் சேர்ந்து கொண்டாள்.

கோவிலுக்குப் போய்ட்டு வந்த பின்பு சோதிக்கும் மகளுக்கும் விபரங்களைத் தெரிவித்தார் ஜெயதாசன். ஞானம் வெட்கத்தால் வீட்டுக்குள் வராமல் மில் பக்கம் போய் விட்டான்.

சுவாதியும் ராதாவும் உள்ளே வந்து அஞ்சலாவிடம் பேச்சுக் கொடுத்தனர்.

“அஞ்சலா. இப்போ தலையில் இன்னும் வலி இருக்கா?”

“இல்லை அக்கா. கொஞ்சம் பரவாயில்லாமல் இருக்கு”

“காலையிலே ஞானம் பாண்டேஜை இறுக்கிக் கட்டி விட்டிருப்பான் அதுதான் வலி கொஞ்சம் இருக்குமே என்று கேட்டோம்” – என்று சொல்லியபடி ராதாவிடம் ஜாடை காட்டி விட்டுப் புன்னகைத்தாள்.

அஞ்சலா சற்று வெட்கத்தை வெளிப் படுத்தினாலும் மனத்தில் உள்ள வலிகள் அதற்கு அவளை அனுமதிக்கவில்லை.

“சரி அஞ்சலா சாப்பிடலாம் வா”

அப்போது சோதி அங்கு வந்தான்.

“சுவாதி! நான் சாப்பிட்டு விட்டு 2.00 மணிக்கு எஸ்.பியை பார்க்க அடம்பன் வரை போகனும். சில வேளை மன்னாருக்குப் போக வேண்டி வரலாம்.”

“அ... அப்புறம். அஞ்சலா சாப்பிட்ட பிறகு அக்காக்களுடன் நம்ம கொம்பனி, மாமாவோட மில் எல்லாம் சுற்றிப்பார். கலகலப்பு தானா வரும்”

“சரி அண்ணே...”

**அடம்பன், தாமரைக்குளம் பகுதி..**

எஸ்.பி யின் ஜீப் அருகில் தனது மகிந்திராவை நிறுத்தி விட்டு இறங்கி வந்த சோதியைப் பார்த்த எஸ். பி. புன்னகைத்தார்.

"என்ன சேர் சிரிக்கிறீங்க"

"இந்த புது ஜீப்பில் இருந்து இறங்கி வரும் உங்களைப் பார்க்க ஹீரோ மாதிரியே தெரியுது"

சோதி சிரித்துக் கொண்டே...

"இது என் மாமனாரின் கிஃப்ட் சேர். இன்றுதான் டெலிவரி செய்தாங்க"

"குட். புது மாடல் ஜீப். நானும் இதுமாதிரி எடுக்கலாம் எண்டு இருக்கன்"

"சரி சோதி இப்போ எங்களுக்கு முக்கியமான வேலை இருக்கு."

"இங்கேதான் பக்கத்திலே செல்லம்மா வீடு இருக்கு. நீங்க ஃபெஸ்ட் உள்ளே போய், நேசன் வந்தாரா? என்று கேளுங்க. ஏதும் நெகட்டிவா ஆன்சர் பண்ணினால், 'பாலா அந்த பேக்கை வாங்கிட்டு வரச் சொல்லி சொன்னான்' என்று சொல்லுங்க.

எந்த பேக் என்று கேட்டால் 'க்ரே கலர் சோல்டர் பேக்' என்று சொலுங்க. மிச்சம் கதைச்சா நீங்க சும்மா கதை விடுங்க.

உங்க வீடியோ கோல் ஒன் பண்ண மறக்காதீங்க."

"ஓகே சேர்"

தாமரைக் குளத்தில் ஒரு சிறிய குட்டை இருக்கிறது. அதற்கு அருகாக மேட்டுக் காணியில் தான் செல்லம்மா வீடு இருக்கு என்பது அவனுக்குத் தெரியும் கொஞ்சம்

*தள்ளி ஐநூறு மீட்டர் தூரத்தில் தான் அமலநாதனுக்கு கொடுத்த காணி இருக்கு. அதில் வீடு கட்டுப் பட்டுக் கொண்டிருப்பதும் அவன் அறிவான்.*

*செல்லம்மா வீட்டுப் படலையைத் திறந்தான். உள்ளே ஒரு நாய் வள் வள் என்று இவனைப்பார்த்ததும் குரைக்க ஆரம்பித்து விட்டது.*

*செல்லம்மா எட்டிப்பார்த்தாள்.*

*"நாய் கட்டித்தான் இருக்கு உள்ளே வாங்க"*

*"யார் நீங்க?"*

*"நான் பாலாவின் நண்பன்"*

*"உங்களை நான் பார்த்ததேஇல்லையே?"*

*"நீங்க பார்த்திருக்க மாட்டீங்க. ஏனென்றால் நான் முருங்கனில் கடையில் எப்பவும் இருக்க வேண்டும். இன்று லீவு. அடம்பனில் ஒரு கடை பார்க்க வந்தேன். பாலா ஈவினிங் வருவான். அவன் உங்களிட்ட கொடுத்த பேக் என்னோடதுதான். சில அல்பங்கள் அதுக்குள்ள இருக்கு. மன்னாரில் என்னோட வீட்டுக்காரி இருக்கிறா. அவளிடம் ஆல்பங்களை கொடுக்க வேண்டும்.."*

*"ஓ அப்படியா என்ன கலர் பேக் கொடுத்து வச்சீங்க"*

*"க்ரெ கலர் தோளில் மாட்டுற பேக் அன்ரி"*

*"ஓமோம் பேக் ஒன்று கொடுத்து வச்சிருக்கான். உங்களுடையதா?"*

*"ம்ம்ம்.. உங்கட பேர் என்ன சொன்னீங்க?"*

*"நான் சிவா அன்ரி"*

*"இருங்க எடுத்துக் கொண்டு வாரன்"*

கிழவி ரொம்ப உஷார்தான். அட யாருக்கோ போனெடுக்கிறாளோ. ஓ பாலாவுக்கு எடுக்கிறாளோ, வரட்டும்.
பேக்கோடு வந்தாள்.
"நீங்க வந்திருக்கீங்க என்று பாலாவுக்குச் சொல்லத்தான் போன் எடுத்தேன் அவன் என்னமோ போனை அணைச்சு வச்சிருக்கான்."
"அன்ரி. உங்களுக்கு அடம்பன் பஜார்ல் யாரும் கடை விற்க இருப்பது பற்றித்தெரியுமா?"
"இருக்கு தம்பி. அம்பலங்கடைக்குப் பக்கத்தில் பெரிய இடம் ஒன்று இருக்கு, நான் விசாரிச்சுட்டு சொல்லவா"
"சொல்லுங்க அன்ரி. உங்க நம்பரை தாங்க அன்ரி. போன் பண்ணிட்டு பின்னேரம் வரன். நீங்களும் விசாரிச்சு வையுங்க. அப்புறம் அன்ரி, ஈவினிங் அந்தக் கடையைப் பார்க்க நீங்க கூட்டிப் போங்க.."
"சரி தம்பி.. பாலா இன்றைக்கு எப்படியும் வருவான்" என்று செல்லம்மா சொல்லிவிட்டு, தனது நம்பரைக் கொடுத்தாள்...
"அவனுக்கு நான் போன் எடுத்தா எங்கேஜ்ட் டோன் தான் வருது. எதுக்கும் அவன் வந்தவுடன் என் நம்பருக்கு கோல் பண்ணச் சொல்லுங்க அன்ரி. நான் போய்ட்டு வாரன்"
சோதி பேக்குடன் எஸ்.பி.ஜீப்புக்கு வந்தான்.
அங்கு...........?

## 11

எஸ்.பி ஜீப் இல்லை.

சற்று யோசனையோடு அவரை அழைக்க போனை எடுத்த போது அவரது குறுந் தகவல் 'கிக்' என்ற ஒலியுடன் திரையில்...
'அடம்பன் ஆஸ்பத்திரிக்கு உடனே வரவும்' என்றிருக்கவும்,
தனது ஜீப்பில் பக்கத்தில் இருந்த அடம்பன் ஆஸ்பத்திரிக்கு விரைந்தான்.
அங்கு இன்னொரு ஜீப்பும் ஆம்புலன்ஸும் காணப்பட... தனது ஜீப்பை ஓரமாக நிறுத்திவிட்டு, எஸ். பி. ஜீப்பின் அருகில் வரும் போது அவர் இறங்கி வேகமாக உள்ளே போவதைப் பார்த்து இவனும் பின் தொடர்ந்தான்.
ஐ சி, வார்ட் பக்கம் ஆறேழு கொன்ஸ்டபிள்கள் எஸ்.பி யைக் கண்டதும் சல்யூட் வைத்தனர்.
'என்ன?' என்று கேட்பது போல் பார்க்க,
அவர்களில் ஒருவர் இன்ஸ்பெக்டர் சேகர்.,
"சேர். அவன் காலில்தான் சூட் பண்ணினேன்"
"ஏன்?"
"அவன் துப்பாக்கி காட்டி ஒரு பொம்பளையை சுடப்பார்த்தான். நான் அவன் காலில் சுட்டு விட்டேன்"
"ஓகே ஓகே. குட் ஜொப். லெட் சீ.."
"ஆங்..சோதி.. பேக் கிடைச்சிட்டுதா?"– சோதி தலையாட்டவே,
"சரி. பிறகு பார்க்கிறேன். சோதி..தெரியுமா?.. சூடு பட்டது பாலாவுக்கு.."
"எப்படி சேர்...?",
சேகர்தான் பதில் சொன்னான்
"பாலா உயிலங்குளத்திலிருந்து இங்கு வாற வழியிலே எங்கட ட்ராக்கிங் யுனிட் தகவல்

கொடுத்தார்கள்.அதன்படி தொடர்ந்தோம் அவனை. பின்னுக்கு இவனைத் தொடர்ந்ததைக் கண்டுவிட்டு.. இவன் பாலைக்குளியிலே ஒரு கடையில் இருந்து வந்த ஒரு பொம்பிளையை 'டக்'கென்று இழுத்து அவள் கழுத்தில் பிடித்து துப்பாக்கியைக் காட்டி இருக்கான். நான் அவன் காலிலே சுட்டுப் விட்டேன்"

"அப்ப சேர் பாலாவா பிடி பட்டிருக்கான்"

"யெஸ் சோதி.. செல்லம்மாவை நல்லாவே சமாளிச்சீங்க.."

"அப்ப சேர் பாலா பிடி பட்டது இப்போ யாருக்கும் தெரியக் கூடாதுதானே?"

"யெஸ் சோதி இந்த நேரத்துக்குள் எவனாவது மீடியாக் காரன் கேள்விப்பட்டு வரப் போறான். பார்ப்போம் டொக்டர் வரட்டும்."

15 நிமிடங்கள் போயிருக்கும் கமராவோடு ஒருத்தர் வந்தார் அங்கே.

"எக்ஸ்கியூஸ் மீ சேர். நான் தமிழ் முரசு நிருபர் அபூ பக்கர்"

"அ.. மிஸ்டர் அபூபக்கர். ஒரு அக்கியூஸ்ட் பிடிபட்டது காலில் சுடுபட்டது உண்மை, ட்ரீட் மெண்ட் போகுது. உங்கள்ட்ட கைண்ட் ரிக்குவெஸ்ட். இப்போதைக்கு அக்கியூஸ்ட் பெயர் போட வேண்டாம். மான் வேட்டைக்காரன் ராசு. பிடி பட்டான்.. காலில் சுடப்பட்டு பிடிபட்டான்.. என்று போடுங்க. போட்டோ வேண்டாம் ரெண்டு நாளுக்குப்பிறகு நானே உங்களைக் கூப்பிட்டு முழு டீட்டெயில் தாரன். ஓகேயா?

"ஓகே சேர் தாங்க் யூ சேர்"

"அவர் போன சில நிமிடங்களில் டொக்டர் வந்தார்"

“எனி டமேஜ் டொக்டர்”
“நோ சேர் காலில் பக்க வாட்டில் குண்டு உரசிப் போய் இருக்கு. பாண்டேஜ் போட்டு இருக்கு. கூட்டிப் போகலாம்”
“வெரி குட். தாங்க் கோட்”
“சேகர் நீங்க அக்கியூஸ்டைக் கூட்டிப்போங்க. அவன் தலையை கவர் பண்ணுங்க..”
“போகலாம்”
“சோதி நீங்க மன்னாருக்கு இப்போ வரீங்களா?”
“வாரன். போகலாம் சேர்.”
“சோதி நான் உங்கட ஜீப்பிலே வாரன்”
“வாங்க சேர்”
அவரும் சோதியும்.. மன்னாரை நோக்கிப் பயணித்தார்கள்.
“சோதி நெட் வோர்க் கண்டி நுவரெலியா என்று போகுது”
“நேசனை பாலா மூலம் பிடிக்கலாம்”
“நேசன் இப்போ எங்க இருக்கான் தெரிஞ்சுதா சேர்”
“யெஸ். அவன் இப்ப கண்டியிலேதான் இருக்கான். சோதி. உங்களுக்கு கண்டி பழக்கமா?”
“நாலுதரம் போய் இருக்கேன்”
“கண்டி ரோட் ட்ரைவிங் எப்படி? பழக்கமா?”
“ஓம் சேர் ரெண்டு தடவை வேன் ட்ரைவ் பண்ணியிருக்கேன்”
“வெல். அப்படி என்றால் நீங்க நாளைக்கு ஏர்லி மோர்னிங் கண்டி போவீங்களா?”
“முடியும் சேர்”

“நீங்க போகும் போது நான் அப்பப்ப கொண்டாக்ட் பண்ணுவன். போன் நல்ல சார்ஜில் வைத்திருங்க”

“அப்புறம் உங்களுக்கு சண்டை போட வருமா?”

“சேர். நான் கடேட்டில் இருந்திருக்கேன். அப்ப கடேட் மாஸ்டர் கராத்தே பழக்கி இருக்கார். எனக்கு ப்ளாக் பெல்ட் கிடைச்சிருக்கு. மனதில் நம்பிக்கை இருக்கு. சண்டை வந்தால் சமாளிக்க”(அவன் பழனி ஓதுவாரிடம் அவனது பதினேழாவது வயதில் வர்மக் கலை பயின்றதைப் பற்றி சொல்லவில்லை..ஆனால் நினைத்துக் கொண்டான்)

“வெரி குட். கன் சூட் செய்வீங்களா?”

“ரைபிள் சூட்டிங் பழகி இருக்கேன். ஆனால் ரிவால்வர் தொட்டதில்லை”

“ஓகே பயப்படாதீங்க. கன் ஃபயிட்டுக்கு சான்ஸ் இல்லைன்னு நம்புறேன். எதற்கும் தற்காப்புக்கு உங்களுக்கு லைசென்ஸ்ட் ரிவோல்வர் தரச் சொல்கிறேன். ஒரு ஃபோர்ம் ஃபில் பண்ணி சைன் பண்ணித் தாங்க. சரியா. ஒன் மினிட் சோதி”

எஸ்.பி. வாக்கி டோக்கியில் பின்னுக்கு ஜீப்பில் வரும் சேகரை அழைத்தார்.

“சேகர். பாலாவின் போனை ஓன் பண்ணி வையுங்க. அவனுக்கு கோல் வந்தால் ஸ்பீக்கரில் போட்டு அவனைப் பேசச் சொல்லுங்க. வெரி இம்போர்டண்ட்.. அவன் அரெஸ்ட் ஆனது போனில் கூப்பிடுபவனுக்கு தெரியக்கூடாது. ஸ்டேஷனில் கொண்டு போய் தனிக் கஸ்டடி வையுங்க.. பப்ளிக் லொக்கப் வேண்டாம், உள்ளே கொண்டு போறது சீக்ரெடாக இருக்கனும். நோ மீடியா கவர்”

“ஓகே சேர்”– சேகரைக் கட் பண்ணிவிட்டு சோதியிடம் கேட்டார்.
“சோதி அந்த பேக் ?”
“பின்னுக்கு இருக்கு சேர்”
எஸ்.பி. பின்னுக்கு கையை நீட்டி பேக்கை எடுத்துப் பிரித்தார்.
அதனுள்..
மூன்று பெண்களுடைய போட்டோக்கள்
விசிட்டிங் கார்ட் கொஞ்சம்.
பாஸ்போர்ட் இரண்டு.
இந்தியாவுக்குப் போக இரண்டு டிக்கட்.
சீடிக்கள் மூன்று.
இவ்வளவும் தான் இருந்தன.
பாஸ்போர்டைப் பிரித்தார்.
“இந்தியா விசாவோடு நேசனும் பாலாவும் டிக்கட்டுக்களையும் எடுத்துட்டாங்க சோதி.ஹெறாந்த வெடகாரய (நல்ல வேலைக்காரங்கதான்)..ம்ம் சும்மாச் சொல்லக்கூடாது..புத்திக்காரங்க போல..ம்ம் சோதி செல்லம்மா நம்பரைத் தாங்க”
சோதி தனது போனில் இருந்து செல்லம்மாவின் நம்பரைக் கொடுத்தான்.
எஸ்.பி. வாக்கிடோக்கியில் ஐ.டி. யூனிட்டை அழைத்தார்.செல்லம்மாவின் நம்பரைச் சொல்லி..
“இந்த நம்பரை ப்ளொக் பண்ணுங்க. எந்த நம்பர்லேருந்தும் கோல் போகாமல் ப்ளொக் செய்யுங்க. நெக்ஸ்ட். இந்த நம்பர் இருக்கும் லொகெஷன் அதைச்சுத்தி இருக்கும் லொகேஷனில் இருக்கும் வரும்

கோல்ஸ் எல்லாமும் ட்ரேஸ் பண்ணுங்க. ரெகோர்ட் பண்ணுங்க. ஃப்ரொம் திஸ் செகண்ட். ஓவர்."
மன்னார் பாலத்தைக் கடந்து ஸ்டேஷனை நோக்கி ஜீப் வந்து விட்டது.
"சோதி என்னுடைய குவாட்டர்ஸுக்கு விடுங்க"
எஸ்.பி .
திரும்பவும் வாக்கி டோக்கியில் சேகரை அழைத்தார்.
"சேகர். பாலாவை என்னோட குவாடர்ஸுக்கு கொண்டு வாங்க"
"சோதி.."
"சேர்"
"செல்லம்மா இங்கு வரோனும்.. பிறகு உங்களோடு சேகரை அனுப்புறன்.. போய், செல்லம்மாவை நீங்களே இங்கே கூட்டிக் கொண்டு வாங்க"
"சரி சேர்"
குவாட்டர்சில்...
ஒரு அறையில் பாலாவை வைத்துப் பூட்டி விட்டு வந்த சேகரை அழைத்தார்.
"சேகர் நீங்க மப்டியில் சோதியோடு தாமரைக்குளம் போய் செல்லம்மாவைக் கூட்டி வாங்க இங்கே. சேகர் ரெண்டு கொன்ஸ்டபிள்களை மாறு வேஷத்தில் செல்லம்மா வீட்டையும் அமலநாதன் வீட்டையும் கண்காணிக்கச் சொல்லுங்க. அவுங்களை இப்பவே ரெடி பண்ணி ஓட்டோவில் அனுப்புங்க. தமிழ் கொன்ஸ்டபிள்களை அனுப்புங்க"

"யெஸ் சேர்" சல்யூட் அடித்து விட்டு, பாலாவிடம் கைப்பற்றிய போனை அவரிடம் கொடுத்தார். பின் சோதியிடம் திரும்பி.

"சோதி.. ஒரு அஞ்சு நிமிஷம்..இப்ப வந்து விடுகிறேன்" சேகர் சொல்லிட்டு உள்ளே போய் மப்டியில் திரும்பினார்.

"சரி சோதி.வாங்க போவோம்"

**மீண்டும் தாமரைக் குளம்.**

செல்லம்மா வீடு.

"அன்ரி. பாலா மன்னாரில் என்ர மனுஷி வீட்டை இருக்கான். நீங்க கடையை விசாரிச்சீங்களா?"

"இல்லை தம்பி என்ர போன் ஏனோ வேலை செய்யேல்ல. வாங்க போய் பார்க்கலாமா"

செல்லம்மா வீட்டைப் பூட்டி வருவதற்குள் சுவாதிக்கு குறுந்தகவல் அனுப்பினான்.

செல்லம்மா ஜீப்பில் ஏறி உட்கார்ந்த படி,

"தம்பி யாரு?"

"அவர் சேகர் அன்ரி. எங்கட ஃப்ரண்டுதான்"

அப்போ கோல் ஒன்று சோதிக்கு வரவே, காதில் ஒற்றிக் கொண்டே

"சுவாதி,என்ன?"

"................"

"ஓ.. பாலா மன்னாரில் கடை ஒன்று பார்த்து விட்டானா?"

"................."

"பாலாவிடம் சொல்லு அன்ரியும் எங்களோடு வாறா எண்டு"

"................."

“ஓகே நேரில் பேசுவோம்”
சேகர் சிரிப்பை அடக்கிக் கொண்டிருந்தார், புன்னகையை வெளிக்காட்டியபடி.
மன்னார் பாலம் கடந்ததும் சேகர் சோதிக்குக் கண்ணைக் காட்டினார்.
“அன்ரி. என்னை நீங்கள் மன்னிக்கனும். இவர் மன்னார் போலீஸ் இன்ஸ்பெக்டர் சேகர்”
சேகர் தொடர்ந்தார்.
“அம்மா உங்களை எங்கள் எஸ்.பி ஐயா கூட்டி வரச் சொன்னார். நான் போலீஸ் யூனிஃபோர்மில் உங்களைக் கூப்பிட வந்தால் அங்குள்ளவர்கள் உங்களை அரெஸ்ட் பண்ணிக்கூட்டிப் போவதாய் நினைத்து விடுவார்கள். அதனல்தான் என்னை மப்டியில் அனுப்பினார்”
செல்லம்மாவின் முகம் கறுத்துப்போனாலும் ஒன்றும் சொல்ல முடியவில்லை. சோதியை கோபத்தில் முறைத்துப் பார்த்தாள். எஸ்.பி குவாட்டர்ஸுக்குள் சோதியும் சேகரும் செல்லம்மாவுடன் நுழைந்தார்கள்.
**எஸ்.பி அறை.**
“வாங்க செல்லம்மா ஆச்சி”
செல்லம்மா குப்பிட்டு வணக்கம் தெரிவித்தாள்
“உட்காருங்க..”
“சேகர்.. சோதி..நீங்களும் உட்காருங்க”
மேசை மணியைத் தட்டி கொன்ஸ்டபிளைக் கூப்பிட்டு,
“எல்லோருக்கும் டீ கொண்டு வாங்க”
“ஆச்சி டீ குடிங்க ஒண்ணும் பயப்படாதீங்க”

“உங்களைத் தொந்தரவு செய்ய மாட்டோம். நாங்க கேட்கிற கேள்விகளுக்கு நீங்க பதில் சொன்னாக் காணும்.”
“அப்புறம் உங்களுக்கு போன் இருக்கா.. ஆச்சி?”
“இருக்கு ஐயா.. ஆனால் அது பகல்லேருந்து வேலை செய்ய வில்லை”
“கொடுங்க பார்ப்போம். சேகர் அது ஏன் வேலை செய்ய வில்லை என்று பாருங்க”
சேகர் அதை வாங்கிக் கொண்டு அறையை விட்டுப் போய்ட்டு சில நிமிடங்களில் திரும்பி வந்தார்.
“இப்போ வேலை செய்யுது சேர்”
“சரி அதை ஆச்சிட்ட கொடுங்க”
“ஆச்சி”
“ஐயா”
“நேசன் யார் உங்களுக்கு?”
செல்லம்மா திகைத்தாள். மறு நொடியே சுதாகரித்துக் கொண்டு,
“ஐயா, நேசன் என் தம்பி மகன்”
“உங்க தம்பி யார்”
“அமலநாதன். என்னோட பக்கத்துக் காணியிலே வீடு கட்டிக்கொண்டு இருக்கான். அவன் அடம்பனில் ஒரு நெல்லுக் குத்துற மில் வைத்திருக்கான்”
“இப்போ ஊரில் தான் இருக்கானா?”
சற்று யோசித்து விட்டு,சொன்னாள்.
“இல்லை சேர் அவன் இப்போ கொழும்பில் இருக்கான்.”
“எப்போ போனான்?”
“போய் ஒரு மாசத்துக்கு மேல். அங்கு என்ன செய்றான்.?”

“அங்கு ஒரு பிஸினசு தொடங்கி இருக்கான்”
“என்ன பிஸினஸ்?”
“ஒரு ட்ரவல் ஏஜன்சி செய்யுறான். விசா எடுத்துக்கொடுக்கிறது, டிக்கட் புக் பண்ணுறது என்றெல்லாம் செய்கிறான்”
“சரி நேசனைப் பற்றி சொல்லுங்க”
“அவனும் வான் ஹயர் ஓடுறாண். மன்னார் கொழும்பு கண்டி என்று எல்லா இடமும் ஆளுங்களை கூட்டிப் போய் வருவான்”
“இப்போ எங்கே அவன்?”
“நேசன் ஆட்களைக் கூட்டிக் கொண்டு வெளியூர் போயிருக்கான்”
“அவனோடு பேசினீங்களா இன்றைக்கு?”
“ஓம் ஐயா காலையிலே கூப்பிட்டுப் பேசினான்”
“என்ன பேசினான்?”
“அவன் நண்பன் பாலா வருவான் என்றும் அவன் வைத்துப் போன பேக்கை எடுக்க வருவான். அவன் வராவிட்டால் வேறு நண்பன் யாராவது வந்து எடுப்பார்கள்”, என்றும் சொன்னான்.
“எங்கே இருந்து பேசுறான் என்று கேட்டீங்களா?”
“இல்லை ஐயா அந்த நேரம் யோசிக்கவில்லை”
“சரி பாலா எப்படி?”
“பாலா நேசனோட உண்மையான நண்பன். காசுகளை பத்திரமாக வாங்குறது கொடுக்கிறது பாங்கில் போடுறது என்று நம்பிக்கையாகச் செய்வான் என்று நேசனும் என் தம்பியும் சொல்லுவாங்க”
“எந்த பாங்கில் அவன் காசு போடப் போறது?”
“மன்னார் இலங்கை வங்கிதானய்யா”

“அங்கு நேசனும் உங்க தம்பியும் கணக்கு வச்சிருக்காங்களா?”
“ஆமாம் ஐயா”
“அங்குதான் என்று உங்களுக்கு எப்படி தெரியும்?”
“காசு பேக்கை எடுத்துக்கொண்டு நான் மன்னாருக்குப் போறன். பாங் ஒஃப் சிலோன் போய்ட்டு வாறன். என்று அடிக்கடி சொல்லுவான்.”
“சரி இன்னொரு முக்கியமான கேள்வி”
“கேளுங்க ஐயா”
“நேசனுக்கும் பாலாவுக்கும் காதல் கீதல் என்று யாரும் பெண்பிள்ளைகள் பழக்கம்?”
“அப்படி எல்லாம் இல்லை ஐயா. ஆனா அவுங்க ரோஸ்லின் ஸ்டூடியோவில போன வருஷம் வரை போட்டோ எடுக்கும் வேலை செய்தாங்க. அப்போ அங்கே மேக்கப் வாற அந்தப் பெண் வடிவு இந்தப் பெண் வடிவு என்று சொல்லி சொல்லிக் கொண்டே இருப்பாங்க. ஆனால் ஏதும் தொடர்புகள் இருப்பது பற்றி தெரியாது”
“சரி கடைசியா ஒரு கேள்வி உங்களுக்கு சகுந்தலா அஞ்சலா என்று யாரையும் தெரியுமா?”
செல்லம்மாவின் கைகள் சற்று நடுங்கின. முகம் குப்பென வியர்க்க ஆரம்பித்தது.
“ஆச்சி என்ன?”
“ஒண்ணுமில்லை ஐயா, நானாட்டானில் அந்தப்புள்ளைங்க வீட்டுக்குப் பக்கத்தில் தான் நான் கொஞ்ச காலம் இருந்தேன். அப்போ அந்தப் புள்ளைங்களைத் தெரியும். இப்ப ரெண்டுபேரும் இந்த

*உலகத்தை விட்டே போய்ட்டாங்க என்று பேசிக்கிறாங்க”*

*“சரி நல்லது ஆச்சி நீங்க ஒரு உதவி செய்ய வேண்டும். மூன்று நாள் எங்கள் பார்வையில் இங்கே தங்கி இருக்க வேண்டும்”*

*“இங்கேயா? எனக்கு நிறைய வேலைகள் இருக்கு வீட்டில”*

*“ஆச்சி அதெல்லாம் அப்புறம் பார்க்கலாம். இங்கே உங்களுக்கு எல்லா வசதியும் இருக்கும். பயப்படாம தங்குங்க”*

*“ஆச்சி ஒரு உதவி செய்வீர்களா? நீங்க உங்க போனுக்கு நேசனோ அமலநாதனோ எடுத்தால் நாங்க சொல்லிக் கொடுக்கிற மாதிரியே பேசனும். அவங்க எடுத்ததும் நீங்க சொல்லனும் ஆட்கள் இருக்கிறாங்க. நான் திருப்பி எடுக்கிறேன். என்று சொல்லிட்டு நாங்க சொல்ற மாதிரிதான் சொல்லனும். இது என்னோட உத்தரவு. நீங்க இப்படி செய்வதனால் பொம்பளப் பிள்ளைகளுக்கு வரும் பேராபத்துக்களை தடுக்கலாம்”*

*“ஐயா என்ன என்னமோ சொல்லுறீங்களே”*

*“சோதி நடந்த எல்லாத்தையும் ஆச்சிட்ட டீட்டெயிலாய்ச் சொல்லுங்க. நான் பாலாவைப் பார்த்து விட்டு வாறன்”*

*“சேகர் வாங்க நாங்க பாலாவைப் பார்ப்போம்”*

*“ஐயா பாலா பாலா என்று சொல்லுறீங்க எந்த பாலா ஐயா?”*

*“எல்லாம் சோதி சொல்லுவார் கேளுங்க. சோதி ஆச்சிட்ட போனை வாங்கி ஓஃப் பண்ணி வைங்க. அப்படியே அந்த வீடியோக்களையும் காட்டுங்க”*

“சரி சேர்”

எஸ்பியும் சேகரும் போன பிறகு சோதி ஆச்சியின் போனை வாங்கி அணித்துவிட்டு எல்லா விஷயங்களையும் சொல்ல ஆரம்பித்தான்

செல்லம்மாவுக்கு சோதி சொல்லச் சொல்ல அதிர்ச்சியும் கோபமும் மாறி மாறி ஏற்பட்டுக் கொண்டிருந்தன. வீடியோக்களைப் பார்த்ததும், அஞ்சலாவின் வாக்குமூலத்தை கேட்டதும் கோபம் அதிகமானது.

“படு பாவிகள். மனுசங்களா இவனுங்க. பொம்பளைப் பொறுக்கிங்க. இவனுகளையா நான் பாசம் காட்டி நேசித்தேன். ஐயோ ...கடவுளே மோசம் போய்ட்டேனே. இவனுகளைப் பத்தி தெரியாம அந்தப் பச்சைப் புள்ளைங்களை இவன் காரில் ஏறச் சொன்னேனே. எனக்கு மன்னிப்பே கிடையாது” என்று பலவாறு சொல்லி ஓ..என்று புலம்ப ஆரம்பித்துவிட்டாள் செல்லம்மா.

அப்போ உள்ளே நுழைந்தார், எஸ்.பி.

“ஐயா என்னை நீங்களாவது மன்னியுங்கோ. இந்தப் பாவிகளைப் பத்தி தெரியாம இருந்துட்டேனே. வரட்டும் இவனுகளை உங்களிட்டை பிடிச்சுக் கொடுக்காம விடப் போவதில்லை.”

சோதி குறுக்கிட்டு,

“ஆச்சி இப்ப சொன்னீங்களே.. ‘இவனுகளைப் பத்தி தெரியாம அந்தப் பச்சைப் புள்ளைங்களை இவன் காரில் ஏறச் சொன்னேனே.’ என்று.. அதைப் பற்றி செர்ட்ட சொல்லுங்க.”

ஆச்சி எஸ்.பியைப் பார்த்து.

“ஓம் ஐயா மடுத்திருவிழா முடிஞ்சு, நான் வீட்டை வெளிக்கிடேக்கை அந்த ரெண்டு பச்சைப்புள்ளைங்களையும் நேசனொட காரிலதான் ஏற்றிக் கொண்டு வந்து அவுளுக வீட்டில விட்டது.இவனுகளைப் பற்றி நான் எதுவும் இப்படி என்று எனக்குத் தெரியாமப் போச்சே..” ஆச்சி சொல்லிப் புலம்பினாள்.

“ஆச்சி..நீங்க நேசனையும் அவன் அப்பனையும் பிடிக்க உதவி செய்தீங்க என்றால் மிச்சம் நல்லது”

“அப்போ பாலா?”

“பின்னுக்குப் பாருங்க ஆச்சி”

செல்லம்மா பின்னால் திரும்பி பார்த்தாள். அங்கே கொன்ஸ்டபிள்கள் பிடியில் பாலா நிலை குலைந்து நிற்பதைப் பார்த்தாள்.

“அடப் பாவி மோசக்காரனே..”

என்று கத்திக் கொண்டே எழுந்துபோய் அவன் கன்னத்தில் மாற்றி மாற்றி அறைந்தாள்.

அறைந்தும் அவளுக்கு கோபம் தீரவில்லை.

“எஸ்.பி ஐயா,இவனைத் தூக்கில போடுங்கள். இவனை மட்டுமில்லை நேசனையும் பிடிச்சு தூக்கில போடுங்க ஐயா”

எஸ்.பி கொன்ஸ்டபிள்களுக்குக் கண்ணால் சைகை காட்டவே பாலாவை மீண்டும் அழைத்துச் சென்றனர்.

“ஐயா நான் மோசம் போய்ட்டேன் ஐயா. நான் என்ன செய்யனும் என்று சொல்லுங்க அப்படியே செய்யுறேன்”

“ஆச்சி இப்ப உங்களுக்கு எல்லாம் தெரிஞ்சிருக்கும் இல்லையா?”

“ஆமாங்க ஐயா.. இவ்வளவு கொடூரமானவங்களா இந்தப் பொடியன்கள்? பெண்ணென்றால் பேயும் இரங்கும் என்று சொல்லுவாங்களே. இவனுங்க பேயை விட மோசமானவன்கள். சும்மா விடக் கூடாது ஐயா”

“ஆச்சி. நீங்க செய்ய வேண்டியது எல்லாம் நேசனும் அவன் அப்பன் அமலநாதனும் போன் எடுத்தால் எதும் நடந்த மாதிரிக் காட்டிக்கொள்ளாதீங்க. அவன்களுக்கு ஏற்ற மாதிரியே பேசுங்க. நேசன் பேக்கைப் பத்திக் கேட்டால் பாலா வாங்கிக் கொண்டு போய்ட்டான் என்று சொல்லுங்க. அவன்கள் என்ன பேசினாங்க என்பதை எனக்கு போன் பண்ணிச் சொல்லுங்க. சரியா?”

“அப்படியே செய்யுறேன் ஐயா”

“சரி நீங்க சோதியோட வீட்டுக்குப் போகலாம். நீங்க கொஞ்சம் வெளியால புட்டுவத்தில (கதிரையிலே) இருங்க, சோதி வருவார்”

எஸ்.பி அறையில் அவருடன் சோதி, சேகர் மட்டுமே இப்போது.

“சோதி.. நீங்க போலிசுக்கு நிறைய ஹெல்ப்பா இருக்கீங்க, தாங்க் யூ”

“பரவாயில்லை சேர். இது என்னுடைய கடமைதானே”

“அ.. அப்புறம் சேகர்.. பாலாவுக்கு அழைப்பு எதும் வந்தால் ..அது .. நேசனாகத்தான் இருக்கும்.. அவனுடன் பாலாவையே எப்படிப் பேச வேண்டும் என்று சொல்லி இருக்கேன்.”

“சேகர் நீங்க என்ன விஷயம் என்று சொல்லுங்க..”என்று எஸ்.பி சொல்ல,

சேகர் தொடர்ந்தார்.

“அவனை கண்காணிக்க எஸ்.ஐ ஆனந்தன் இருக்கார். கூடவே ரெண்டு கொன்ஸ்டபிள்களும் இருக்காங்க, நாங்க அவனிடம் போன போது நேசன் கூப்பிட்டான். பேக்கை எடுத்தாச்சா என்று கேட்டான் இல்லை இனித்தான் போகப் போகிறேன். எடுத்துவிட்டுக் கூப்பிடுகிறேன். என்று அவனிடம் சொல்லச் சொன்னோம். அவன் போலிஸ் செக்கிங் பற்றி எல்லாம் விசாரிச்சான். பாலைக்குளியிலே ஏதோ துப்பாக்கிச் சூடு என்றெல்லாம் கேட்டான் அதெல்லாம் எப்படி என்று சரியான விஷயம் தெரியவில்லை’ என்று சொல்லிச் சமாளிசாச்சு.
இப்போ நாங்க இன்னொரு பிளான் பண்ணிவிட்டோம் பாலாவின் குரல் மாதிரியே ‘வொய்ஸ் மொடுலேஷன் அப்பை” போனில் அப்டேட் பண்ணி விட்டோம். இப்ப நானேதான் அவன் மாதிரி பேசி விட முடியுது.” என்று சொல்லிக் கொண்டு இருந்த போதே,
பாலாவின் போன் ரிங்க் ஆனது.
–”நான் தான் பாலா”– பாலா மாதிரியே பேசத் தொடங்கினார் சேகர்.
“நேசன்.. என்ன ப்ளான்?..”.
“நாளைக்கு விடிகாலையிலேயே வெளிக்கிட்டு கண்டிக்கு வந்துவிடு. நான் ‘பஸ்ஸியால’ என்ற ஊரில் இருக்கிறேன். ஒரு முக்கியமான வி ஐ பி யை காலை 10.00மணிக்கு சந்திக்கிறேன் அவரிடம் ஒரு பரிசை கொண்டுபோய் கொடுக்க வேணும். கொடுத்துட்டு நான் கண்டிக்கு வந்து விடுவேன்” என்றான்.
“சரி நேசன். நான் கண்டிக்கு வரும் போது கூப்பிடுகிறேன், இன்றைக்கு ராவைக்கு

வெளிக்கிடவா?–என்று பாலா கேட்பது போல் கேட்டார் சேகர்.

–“வேண்டாம்..பாலா. இப்போ செக்கிங் எக்கச் சக்கமா இருக்கு. நீ நாளைக்கு விடிய மூன்று மணிக்கு வெளிக்கிட்டா யென்றால், எட்டு மணிக்கு எல்லாம் வந்து விடலாம். நீயும் நேரத்துக்கு வந்துட்டா ரெண்டு பேரும் வி.ஐ,பி வீட்டுக்குப் போகலாம். சரி கோல் பண்ணுறன் பிறகு தேவையெண்டா”–. என்றான்

– “சரிடா நேசன்” என்றார் சேகர்.

“ஆ. எதில வரப் போறாய்?” என்று நேசன் கேட்டான்.

“என்னோட பைக்கில வந்து விடுகிறேன். சரி வைக்கிறன்”–.

எஸ்.பியும் சேகரும் புருவங்களை வியப்பில் விரித்தனர்.

“மிச்சம் சேர் சொல்ற மாதிரியே எக்ஷிகியூட் பண்ண வேண்டியதுதான்”

“வெல்டன் சேகர்.யெஸ் சோதி. கேட்டீங்கதானே. இப்ப நம்ம பிளான் என்னண்டால்..நாளைக்கு விடிய முன் 3.00 மணிக்கே நீங்க ரெண்டு பேரும் புறப்பட வேண்டும். கிருஷ்ணா ஃப்ரீ என்றால் நீங்க அவரையும் கூட்டிப் போக முடிஞ்சாலும் ஓ.கே.”

“சோதி இந்த ஃபோர்ம்ல சைன் பண்ணுங்க.”–ஒரு ப்ஃபோர்மை சோதியின் பக்கம் நீட்டினார்.

சோதி சைன் பண்ணி கொடுத்தான்.

“ம். இந்தாங்க. சோதி உங்க பாதுகாப்புக்கு.”

“இது எதுக்கு சேர், அதுதான் இன்ஸ்பெக்டர் சேகர் வாறாரே.”

“அவரும் வருவார், இதுவும் உங்களுடன் இருக்கட்டும் வாங்கி பத்திரமா வெச்சிருங்க..மொத்தமா சிக்ஸ் புல்லட்ஸ் லோடட்.”

சோதி சற்றும் பயத்தைக் காண்பிக்காமல். வாங்கிக்கொண்டான்.

“தாங்க் யூ சேர்.”

“சேகர் நீங்க இரவே கிளம்பி சோதி வீட்டுக்குப் போங்க. அங்கே உங்க பைக்கை விட்டு வைங்க”

“ஓகே. சேர்”

“சேர் நான் கிருஷ்ணாவுக்கு ஒரு போன் பண்ணிப் பார்க்கிறேன்”

“கெரி ஓன் சோதி”

போனில் கிருஷ்ணாவை அழைத்தான்.

“கிருஷ்ணா.. நாளை நாளை மறுநாள்– ரெண்டு நாள் லீவு கிடைக்குமா உனக்கு?”

“...............”

“கண்டிக்குப் போகவேண்டும்”

“..................”

“நல்லது கிருஷ்ணா இப்ப அஞ்சரைஆகுது. பாங்க்குக்கு இப்போ 10 நிமிஷத்திலே வாரன். நீயும் வந்து விடு.போகும் போது எல்லாம் சொல்றேன். ஓகே டா.”

“சேர் கிருஷ்ணாவும் ஓகே சொல்லிட்டான்.”

“சரி சோதி பெஸ்ட் ஒஃப் லக்”

“நான் எப்பவும் வீடியோ லைனை ஓனில் தான் வைத்திருப்பேன். நீ கூப்பிடலாம். மற்றதை எல்லாம் நான் சேகர்ட்ட சொல்லிவிடுகிறேன். ஆச்சியையும் நீங்க..கூட்டிக் கொண்டு போங்க”

“ஓகே சேர்”

சோதி செல்லம்மாவையும் ஏற்றிக் கொண்டு கிருஷ்ணாவை ஏற்ற பாங்குக்கு போனான். அங்கு கிருஷ்ணா ரெடியா நின்றான்.
ஜீப்பில் போகும் போது கிருஷ்ணாவுக்கு எல்லாவற்றையும் விபரித்தான்.
தாமரைக்குளத்தில் செல்லம்மாவை விட்டு விட்டு வீட்டுக்குப் போனார்கள்.
வீட்டிலும் சுவாதி, ராதா, மாமாவிடம் மட்டும் விபரங்களை கூறி விட்டு கிருஷ்ணாவும், தானும் விடியமுன் மூன்று மணிக்கு கண்டி போக இருப்பதாகச் சொன்னான். அப்பா அம்மாவிடம் வேலை விஷயமாக கண்டி போவதைக் கூறினான்.
இரவு 10.00 மணிக்கு சேகரும் வந்து சேர்ந்தார். அதிகாலை ரெண்டரை மணிக்கெல்லாம் ரெடியாகினர். சோதியும் கிருஷ்ணாவும் வைரவரைக் கும்பிட்டு வர மூவரும் டீ குடித்து விட்டு கிளம்பினர்.
கிருஷ்ணாதான் ட்ரைவ் பண்ணினான். பக்கத்தில் சேகரும், பின்சீட்டில் சோதியும் அமர்ந்திருந்தனர்.
காலை 6.30மணிக்கு அநுராதபுரம் வந்தார்கள்.
அப்போது சேகர் வைத்திருந்த போன் ரிங் ஆனது.
"சோதி நேசன் தான் கூப்பிடுகிறான்.
"கிருஷ்ணா ஜீப்பை கொஞ்சம் ஓரம் கட்டுங்க. அப்படியே உங்க ரெண்டு பேரின் போனையும் மியூட் பண்ணுங்க ஜீப் யூ பி எஸ் சவுண்டையும் மியூட் பண்ணுங்க"
ஜீப்பை ஒரு ஓரமாக நிறுத்தினான் கிருஷ்ணா.

கண்ணாடியை இறக்கச் சொல்லிவிட்டு சேகர் போனை ஸ்பீக்கரில் ஓன் பண்ணி விட்டு நேசனின் அழைப்பை க்ளிக் பண்ணி,

"நேசன் சொல்லு"

"பாலா இப்ப எங்க மட்டும் வந்திருக்க?"

"அனுராதபுரம் சந்தி வந்து விட்டேண்டா'

"அப்ப நீ ஒன்பது மணிக்குள் வந்திடுவாய். மழைக்குணமாய் ஏதும் தெரியுதா?"

" இல்லை நேசன் வானம் வெளிச்செண்டுதான் இருக்கு."

"ஏன் கேட்டேனென்டா நீ கொண்டு வர பேக் நனையக் கூடாது எண்டுதான்"

"பேக் பத்திரமா பைக்கின் சைட் கிட் பொக்சில் வச்சிருக்கன். நனையாது"

"சரி நீ தம்புள்ள தாண்டி கண்டிக்குக் கிட்ட வரேக்க கோல் பண்ணு சரியா"

"சரி நேசன். நான் பிறகு கூப்பிடுறன்"

போனை அணைத்து விட்டு சைட் கண்ணாடியை ஏற்றி விட்டார். கிருஷ்ணா ஜீப்பை எடுத்தான்.

"அசத்துரீங்க இன்ஸ்பெக்டர். நீங்க உங்க சொந்தக்குரலில் தானே பேசினீங்க"

"சோதி இதில் பாலாவுடைய வொய்ஸ் மாடுலேட் பண்ணி இருப்பதால் மறுமுனையில் கேட்பவர்களுக்கு பாலாவின் குரலாகத்தான் கேட்கும். இப்ப நாங்க ரெண்டு பேரும் பேசினது எல்லாம் எங்கட கொண்ட்ரோல் ரூமில் ஓட்டொமெட்டிகாக ரெக்கொர்ட் பண்ணி இருக்கும். அதொட நேசனின்

லொகேஷனையும் கவனித்துக் கொண்டு இருப்பாங்க. இருங்க நான் கொண்ட்ரோல் ரூமைக் கூப்பிடுகிறேன்."
தனது வோக்கி டோக்கியை எடுத்து கொண்ட்ரோல் ரூமை அழைத்தார் சேகர்.
"ஹலோ "
" சேர் . குட்மோர்னிங்"
" இப்ப நேசனின் லொக்கேஷன் சொல்ல முடியுமா"
" இப்ப அவன் கண்டியில் இம்பாலா ஹோட்டலில் இருந்து தான் கூப்பிட்டு இருக்கான். கடந்த ஏழு மணித்தியாலமாய் அங்கேயேதான் இருக்கான்"
"தாங்க்ஸ் லொக்கேஷன் மாறும் போது என் ஹேண்ட் போனுக்கு எஸெம்மெஸ் அனுப்புங்க.ஓவர்"
"சூப்பர் அரேஞ்ஜ்மெண்ட் சேர்"
"எல்லாம் நம்ம எஸ் பி சேர் வேலைதான்.
அப்புறம் சோதி கிருஷ்ணா நீங்க ரெண்டு பேரும் என்னை பெயர் சொல்லியே கூப்பிடுங்க. உங்ளை விட சின்னவன் நான்"
"பரவாயில்லை. உங்க பதவிக்கு ஒரு பெரிய மரியாதை வேணுமில்லையா"
"அதுசரி நான் யூனிஃபோர்மில் இருக்கும் போது அதுவும் ஸ்டேஷனில் இருக்கும் போது நீங்க சொல்றது சரி. இப்போ சகஜமாக சேகர் என்றே கூப்பிடுங்க"
"சரிடா.. சேகர்" என்று இருவரும் சொல்லி விட்டு சிரித்தனர்.
"என்ன..டா..வா?"
"சொரி சொரி சேகர் சும்மா தமாஷ் பண்ணிப்பார்த்தோம்."

“பரவாயில்லை அப்படிக் கூப்பிட்டதும் நல்லாத்தான் இருக்குடா...” என்று சேகர் சொல்ல இருவரும் சிரிக்க சேகரும் சிரித்தார்”
“கிருஷ்ணா சோதி டீ ஏதும் குடித்துவிட்டு போகலாமா?” – சேகர் கேட்டார்
“ம். அதுக்கென்ன”.
“கிருஷ்ணா ஒரு கிலோ மீட்டர்ல நல்ல டீக்கடை இருக்கு. அங்கே பாத் ரூமும் இருக்கு. ஒண்டுக்கு ரெண்டுக்கு போக வசதியும் இருக்கு”
“சேகருக்கு இந்த ரூட் நல்ல பழக்கம் போல”
“பின்னே.. நான் போன வருஷம் தம்புள்ளயில் சப் இன்ஸ்பெக்டராய் இருக்கும் போது இந்தப்பக்கம் எல்லாம் வருவேன். அந்த டீக்கடையில் இருப்பவர்களுக்கும் என்னை நன்கு தெரியும்”
டீக்கடைக்கு ஓரம் கட்டி ஜீப்பை நிறுத்தினான் கிருஷ்ணா.
சேகரைக் கண்டதும் டீக்கடையில் உள்ள அன்ரி முகம் மலர்ந்தவராய்,
“ஆ.. அபே மாத்தயா! கோமத.. எண்டகோ மாத்தயா!” மூவரையும் வரவேற்றாள் அந்த அன்ரி.
சேகர் சைகையால் பாத்ரூம் போகனும் என்று கேட்க. மூவரையும் அழைத்துச் சென்றான் ஒரு பொடியன்.
மூவரும் சிரம பரிகாரம் முடித்து முகம் கழுவி டிஷூப் பேப்பரால் துடைத்துக் கொண்டு வர.
இடியப்பம் சொதி வடை டீ எல்லாம் மூவருக்கும் ரெடியா இருந்தன.
கிருஷ்ணா பணம் கொடுக்க அந்த அன்ரி, சந்தோஷமாய் மறுக்கவும், கிருஷ்ணா வலுக்கட்டாயமாக கொடுத்தான்.

“சூப்பர் சாப்பாடுடா கிருஷ்ணா. சேகர் மிக்க நன்றி இந்த இடத்தைக் காட்டியதுக்கு. இது மத்தியானம் வரை பசிக்காது”

ஜீப் கண்டியை நோக்கிப் பயணத்தைத் தொடர்ந்தது. போகும்போது சேகர் தன்னைப் பற்றியும் தான் வேலை செய்யும் போது கிடைத்த அனுபவங்களைப் பற்றியும் சொல்லிக் கொண்டு வந்ததில் நேரம் தூரம் கடந்தது தெரியவில்லை. 8.50க்குத் தம்புள்ளையை அடைந்தனர்.
“சோதி நேசனைக் கூப்பிடுவமா”
“உம் கூப்பிடுங்க சேகர்”
“கிருஷ்ணா ஜீப்பை கொஞ்சம் ஓரம் கட்டுங்க. அப்படியே உங்க ரெண்டு பேரின் போனையும் மியூட் பண்ணுங்க ஜீப்பில் யூ பி எஸ் சவுண்டையும் மியூட் பண்ணுங்க”
சேகர் வாகனங்களின் ஹோரர்ன் சத்தம் எல்லாம் உள்ளே வரவேண்டும் என்பதற்காக,கண்ணாடியை இறக்கி விட்டார். , தனது போனையும்,வோக்கி டோகியையும் அணைத்து விட்டு, பாலாவின் போனை எடுத்து ஸ்பீக்கரை ஓன் பண்ணிட்டு நேசனை அழைத்தார்.
“பாலா சொல்லு”
“நேசன் தம்புள்ளக்கு வந்துட்டேன்.”
“அப்ப ஒன்பதரை ஒன்பதே முக்காலுக்கு வந்து விடுவாய்”
“ நேசன் முன் டயர் காத்துக் குறையுது. பக்கத்துல போய் டயரை செக் பண்ணித்தான் வரவேணும்.”

"பரவாயில்லை பாலா. எங்களை 12 மணிக்கு சந்திக்கச் சொல்லி அந்த விஐபி கோல் எடுத்தார். நீதான் பத்து மணிக்கு முதல் வந்து விடுவாயே பஸ்யாலைக்குப் போக ஒன்றரை மணித்தியாலம் போதும். போற வழியிலேதான் நாங்க பூப்பறிக்க வேண்டும். பிரசினையில்லை எல்லாம் பக்காவா ஒழுங்கு பண்ணிட்டேன்.
பஸ்யால போறம் காசை வாங்குறோம் நேரா கொழும்புதான். சரிடா நீ நேரில் வா மிச்சம் பேசுவம்."
போன் துண்டிக்கப்படவே சோதியும் கிருஷ்ணாவும் சேகரைப் பார்த்து புன்னகைத்தனர்.
"கிளம்பலாமா?" கிருஷ்ணா கேட்க
"உம் ஓகே"என்றார் சேகர்.
ஜீப் போய்க் கொண்டிருந்தது.
நேரம் காலை 9.20
சோதியின் ஜீப் கண்டிக்குள் நுழைந்தது.
சேகரின் போன் ஒலித்தது.
'கொன்றோல் ரூம் கோல்' என்று இவர்களிடம் சொல்லிவிட்டு, அழைப்பை ஏற்றார்.
"சொல்லுங்க ராஜன்"
"சேர் உங்க லொக்கேஷனுக்கு 50 மீற்றரில் சந்தியில் இடது பக்கத்தில் இருந்து நீங்க போற ரூட்டுக்கே திரும்புவதை நேசனின் போன் லொகேஷன் காட்டுது."
"கிருஷ்ணா ஜீப்பை கொஞ்சம் முன்னுக்குப் போய் ஓரமாய் நிற்பாட்டுங்க"
"சோதி பின்னுக்கு நேசனின் வான் வருது, உங்கட ரியர் வ்யூவிலே பாருங்க. பச்சைக்கலர் வேன் ஒன்று. நம்பர் 9991,

அதை முன்னுக்கு விட்டு கவனிச்சுக் கொண்டு ஃபோலோ பண்ணுங்க."

கிருஷ்ணா ரியர்வியூவிலே பார்க்க மிக அருகில் வந்து விட்டது அந்த பச்சைக் கலர் வேன். டிராஃப்பிக் கொஞ்சம் இருந்ததால் மெதுவாக அந்த வேன் இவர்களின் ஜிப்பைக் கடந்தது.

"சேகர்.கொண்ட்ரோல் ரூமுக்கு இருப்பவர்களுக்கு எப்படி இந்த வான் கலர்,நம்பர் பார்க்க முடியுது.?"– கிருஷ்ணா ஆச்சரியத்தோடு கேட்டான்.

அது எல்லாம் ஜீ.பி.எஸ்.உதவியிலே ரூட்டையும் லொகேஷனயும் பார்க்கத்தான் முடியும். ஆனால் பாலாவை பிரிச்சு மேய்ஞ்சுதான் நம்பர்,கலர் எல்லாம் பெற்றோம்."என்றார் சேகர்.

"ஓ..அப்படியா?"

கிருஷ்ணாவும் ஜீப்பை மெதுவாக நகர்த்திக் கொண்டு அந்த வேனைத் தொடர்ந்தான்.

"கிருஷ்ணா யூ பி எஸ் சவுண்டை மியூட் பண்ணியே வையுங்க அப்படியே உங்க ரெண்டு பேர் போனையும் ஏசியை நிற்பாட்டுங்க கண்ணாடியையும் இறக்கி விடுங்க. எந்த நேரமும் நேசன் இப்ப கோலெடுக்க வாய்ப்பு இருக்கு"

சேகர் சொன்ன மாதிரி செய்தார்கள் சோதியும் கிருஷ்ணாவும்.

சொன்ன மாதிரியே நேசனின் அழைப்பு வந்தது.

"பாலா..எங்கே நிர்கிராய் இப்ப?"

"நேசன் கண்டிக்குள் எண்டர் பண்ணிட்டேன். நீ எங்கே இப்போ ?"

“பாலா எனக்கு பூக்கடையில் இருந்து ஒரே கோல் வந்தபடி. அதனாலே நான் கிளம்பிட்டேன். பூக்கடையில் போய் பூ வாங்கினவுடன் போன் பண்ணுறன். அங்கு வந்து சேர். சரியா?”
“சரிடா நீ போ. நேரம் குறைவாகவே இருக்கு. நீ போ. நான் ஒரு மாதிரி ட்ராஃப்பிக்கை சமாளிச்சு வாறன். எப்படியும் உன்னைப் பார்த்து விடுவேன். இந்த பூக்கடை எங்கடா இருக்கு”
“அதுதான் உனக்கு தெரியுமே. பஸ்யால ரோட்டில திருப்பின உடன் வாற முதல் சந்தியிலே வலது பக்கம் ஃபெர்ணாண்டோ ரொட்டில் மூன்றாவது வீடு. பிங்க் கலர் கேட்”
“ஓ..அதுவா.. வாரன். நீ போ”
போனை அணைத்தார்.
“சோதி இனி அலெர்ட்டாக இருங்க நாங்க பின் தொடர்வது அவனுக்குத் தெரியக்கூடாது”
“கிருஷ்ணா நேசன் போனில் சொன்ன ரூட் அடையாளம் புரிஞ்சுது தானே. அந்த இடம் தான் அவன் போகிறான். நான் சந்தியிலே இறங்கி ஆட்டோவிலே மெதுவா வாறன். சோதி உங்க போனில் லொகேஷனை ஓன் பண்ணி இருக்கட்டும். அந்த இடம் போனதும் நீங்க கொஞ்சம் தள்ளி இறங்கி அந்த இடத்தையும் அவனையும் ஃபோலோ பண்ணுங்க என் நம்பர் இருக்குதுதானே. அதுக்கு முடிஞ்சா விடியோ கோல் நீங்க ஷேர் பண்ணுங்க நீங்க பார்க்கிறதை”
“ஆங்.. சோதி நேசனுக்கு உங்களைத் தெரியுமா?”
“தெரியச் சான்ஸ் இல்லை அவனுக்கும். இருந்தாலும் நான் சமாளிச்சுக் கொள்கிறேன்”

“குட். நீங்க போங்க” சேகர் இறங்கிக் கொண்டார். ஃபெர்னாண்டோ ரோடில் வேன் திரும்புவது தெரிந்தது. கிருஷ்ணா ஜீப்பையும் அந்த ரோடுக்கு திருப்பினான். சந்தியில் ஒரு பேக்கரி ஃபூட்ஸ் விற்கும் கடை இருந்தது, அதன் முன்னால் ஓரமாய் நிறுத்தினான்.

“சோதி நீ இறங்கி மெதுவாக போ. நான் இந்த பேக்கரியில் இருந்தே கவனிச்சுக் கொண்டு ரெடியாக இருக்கேன்”

சோதி அந்த வேன் இருந்த இடத்துக்குப் போய் வேனுக்குள் பார்த்தான் யாரும் இல்லை.

வேனின் இடது பக்கம் தான் அவன் நின்றான். வேன் கண்ணாடிகள் ஏற்றப்பட்டு கதவுகள் சாத்தப் பட்டு இருந்தன.

முன் பக்கக் கண்ணாடியினூடாக உள்ளே பார்த்தான். நேசன் போனை உள்ளேயே வைத்து விட்டுப்போய் விட்டான்.

அந்தப் போனுக்கு ஒரு அழைப்பு வரவே அதன் திரையில் ஒரு நம்பர் மின்னியது.

அந்த நம்பர் பாலாவினுடையது. சேகர்தான் சும்மா நேசனுக்கு ஒரு கோல் கொடுக்கிறார் என்பதைப் புரிந்து கொண்டு சுற்று முற்றும் பார்த்தான். சந்தியில் இவன் வேனுக்கு முன் ஒரு ஓட்டோ நின்று கொண்டிருக்க. அதில் சாய்ந்து கொண்டு டீ குடித்துக் கொண்டிருந்தார் சேகர். கிருஷ்ணா கடை வாசலில் நின்று கொண்டு டீ குடித்துக் கொண்டு இருந்தான்.

சோதி அந்த வீட்டுக்குள் போக நினைத்து அதன் கேட்டை திறக்கப்போனான். அப்போ ஒரு ஜீன்ஸ்

பெனியன் அணிந்த ஒரு பெண்ணுடன் நேசன் வீட்டுக்குள் இருந்து வெளிப்பட்டான்.

"யாரு?"–நேசன் கேட்டான்.

"நான் மது நண்பன், யோகி. மது நிற்கிறாரா?"

"மதுவா... அப்படி யாரும் இங்கே இல்லையே"

"இந்த அட்ரெஸ் தானே கொடுத்தான்"–சோதி

"நம்பர் மூன்றா மூன்று 3A ஏயா?" –நேசன்

"வேறு வீடேதும் பக்கத்திலே இருக்கா?"

"ஓம் பக்கத்துல போற லேன்ல கடைசியிலே இருக்கு."

"ஓ அப்படியா சொறி.. சொறி..போய்ச் செக் பண்ணுறேன்.

சோதி சமாளித்துக் கொண்டே பக்கத்து லேனுக்குள் போவது போல பாசங்கு பண்ணினான். நேசன் அந்தப் பெண்ணுடன் கிளம்பினான்.

சோதி திரும்பி அந்த வீட்டுக்குப் போய் வாசலில் இருந்த பெல்லை அமுக்கினான். 40 வயது மனிதர் கதவைத் திறந்தார்.

'வணக்கம்' சொன்னான்.

அவரும், 'வணக்கம்' என்று சொன்னார்.

அப்ப இவர் தமிழ்தான் போல் இருக்கு.

"ஐயா, நான் பேரதெனியா மெடிகல் கம்பஸ் மாணவன். எனது நண்பனின் வருங்கால மனைவி மது என்பவரின் வீடு தேடிக் கொண்டு இருக்கேன். நம்பர் 3, ஃபெர்னாண்டோ ரோட் இதுதானே?"

"இப்பதானே என் மகளும் மருமகனும் உங்களிடம் சொன்னார்கள்"

"ஓம் ஐயா அவுங்க 3A ஏயைச் செக் பண்ணச் சொன்னாங்க. அங்கே யாரும் இல்லை"

“எனக்கும் இந்தப் பக்கம் கம்பஸ் படிக்கிற பொம்பிளைப் பிள்ளைங்க பக்கத்தில் இருப்பதாகத் தெரியவில்லையே”

“சரி அய்யா நான் அட்ரஸ் இல்லாமல் வந்துட்டேன் போல மன்னிச்சுக் கொள்ளுங்க.. வாரன் அய்யா.” என்று விட்டுத் திரும்ப நினைத்தவன்போல்

“அய்யா மன்னிக்க வேண்டும்”

“உங்க மருமகனைப் பார்த்தால் எங்கட கம்பஸ்ல படிச்ச சீனியர் ஞாபகம் வருது”

“இருக்காது, அவர் கொழும்பில் கார்மண்ட்ஸ் வைத்திருக்கார் என்ர மகளுக்கும் அவருக்கும் அடுத்த மாதம் கலியாணம்”.

“ஓ அப்படியா. எனது அப்பாவும் கொழும்பில் தான் டெக்ஸ்டைல் வைத்திருக்கார். இவர் கார்மண்ட்ஸ் பெயர் என்ன ஐயா?”

“தெரிய வில்லை. நீங்க என்ன நிறைய கேள்விகள் கேட்கிறீர்கள்”

“மன்னிக்க வேண்டும் ஐயா. கொஞ்சம் பொறுங்க” சொல்லி விட்டு சேகரை அழைத்தான்.

அடுத்த நிமிடமளவில், அந்த வீட்டு வாசலில் ஜீப் ஒன்று வந்து நிற்கவே அந்த மனிதர் சற்று பீதியுடன் திகைத்தார்.

ஜீப்பில் இருந்து, சேகரும் கிருஷ்ணாவும் இறங்கினர். உள்ளே வந்தனர்.

“யார் நீங்க?” பயத்துடன் வினவினார்.

“சேகர் தனது போலிஸ் அடையாள அட்டையைக் காட்டினார்”

போலீஸ் இன்ஸ்பெக்டர்.

"உள்ளே வாங்க சேர்"
"உட்காருங்க"
"ஐயா பயப்படாதீங்க உங்களுக்கு உதவி செய்யவே வந்தோம்"
"உதவியா? ஏன் என்ன நடந்தது எனக்கு?"
"இனி எதுவும் நடக்கக் கூடாது என்றுதான் வந்திருக்கோம்"
"என்ன சொல்கிறீர்கள் என்று விளங்கவில்லையே சேர்"
"உங்க மருமகன் பெயர் என்ன என்று சொல்லுவீங்களா ஐயா?"
"ஆனந்த வேல். கொழும்பில்..."
'உம்..' சேகர் கொஞ்சம் வாயை மூடிக் கொளுங்கள்– என்பது போல் சைகையுடன் காட்ட அவர் மேலும் சொல்வதை நிறுத்தினார்.
"கிருஷ்ணா அந்த பாஸ்போர்ட்டுகளை எடுங்க" கிருஷ்ணா தனது பையில் இருந்து அவற்றை எடுத்துக் கொடுத்தார்.
"இதோ பாருங்கள் இதில் யார் உங்க மருமகன்?
பெரியவர் அதை வாங்கிப் பார்த்தார். நேசனின் பாஸ்போர்டைக் காட்டிச் சொன்னார். இவர்தான்."
"என்ன பெயர் அதில் இருக்கிறது என்று பாருங்கள்?"
"அமலநாதன் நேசன். ஆ.. இது வேறு ஒரு ஆள்"
"ஒரே ஆள்தான் ஐயா. உங்க மருமகனுடைய பாஸ்போர்ட்.–மன்னிக்க வேண்டும். இவன் உங்களுடைய மருமகனாக இருக்கத் தகுதி இல்லாத ஒரு பயங்கரக் குற்றவாளி. போலீஸால் தேடப்படுபவர்கள் இவர்கள் இருவரும்.."

“என்ன சேர் சொல்றீங்க.”
“பொறுங்கள் ஐயா. உங்கள் பெயர்?”
“பாரதிதாசன்”
“மிஸ்டர் பாரதிதாசன் உங்களோடு இந்த வீட்டில் வேறுயார்?”
“நானும் என் மகள் மட்டுமே. நான் ஒரு ரிட்டையர்ட் ஆசிரியர். என் மனைவி ரெண்டு வருஷத்துக்கு முதல் சுகமில்லாம இருந்து இறந்து விட்டாள். அவள் போன பின் நான் வொலன்ரியரா ரிட்டையர் பண்ணி என் மகளைக் கவனித்துக் கொண்டு இருக்கிறேன்.52 வயசு எனக்கு”
“ஐயா என்ன பிரயோசனம்? வாங்க எங்க கூட வாங்க உங்க மகளுக்கு ஏதும் ஆபத்து நேருவதற்குள் தடுக்க வேண்டும். போகும்போதே பேசிக் கொண்டே போகலாம். வாங்க.”
“அய்யயோ என்னென்னமோ சொல்றீங்களே சேர்”
“ஒன்றும் பயப்படாதீங்க..வாங்க வாங்க க்விக் அப்புறம் பேசலாம்”
அவரையும் ஏற்றிக் கொண்டு ஜீப் நகர்ந்தது.
நேசனின் கோல் வந்தது...
இன்ஸ்பெக்டர் உடனே சோதியையும் கிருஷ்ணாவையும் தோளில் தட்டிவிட்டு.
பெரியவரை மூச்சுக் காட்டாமல் இருக்கச் சொல்லி விட்டு, ஜன்னல் கண்ணாடியை இறக்கினார். கிருஷ்ணா ஜீப்பை ஓரமாய் நிறுத்தினான்.
ஸ்பீக்கரில் போனை விட்டார்.
“பாலா இப்போ எங்கேடா இருக்காய்?”

“நேசன் அதை ஏன் கேட்குறாய். திருப்பி பஞ்சர் ஆகி ஒட்டி காற்றடிச்சு வாரன். இப்பத்தான் வாத்தி வீட்டுக்குப் போனேன். நீங்க வெளிக்கிட்டுப் போய் 10 நிமிஷம் என்று சொன்னான் அந்தாள். நீ எங்கே நிற்கிறாய்.?”

“நாங்க இப்ப ஒரு சாப்பாட்டுக் கடையிலே இருக்கம். நான் மோர்னிங்கிலிருந்து ஒண்ணும் சாப்பிட வில்லை அதுதான் தாரிணிக்கு ஸ்பெஷல் ஜூஸ் ஓடர் பண்ணிட்டு பனிஸ் சாப்பிட்டுக் கொண்டு இருக்கன்.”

“எந்த ஹோட்டல்டா”

“52ஆம் கட்டை நம்ம ஹாஜியார் கடைதான்”

“அப்ப நீ அங்கேயே நிற்கிறாயா. இல்லை போகப் போறியா?”

“இல்லைடா நம்ம விஐபி கூப்பிட்டுக் கொண்டு இருக்காண்டா..நான் முன்னுக்குப் போறன். நீ எப்படியாவது வந்து சேர். நான் அங்கே செக்கியூரிட்டி கார்ட்ல உன் பெயரைச் சொல்லி விடச் சொல்லுறேன். நீ கொஞ்சம் உள்ளே நடந்து வந்தாயென்றால்.. ..”

“டேய். வந்திரண்டா. ட்ராஃபிக் போலீஸ் எல்லா இடமும் இருக்காங்கடா. சமளிச்சு ஸ்பீடா வரப் பார்க்கிறேன்”

“வந்து சேர்”

போனை துண்டித்து விட்டு, பாரதிதாசனைப் பார்த்தார்.

“ஐயா அவுங்க எங்கே போவதாகச் சொன்னாங்க? மருமகன்.. இல்லை இல்லை அந்தப் பாவி மகளையும் கூட்டிக் கொண்டு தன்னுடைய கார்மண்ட்ஸ்க்குக் கூட்டிப்போவதாக சொன்னான்”

“கார்மண்ட்ஸ் அட்ரெஸ் தந்தானா?”
“ஓம் சேர்..” என்ற படி பர்ஸில் இருந்து ஒரு விசிட்டிங்கார்டைக் கொடுத்தார்.
சேகர் வாங்கிப் பார்த்தார்.
அது போலி கார்ட். அது மாதிரி நிறைய பாஸ்போர்ட் இருந்த பேக்கில் இருந்தன, விசாரித்துப் பார்த்ததில் அப்படி ஒரு கார்மண்ட்ஸும் இல்லை அட்ரெஸ்ஸும் இல்லை.
“ஐயா இது போலி கார்ட். உங்களையும் மகளையும் நல்லாவே ஏமாற்றி விட்டான்”,
என்று சொல்லிவிட்டு, கிருஷ்ணாவிடம்,
“கிருஷ்ணா நீங்க ட்ராஃபிக் போலிஸ் பயமில்லாமல் வேகமாப் போங்க.”
“நீங்க சொல்லிட்டிங்க அல்லவா. உங்களுக்கு அந்த ஹாஜியார் கடையைத் தெரியுமா?”
“உம். இன்னும் ஐந்து கிலோ மீட்டரிலே வரும்”
“ஐயா நேசன் பேசினதைக் கேட்டீங்கள் அல்லவா? உங்களுக்கு பாலாவைத் தெரியுமா?”
“தெரியும் சேர் அவன் இரண்டு மூன்று தரம் நேசனுடன் வீட்டுக்கு வந்திருக்கான். சேர் நேசனோடு பாலாவைப் போல் பேசுறீங்க. அவன் கண்டு பிடிக்க மாட்டானா? பாலா எங்கே?”
“ஐயா, பாலா இப்ப போலீஸ் கஸ்டடியில இருக்கான். நேசனையும் அவனுங்க சேர்ந்த ஆளுங்களைப் பிடிக்கத்தான் இப்போ நாங்க கிளம்பியிருக்கோம்”
“பயப்படாதீங்க உங்க மகளைப் பத்திரமாக மீட்டுத் தருவது எங்க கடமை”

அப்போ, சேகரின் போன் வைப்ரேட் ஆகவே, எடுத்துப் பார்த்தார். கொண்ட்ரோல் ரூமிலிருந்துதான்.

"குட் மோர்னிங் சேர்"

"சொல்லுங்க ராஜ்"

"சேர் நீங்க போற ரூட்டிலெயே நேசனின் லொக்கெஷன் ஒர் கிலோ மீற்றர் தான். அந்த போனுக்கு ஒரே லொக்கேஷன்லேருந்து நாலு கோல்ஸ் வந்திருக்கு."

"அந்த லொகேஷன் எங்கே இருக்கு?"

"அது பஸ்யால லொக்கேஷன் தான்"

"சரி நீங்க அதை அப்படியே ஷூம் பண்ணி ஸ்கிரீன் ஷொட் எடுத்து எனக்கும் பஸ்யால போலிஸ் ஸ்டேஷனுக்கும் அனுப்புங்க. நான் அங்கு இன்ஸ்பெக்டருடன் பேசுகிறேன். எஸ்.பி. சேருக்கும் ரிஃபர் பண்ணுங்க."

"ஓகே சேர்"

"தாங்யூ ராஜ்"

"சேகர் தன் போனில் இருந்து பஸ்யால போலிஸ் ஸ்டேஷன் இன்ஸ்பெக்டரை அழைத்தான்"

"ஹலோ. மன்னார் பொலிஸ் ஸ்டேஷன் இன்ஸ்பெக்டர் சேகர் ஹியர்"

"…………………….."

"ஓ. வேணிலான்.. இன்னும் அங்கே தான். இருக்கீங்களா. அப்ப எனக்கும் வேலை சுலபமாப்போச்சு"

"………………….."

"ஓம் வேணிலான். நாங்க அக்யூஸ்டை பின் தொடர்ந்து தான் போறோம். உங்களுக்கு லொகேஷன்

ஷேர் பண்ணச் சொல்லியிருக்கேன். நான் சிக்னல் தரும் போது நீங்க ஃபோர்ஸோடு அங்கே வந்து விடுங்க. அந்த லொகேஷன் பஸ்யால ஸ்டேஷனுக்கு ஒரு கிலோமீற்றர் தூரம் தான்.”

“ ..........................”

“இப்ப ஒருவரையும் அனுப்பத் தேவையில்லை நாம கண்காணிக்கிறோம் என்றால் பார்டி அலேர்ட் ஆகிவிடுவாங்க. அப்புறம் கிட்ட வந்த உடன் ஒரு ஆட்டோ பிடித்து மாஸ்டர் பாரதி என்பவரை அங்கு அனுப்புறன். அவரை பத்திரமா பார்த்துக் கொள்ளுங்க. அவர் எங்களோடு தான் இருக்கார்”

“ .......................”

“ஓகே தாங்க்ஸ் வேணிலான். அப்புறம் கூபிடுகிறேன்”

ஜீப் ஹாஜியார் கடையை நெருங்க முன்,

நேசனின் பச்சைக்கலர் வேன் கிளம்பி விட்டது.

“சேகர். அதோ போகிறது. ஒரு நிமிஷம் முன்னுக்கு வந்திருந்தா அமுக்கி இருக்கலாம்”

“பரவாயில்லை கிருஷ்ணா நீங்க போங்க. சோதி நான் சொல்றதைக் கவனமாக் கேளுங்க”

சேகர் கிருஷ்ணாவுக்கும் சோதிக்கும் விபரித்துக் கொண்டு இருந்தான்.

அப்போது கொண்ட்ரோல் ரூமிலிருந்து ஒரு ஜீ.பி.எஸ். வீடியோ வந்தது.

உடனே அழைப்பும் வந்தது.

“சொல்லுங்க ராஜ்”

“சேர், இன்னும் அரை மணி நேரத்தில் நான் ஷேர் பண்ணின லொகேஷனுக்கு நீங்க நெருங்கிக் கொண்டு இருக்கீங்க.அந்த லொகேஷன் வீடியோ பாருங்க.. அந்த

பில்டிங் எலைட்ரோன் மீடியாவுக்கு சொந்தமானது நாலாயிரம் சதுர அடியில் இருக்கு. கேட்டில் இருந்து உள்ளே 3 நிமிஷ நடை. உள்ளே இரண்டு கட்டிடங்கள். சுற்றை பெரிய மதில் 5 அடி உயரம் முன்னால் மட்டுமே கேட், செக்கியூரிட்டி கார்ட் ரூம் தெரியுது. அப்புறம் சுவரின் முன் பாகம் ஒரு லேன்–அது இந்த பில்டிங் கேட்டுக்கு மட்டுமே. சுற்றி வர வீடுகள் நெருக்கமா இருக்கு. ரோடு பக்கம் இருக்கும் சுவரோடு ஒரு பெரிய மரம் ஒரு எலெக்ட்ரிக் ட்ரான்ஸ்ஃபோர்மர் இருக்கு. காமராக்கள் எத்தனை இருக்கு என்பது தெரியவில்ல. பார்த்து ஆக்ஷன் எடுங்க சேர்"

"ஓகே ராஜ் தாங்க் யூ"

"சோதி, கிருஷ்ணா கேட்டீங்க இல்லையா?"

"ஓம். சேகர்"

பஸ்யாலையைத் தொட்டது ஜீப்.

"கொஞ்சம் ஓரம் கட்டுங்க கிருஷ்ணா"

சேகர் கீழே இறங்கி பக்கத்தில் தெரிந்த ஆட்டோ நிறுத்தும் இடத்தில் இருந்து ஒரு ஆட்டோவை வர வழைத்து ட்ரைவரிடம் விபரமாக சொல்லிவிட்டு,

"ஐயா இறங்குங்கு, வாங்க, நீங்க ஸ்டேஷனில் காத்திருங்க. கவலைப்படாமல் இருங்க"

"எப்படியும் உங்க மகளை மீட்டுக் கொண்டு வந்து விடுகிறோம்"

பாரதிதாசன் நம்பிக்கையோடு இறங்கி ஓட்டோவில் ஏறிக் கொண்டார்.

ஓட்டோ போனதும் சேகர் ஏறிக் கொண்டதும் ஜீப் கிளம்பியது.

எலைட்ரோன் சுற்றுச் சுவர் தெரிந்தது.

கிருஷ்ணா அந்த சுவர்தான். லொக்காஷனுக்கு வந்துட்டம். அந்தப்பெரிய மரத்துக்கு கீழே கடைகள் கிட்ட நிற்பாட்டுங்க. நான் ஏதும் கமராக்கள் தெரியுதா என்று பார்க்கிறன்."

"சேகர் நான் அந்த மரத்தில் ஏறி விடுகிறேன்"

"சுப்பர் சோதி. நீங்க ஏறிட்டு உள்ளே நாய்கள் ஏதும் இருக்கா என்று பாருங்க. இருந்தாலும் என்னுடைய போனில் அனிமல்ஸ் வொய்ஸ் ஸ்ட்ரெயின் ப்ளொக் அப்ளிகேஷன் டவுன் லோட் பண்ணி இருக்கேன் அதை ஒன் பண்ணி விட்டால் நாயோ பூனையோ கிட்ட வராது,உங்கட போனிலும் டவுன்லோட் பண்ணுறன். போனைத் தாங்க"

சோதி போனைக் கொடுத்தான்.

அந்த ஆப் டவுன்லோட் பண்ணிட்டு போனைத் திருப்பிக் கொடுத்தார் சேகர்.

சோதி இறங்கினான்.

மரத்தருகில் வந்து சுற்றும் கவனித்தான், 10யார் தள்ளி இருந்தது மெயின் ரோட்.

வாகனங்கள் உன்னைப்பிடி என்னைப்பிடி என்ற வேகத்தில் கவனமா ஓடிக் கொண்டிருந்தன. சற்றுத் தள்ளி மீன் வியாபாரிகள் தற்காலிக கடைகள் அமைத்து வியாபாரத்தில் மும்முரமாய் இருந்தனர். கடைகளுக்கு முன் இருப்பவர்களுக்கு இலேசில் இந்த மரம் தெரியாது. சோதி சர சரவென மரத்தில் ஏறி கிளைகளில் மறைந்து கொண்டே சுற்றுச் சுவர்களுக்கு உள்ளே இருந்த சூழ்நிலைகளை அவதானிக்க ஆரம்பித்தான்.

சேகரை போனில் அழைத்தான்.

“சேகர் நேசனின் வேன் உள்ளே நிற்கிறது. அதோடு ஒரு ஆம்புலன்ஸ் நிற்கிறது. இரண்டு கார்கள் நிற்கின்றன. முன்னுக்கு உள்ள பில்டிங்குக்கு வலது பக்கம் இன்னொரு பில்டிங்க் இருக்கு அதன் முன்னும் பக்கமும் ரவுடிகள் மாதிரி மூன்று பேர் நிற்கிறாங்க. கையில் ஆயுதங்கள் இல்லை ஆனால் ஆயுதமாக நீளமான கட்டைகள் ஐந்து முதலாவது பில்டிங்கின் வலது மூளையில் இருக்கு. இந்த மரத்துக்கு நேரே கார்களும் ஆம்புலன்ஸும் நிற்பதால் மரத்திலிருந்து இறங்கினாலும் தெரியாது.”

“……………….”

“சரி இறங்கி போறன்”

இறங்கினான். சேகரும் ஜீப்பில் இருந்து இறங்கினார்.

“சரி பார்த்துப் போங்க. நீங்க வாசலால் வாங்க நான் மரத்திலேறி உள்ளே தருணம் பார்த்து குதிக்கிறேன்.”

‘எலைட்ரோன் மீடியா & ஸ்டுடியோ’ என்று ஆங்கிலத்தில் தங்க எழுத்துக்களுடன் மின்னிய கருப்பு போர்டை தன் மீது ஒட்டிக் கொண்டதால் கம்பீரமாய் காட்சி அளித்த வாசல் புற சுவரில் இருந்த அழைப்பு மணியை அழுத்தாமல் கேட்ல் இருந்த பூ டிசைன் கிரில் இடை வெளியூடாக

அண்ணே, அண்ணே என்று அழைத்தார்.

செக்கியூரிட்டி சிறு இடை வெளி விட்டுத் திறந்து

“யாரு பாலாவா?” என்று கேட்டான்,

“ஓமண்ணே. நேசன் வந்துட்டாரா?”

செக்கியூரிட்டி நம்பிகையோடு கதவைத் திறக்க உள்ளே நுழையும் போது ‘ஃபெஸ்ட் பில்டிங்குக்கு வரச்

சொன்னார் உங்களை' என்று சொன்னார் செக்கியூரிட்டி. சொல்லிவிட்டு,
செக்கியூரிட்டி கேட்டைப் பூட்டினார்.
தன்னோட ரூமுக்குள்ளே போய்விட்டார்.
மரத்தில் இருந்து இறங்கிய சோதி பச்சை வானருகில் போய் பின்னுக்கு திரும்பி ஒருக்கா பார்த்தான். செக்கியூரிட்டியை ரூம் சுவர் மறைத்திருந்தது.
சோதி வானுக்கும் காருக்கும் இடையால் மறைந்தான். முதலாவது பில்டிங்கின் ஷெல்டருக்குள் போனான். பெரிய பூச்சாடி ஒன்று அடர்ந்த குரோடன் செடி இவனை மற்ற பில்டிங்கில் இருந்து யாரும் பார்க்க முடியாதவாறு மறைத்தது. அவனுக்குத்தெரியும் கமரா ஏதாவது தன்னை கண்காணித்துக் கொண்டு இருக்கும் என்று தெரியும்.
சற்று இயல்பு நிலையை நடையில் ஏற்படுத்திக் கொண்டான். கதவருகில் சென்று மெதுவாக தள்ளிப் பார்த்தான் திறந்தது. டக்கென உள்ளே நுழைந்து கதவைச் சாத்தினான். உள் ஹோல் லைட்டுகள் போடப் படாமல் இருட்டாகவே இருந்தது.
அந்த ஹோலுக்கு அடுத்து இன்னொரு ஹோல் அதுவும் இருட்டாகவே இருந்தது,
அந்த ஹோலுக்கு இடமும் வலமும் கோரிடோர் மாதிரி நீண்டிருந்தன. எந்தப் பக்கம் போகலாம் என்று யோசிக்க பின் தோளில் ஒரு இரும்புக் கரம் ஒன்று அழுத்தியது போன்று இருக்க திரும்பினான்.
"யாரு பாலாவா?"
"ஓமோம். நேசன் எங்க?"

செக்கியூரிட்டி சொன்னான்– “நீங்க வரீங்கன்னு. வாங்க நேசனைப் பார்க்க”
என்றவன் வலது பக்க கோரிடோரில் நடந்தான்
அவனுடன் சென்றான் வேறு வழியின்றி.
மூன்றாவது அறைப் பக்கம் கை காட்டிவிட்டு பக்கத்து ரூமுக்குள் நுழைந்து விட்டான்.
சோதி தான் நின்ற அறையின் கதவை திறக்க நினைக்க கதவை திறந்து கொண்டு கையில் கிளாஸ்கள் வைத்த டிரேயுடன் ஒருவன் வர கதவு அவனை நெருக்குவது போல் இருக்க, சோதி வலது கையால் சற்றுத் தள்ளித் திறந்து விட
டிரேயுடன் வந்தவன் தாங்க்ஸ் என்று விட்டு மற்ற கோரிடோரை நோக்கி நடந்தான்.
சோதி திறந்த கதவினூடாக உள்ளே பார்வையை விட்டான்
சற்று இருட்டாகவே இருக்க தைரியமாக நுழைந்தான்.
ஸ்பிரிங் கதவு தானாக மூடிக்கொள்ள, இருட்டு கும்மென்றது.
கண்களை திறந்து மூடிக் கொள்ளவே,
உள்ளே இரண்டடி தள்ளி இன்னொரு ரூம் கதவு கண்ணில் தெரிந்தது. மெதுவாகத் தள்ளித் திறக்கப் போனான். வலுவான கரம் ஒன்று அவன் தோளைப் பின்னோக்கி இழுத்து,
“ஹூ ஆர் யூ?”
அவ்வளவுதான் சோதி சற்று எகிறி ஒரு வெட்டு வெட்டினான் அவன் கழுத்தை நோக்கி,
‘ஹூம்.’ என்ற சிறு அலறலுடன் அந்த ஆள் சுவரோடு சரிந்தான்

அவனை சற்று ஓரமாக இழுத்து சரித்து உட்காரவிட்டு கதவைத் திறந்து உள்ளே நுழைந்தவன், அதிர்ச்சியில் உறைந்தான்.
உள்ளே ஹோல் மாதிரிப் இடம் விசாலமாக இருந்தது. நடுவில் ஒரு நீண்ட மேசை. சுற்றிவர சோபாக்கள். ஒரு ஷோபாவில் கனத்த தேகத்துடன் கோர்ட் சூட்டில் ஒருவன், கையில் மதுக் கிண்ணத்துடன் உட்கார்ந்து இருக்க பக்கத்தில் நேசன் உட்கார்ந்திருந்தான்.
மேசை மீது ஒருத்தி படுத்திருந்தாள். அவள் தாரிணியாகத்தான் இருக்கும்.
கோர்ட் போட்டவன் பேசினான். பேச்சு. மதுவின் கிறக்கத்தால் குளறியது,
"நேசன்.. சூப்பரோ சூப்பர். தக்களிப் பழமாய் இருக்காள். எங்கேதான் பிடிக்கிறியோ. நீ கொண்டு வந்த மூன்று பேரில் இவள்தான்...சூப்..பர்ர்ர்."
"சரி.. எப்ப மயக்கம் போகும்..?"
"இன்னும் 10 நிமிஷத்தில் .. நான் கொடுத்த மருந்து ரெண்டரை மணித்தியாலம் மயக்கத்தில் வச்சிருக்கும்"
"சரி உன் ஃப்ரண்டு வரலையே இன்னும்"
"செக்குரிட்டி இன்ரர்கோமில் சொன்னான் வந்துட்டான் என்று, வெளியிலேயே நிற்கிறானோ என்னவோ, அவன் போன் ஓஃபாகிப் போச்சுப் போல. போன் சார்ஜ் இறங்குது என்று சொன்னான் அப்பவே. நீங்க இருங்க நான் போய் பார்த்து வாரன்"
நேசன் எழுந்து வர ஷோபாவுக்குப் பின் சோதி மறைந்து கொண்டான்.
அவன் கதவைத் திறந்து போக இவன் சட்டென கதவைத் தாழ்ப்பாளிட்டான்.

விரைந்து போய் அந்த ஆளின் முன் நின்றான்.
அந்த ஆள் மதுக்கிளாசுடன் இவனை ஏறிட்டான்.
"யூ... யூ.."
"நேசன் எங்கே சேர்",
"ஓ நீ பாலாவா . அவன் உன்னைத் தேடித்தான் போறான். வெளியே.நீ பார்க்க வில்லை?"
சோதி பதில்சொல்ல வில்லை. வெட்டுக்கையை ஓங்கி அவன் கழுத்தில் இறக்கினான்.
'உவ்வ்..' என்ற சத்தத்துடன் ஷோபாவில் சரிந்தான். கிளாஸ் மதுவுடன் கீழே கார்பட்டில் உருண்டது. சோதி சேகரை அழைத்தான்.
"சேகர் நீங்க."
"நான் இப்போ உள்ளே வாசல் வரை வந்து விட்டேன்."
"நேசன் வெளியிலே வாறான். மறைந்து கொள்ளுங்கள்"
"பார்த்தேன். அவன் செக்கியூரிட்டிக்குப் போகிறான்"
"நீங்க உள்ளே வாங்க. ரெண்டுகோரிடோர் இருக்கும். வலது கோரிடோரில் வாங்க. டக்கென மூன்றாவது ரூமுக்கு வந்து கதவைத்திறவுங்க. இருட்டாக இருக்கும் உள்ளே வாங்க மற்ற கதவைத் திறக்கிறேன்"
ஒரு நிமிடம் இரண்டு நிமிடம் மூன்றாவது நிமிடம் கதவின் தாழ்ப்பாளை நீக்கி திறந்தான்.
"சோதி!"
"வாங்க சேகர்"
கதவை தாழிட வில்லை.
"சேகர் கதவின் அந்த சைட் நில்லுங்க", என்று கிசு கிசுத்தான்.

சேகர் எதிர்ப் புறம் நிற்க, கதவைத் திறந்து 'பாலா' என்று அழைத்த வண்ணம் உள்ளே நேசன் நுழைய..அவன் கழுத்தில் இடியாக விழுந்தது சோதியின் கை.

சேகர் ஆச்சரியமாக சோதியைப் பார்த்தான். நேசனை இழுத்து குண்டனுக்குப் பக்கத்தில் கிடத்தினான். பார்க்கிறவர்களுக்கு இருவரும் குடிச்சு மயங்கிட்டாங்க என்றுதான் நினைப்பர்.

"சோதி இந்த இரண்டு பேரை மட்டுமா? இல்லை இன்னும் வேறு யாரையும்...?"

இந்த ரூம் வாசலில் ஒரு தடியன் கிடக்கிறான்.

"வாவ் சூப்பர் சோதி"

"சூப்பர் இருக்கட்டும் தாரிணி மயக்கத்தில் இருக்காளே"

அப்பத்தான் சேகர் மேசைக்கு மேல் பார்த்தார்.

"ஓ..தாரிணியா?"

"இருக்கட்டும். நான் வேணிலான் ஃபோர்சை வரச்சொல்லுறேன்."

"வாங்க வெளியால மற்ற ரூமுக்குள் போவோம்"

இருவரும் வெளிவந்து. கதவை தாளிட்டனர்.

முதலாவது ரூமைத் திறந்தார்கள்

சேகர் கையில் ரிவோல்வர்.

அதற்குள் பெரிய கட்டில் பஞ்சணையுடன் இருக்க சுற்றி வர வீடியோ கமராக்கள் அவற்றின் ஸ்ராண்டுகளில் பொருத்தப் பட்டிருக்க, ஃபோக்கஸ் லைட்ஸ் (அணக்கப்பட்டிருந்தன) ஒரு ஸ்ருடியோ செட்டப்பில் அது காணப் பட்டது.சுற்றி வர பார்த்ததில் யாரும் இல்லை.

இரண்டாவது ருமைத் திறந்தார்கள்... உள்ளே சுற்றி வர செயற்கை இருட்டிருக்க நடுவில் ஒரு பெரிய கட்டிலில் லைஃப் ஷோவில் இரண்டு வெளிநாட்டுக் காரர்களுடன் இரண்டு பெண்கள் ஒரு துண்டு துணியில்லாமல். கட்டிலைச் சுற்றி இருவர் படம் பிடித்துக் கொண்டிருந்தனர். கமுக்கமான ட்ரம்ஸ் ஒலித்துக்கொண்டிருந்தது.

கதவடியில் போடப்பட்டிருந்த நாலைந்து ஷோபாக்களில் இருந்தபடி, ஏழெட்டு பேர் அந்தக் காட்சியை கைகளில் மதுக்கிண்ணங்களுடன் ஜொள்ளு விட்டு இரசித்துக் கொண்டிருக்க, நான்கு தடியன்கள் காவலாய் நின்று கொண்டு அவன்களும் அதை இரசித்துக் கொண்டிருந்தனர்,

இவர்கள் நுழைந்ததை யாரும் கவனிக்க வில்லை.

சேகர் துப்பாக்கியை உயர்த்தியவண்ணம்

"ஹாண்ட்ஸ் அப்.. ம்ம் எவ்ரி பொடி"

சேகர் போட்ட அதிரடி கட்டளையில் காட்சியில் இருந்து சுதாகரித்த ரசிகப் பெருமக்களும் தடியன்களும், நிலை குலைந்து போனார்கள். சோதி கதவுக்குப் பக்கத்தில் நின்றான். அவன் எதிர் பார்த்தது போல் வரிசையாக நுழைந்த மூன்று தடியன்கள் சோதியின் அதிரடி வெட்டுக்களை கழுத்துக்களில் வாங்கி சரிந்தார்கள்.

சேகர் சோதியின் காதில் ஏதோ சொல்ல சோதி விரைந்து அந்த ரூமுக்குள் மூலை முடுக்கு எல்லாம் பார்த்து விட்டு அங்குள்ள எல்லோரிடமிருந்தும் போன்களை சேகரித்தான். அங்கிருந்த துணி ஒன்றில் அனைத்தையும் போட்டு கட்டி எடுத்துக் கொண்டு

இருவரும் வெளியில் வந்து அந்த அறையை வெளியில் பூட்டி விட்டு,
இடது பக்க கொரி டோருக்குள் நடந்து முதலாவது ரூமைத் திறந்தார்கள். ஒரு ஆஸ்பத்திரி வாட் போல் இருந்தது.
அடுத்த ரூமைத் திறக்க அது ஒரு பார் போல் இருந்தது. அங்கு இரு பணியாட்கள் யூனிபோர்மில் காணப்பட்டனர், இவர்களை துப்பாக்கியுடன் பார்த்ததும் அரண்டு போனார்கள்.
இருவரையும் சேகர் அருகில் அழைத்தார்.
"வேறு யார் இங்கு உங்களைத் தவிர?"
"நாங்க மட்டும் தான் சேர்"
"சரி வாங்க எங்களோடு"
அடுத்த ரூமுக்குப் போனார்கள்
ரூம் பூட்டி இருந்தது.
"ரூம் ஏன் பூட்டி இருக்கு?"
"சேர் உள்ளே அக்காக்கள் தங்கச்சிமார் பத்து பேர் இருக்கிறார்கள்"
"பூட்டைத்திறக்க சாவி எங்கே?"
"அது பொஸ்ஸோட பொக்கட்டில் இருக்கும்"
"பொஸ் எங்கே?"
"அதோ அந்தப்பக்கம் முன்றாவது ரூமுக்குள் இருக்கார்"
சோதி, அதைக் கேட்டு 'ஓ அவரா..'என்று விட்டு
"சரி ஒரு முள்ளுக்கரண்டி ரெண்டு கொண்டு வா?"
அவன் ரெண்டாவது ரூமைத் திறந்து எடுத்து வந்தான். சோதி அதை வாங்கி அவற்றைக் கொண்டு. நிமிடத்தில் அந்த பூட்டைத் திறந்தான்.

*கதவைத் திறந்து உள்ளே போன இருவரும் அதிர்ந்து போனார்கள். பத்து பேர் இளம் பெண்கள் மிக அழகுடன், ஆனால் அனைவரும் உலகை மறந்த நிலையில் போதையில்.*
*இருவருக்கும் கண்கள் கலங்கின.*
*நாத்தழுதழுக்க, "பாவிகள். இப்படி கொடுமை செய்றாங்களே"*
*அடுத்த நிமிடம் இருவருக்கும் கோபம்தான் பீறிட்டது மனத்தில். ரூமை சாத்தி விட்டு, அந்த பையன்களிடம்*
*"நீங்க ஏன் இங்கேயே இருந்து இந்த கொடுமைகளைப் பார்த்துக்கொண்டு ஏன் போலிஸில் சொல்லவில்லை?"*
*"நாங்க வெளியவே போகமுடியாது சேர். ஒரு ஹோட்டலில் வேலை செய்து கொண்டிருந்த எங்களைக் கடத்தி இங்கு கொண்டு வந்து விட்டான்கள். இங்கே சகலவேலைகளையும் செய்ய வேண்டும் எங்களை மாதிரி இன்னும் ஏழு பேர் இருக்காங்க சேர். எங்களுக்கு வரும் சம்பளத்தை அவனுங்க எங்கட வீட்டுக்கு அனுப்புவிடுவான்கள். நாங்க தப்ப நினைத்தால் எங்களையும் கொன்று, வீட்டு ஆட்களையும் கொன்னு விடுவான்கள் சேர்"*
*"ஓ அப்படியா பயப்படாதீங்க எங்கே இருக்காங்க மற்ற பசங்க"*
*"அவன்களை பக்கது பில்டிங்கில் சமையல் போன்ற வேலைகளுக்காக வெச்சிருக்காங்க"*
*"எவ்வளவு காலம் இங்கே உங்களை வெச்சிருக்காங்க?"*
*"ரெண்டு வருஷம் என்று நினைக்கிறோம் சேர்"*
*"சரி இந்த பெண்களை யார் கடத்திவருவார்கள்"*

“இந்த தடி பொஸ்ஸுக்கு நிறைய ஏஜண்டு மாதிரி இருக்காங்க. அவனுக கொண்டு வருவானுவ”
அப்போ வாசல் கதவைத் திறந்து இன்ஸ்பெக்டர் வேணிலான் திமு திமு வென தன்னுடைய ஃபோர்ஸுடன் உள்ளே நுழைந்தார். அப்போ கிருஷ்ணாவும் கூட வந்தான்.
“வேணிலான்.. நாங்க இங்க இருக்கம். நீங்க உடனே ஆம்புலன்ஸ் வரவழையுங்க. பத்து பெண்கள் போதை மயக்கத்தில் இருக்காங்க”
“என்ன பத்து பேரா?”
“வாங்க” ரூமைத் திறந்து காட்டினார். உள்ளே பார்த்த வேணிலான் உறைந்து போனார் சுதாகரித்துக் கொண்டே, வெளியே வந்து..
ஆம்புலன்ஸ்கள் நாலை வரச் சொன்னார்.
“வாங்க வேணிலான் இன்னும் திருவிழா இருக்கு உங்க ஃபோர்ஸையும் வந்து நிறைய பேரை அரெஸ்ட்பண்ணச் சொல்லுங்க” என்று சொல்லிக் கொண்டே முதல் கொரிடோர் ரெண்டாவது ரூமைத் திறந்தார். உள்ளிருந்து வெளியே ஓடி வந்த அனைவரையும் கைது பண்ணச் சொன்னார் வேணிலான்.
அப்புறம் மூன்றாவது ரூமைத் திறந்து போனார்கள். சோதியிடம் இடிவாங்கியவர்கள் இன்னும் எழுந்திருக்க வில்லை.
மேசையில் மயக்கத்தில் இருந்து விழித்த தாரிணி அரண்டு போய் அழுது கொண்டிருந்தாள்.
சேகரும் சோதியும் அவளருகில் சென்று

“பயப்படாதே தாரிணி கடவுள் அருளால் உனக்கு ஒன்றும் ஆபத்து இல்லை”

“உன் அப்பாவும் நம்ம இன்ஸ்பெக்டர் பாதுகாப்பில் இருக்கார் போகும்போது அவரையும் அழைத்துப் போகலாம்”

வேணிலான் கூப்பிட்டார் சோதியை.

“மிஸ்டர் சோதி உங்க கை வரிசையா?”

“ஓம் சேர்”

“இப்போ இவனுகளை எப்படி எழுப்புறது?”

“ஒன்னும் பிரச்சினை இல்லை இதோ வருகிறேன்”

சோதி குண்டனின் கழுத்தில் எதோ நரம்புப் பகுதியை இரண்டு விரல்களால் சுண்டி விட்டான். அதுபோல் நேசனின் கழுத்தில் செய்தான்.

அது போலவே வாசலில் இருந்த இரண்டு பேருக்கும், இரண்டாம் அறையில் நுழைந்து அடி வாங்கிய மூவருக்கும் செய்து விட,

அடிவாங்கிய ஏழு பேரும் ஏதோ தூக்கத்தில் இருந்து விழித்தவர்கள் போல் விழித்து சுற்றிவர போலீஸ் தம்மைச் சுற்றி நிற்பதைக் கண்டு அரண்டு கொண்டு எழுந்தனர்.

வேணிலான், சேகர் , கிருஷ்ணா மூவரும் ஆச்சரியத்துடன் பார்த்து திகைத்தனர்,

அப்போது சேகரின் போன் ஒலிக்க எடுத்துப் பார்த்தார், எஸ்.பி.!

“ஹலோ சேர் குட் ஈவினிங் சேர்”

“ ......................”

“ஒகே சேர்” .. என்ற சேகர் போனை ஸ்பீக்கரில் வைத்தார்.

“வெல்டன்.வெல்டன். கொங்ராஜுலேஷன்ஸ், சேகர் சோதி கிருஷ்ணா. ஓல் சோ டு மிஸ்டர் வேணிலான்”.
“தாங்க் யூ சேர்”– நால்வரும் ஒரே நேரம் நன்றி கூறினர்.
சோதி எலைட்ரோனுக்குள் நுழைவது தொடக்கம் இப்போ வரை வீடியோவில் தான் எனக்கு எல்லாம் லைவ் வீடியோ காட்டினார். தாங்யூ சோதி”
“நொட் அட் ஆல் சேர் எல்லாம் உங்கட வெல் ப்ளான் படிதான் சேர்”
“அப்புறம் மிஸ்டர் சேகர் எல்லோரையும் வேணிலானிடம் ஒப்படைத்து டீடெயில் ரிப்போர்ட் கொடுத்துட்டு, நேசனை இங்கே அனுப்ப ஏற்பாடு செய்து விட்டு வாங்க”
“அப்புறம் கொழும்பில் அமலநாதனையும் அவனோடு சேர்ந்த இன்னொரு குருப்பையும் அரெஸ்ட் பண்ணியாச்சு”
“உங்கள் அனைவரையும் வரவேற்க காத்திருக்கோம்”
“தாங்க்யூ வெரி மச் சேர்”
“ஓகே பை..”
எல்லாரையும் அரெஸ்ட் பண்ணியாச்சு,
பெண்களை பாதுகாப்பாக ஆம்புலன்ஸில் அனுப்பி வைத்தார் வேணிலான்.
பையன்கள் அனைவரும் எலைட்ரோன் கம்பனியில் இருந்து விடுவிக்கப் பட்டு அவரவர் பெற்றோர்களுக்கும் அறிவிக்கப் பட்டது.
கம்பனி வாசலில் ஏராளமான ஊடகங்கள் சோதி கிருஷ்ணா சேகர் வேணிலான் அனைவரையும் கவர்பண்ண ஆரம்பித்தார்கள். சேகர் சோதியின்

சாகசங்களை உற்சாகமாக சொல்லி இந்த ஒப்ரேஷன் வெற்றி பெற மன்னார் எஸ்.பி ஞானமித்திராவின் திட்டங்களினால் தான் இவ்வளவு கொடூரமானவர்களை சுற்றி வளைத்துப் பிடிக்க முடிந்தது என்றும் சொன்னார்.

இரவு ஒன்பது மணி பாரதிதாசனையும் தாரிணியையும் அவர்கள் வீட்டில் இறக்கி விட்டு, சேகர், கிருஷ்ணா, சோதி மூவரும் பயணித்தனர் மன்னாரை நோக்கி.

இரண்டு நாட்கள் கழித்து, மன்னார் பொது நூலகத்தில் நடை பெற்ற பெரும் வரவேற்பு விழாவில் ஏராளமான பொதுமக்கள் கலந்து கொணடனர். எஸ்.பி ஞான மித்திராவுடன் இன்ஸ்பெக்டர் சேகரும் சோதியும் கிருஷ்ணாவும் மாலை மரியாதையுடன் மன்னார் அரச அதிபரால் வரவேற்கப் பட்டனர். தொடர்ந்து பாராட்டு வைபவமும் அரச அதிபர் விடுதியில் விருந்துபசாரமும் நடை பெற்றன.

ஓரிரு வாரங்கள் பத்திரிகைகளிலும் தொலைக்காட்சிகளிலும் இந்தப் பெண்கள் கடத்தல் சம்பவங்கள் மீட்கப்பட்ட தந்திரங்கள் என்பன செய்திகளாய் கதை கதைகளாக வந்த வண்ணமிருந்தன.

2019ம் ஆண்டு ..

ஜெயதாசன் வீட்டிலும், பரந்தாமன் வீட்டிலும், மார்க்கண்டு வீட்டிலும் பேரக்குழந்தைகளின் மழலைச் சிரிப்புகளும், செல்லம் கொஞ்சல்களுமாய் சந்தோஷம் நிலவ ஆரம்பித்தது.

பகைகளை வென்று சோதி கிருஷ்ணா குடும்பங்களுக்கு வாழ்க்கையில் வெற்றியும் வியாபார வளர்ச்சியும் தந்த

வைரவருக்கு அழகான கோயில் அமைக்கப் பட்டு ஒரு வருடத்தின் பின் வைகாசி மாத தேய்பிறை அஷ்டமியில் விமரிசையாக விழா நடை பெற்றுக்கொண்டிருந்தது.
***************************************************************

